

# கோலினாஸ்
## சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீம்
## இந்தியாவின் புன்னகை ராணியின் பற்பசை!

ஆம், அவள் தைரியமாகச் சிரிக்க முடியும். அவளுடைய பற்கள் பளபளக்கும் வெண்மையானவை. அவள் மூச்சில் மணம் கமழ்கின்றது. அவள் இந்தியாவின் புன்னகை ராணி—பல்லாயிரக்கணக்கான போட்டியிட்டவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவள். அவளுடைய புன்சிரிப்பின் அழகைக் கெடுக்கக்கூடிய சொத்தைப் பற்கள் அவளிடமில்லை. ஏனென்றால், மூன்று சுத்திகாரிகளையுடைய, சிறந்து நுரைத்து, பல்லிடுக்குகளிலிருந்துகொண்டு பற்சிதைவை ஏற்படுத்துவதற்குக் காரணமான கிருமிகளை விளைவிக்கும் ஆகாரத் துணுக்குகளை அறவே அகற்றக்கூடிய கோலினாஸ் சூப்பர் ஒயிட் பற்பசையை அவள் உபயோகிக்கிறாள்.

கோலினாஸ் சூப்பர் ஒயிட் டெண்டல் க்ரீமை உபயோகியுங்கள் — இந்தியாவின் புன்னகை ராணியின் பற்பசை இதுவே! பற்சிதைவை அறவே ஒழிக்கவும், உங்கள் மூச்சில் நறுமணங்கமழவும், உங்களுக்கு வெண்மையான, பளபளக்கும் பற்களை அளிக்கும் பற்பசை இதுதான்.

உங்கள் பல் டாக்டர் கூறுவார்— வேறெந்தப் பற்பசையும் உங்களுக்கு இதைவிட அதிகத் திருப்தியை அளிக்காது.



பிலவ, ஆவணி 11

# கல்கி

ஆகஸ்டு 27, 1961



## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| நாகரி லிபியும் தமிழும் (தலையங்கம்) | ... | ... 5 |
| நேருஜியும் ஆட்சிமொழியும் | ... | ... 6 |
| சர்க்கார் தொழில்களும் தேர்தல் நிதியும் | ... | ... 7 |
| நல்லுறவு ஏற்படுமா? | ரஜனி | ... 11 |
| நரசிம்ம நாயகரும் தோற்றார் | சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் | ... 12 |
| அன்பே ஆரமுதே | தி. ஜானகிராமன் | ... 16 |
| நரி வேட்டை | ஜெயந்தி - விஜு | ... 26 |
| நாவல் பிறக்கிறது | தி. ஜானகிராமன் | ... 30 |
| கோக தினம் | அ. நடராஜன் | ... 35 |
| திருமூலர் தவமொழி | ராஜாஜி - சோமு | ... 40 |
| அஞ்சறைப் பெட்டி | ... | ... 43 |
| புது வெள்ளம் | அகிலன் | ... 47 |
| வெள்ளிப் பனிமலை வீதியிலே | என். வி. அனந்தராமன் | ... 55 |
| மணிபல்லவம் | நா. பார்த்தசாரதி | ... 58 |
| தெய்வத்தின் குறுக்கே.... | கே. வெங்கடராமன் | ... 67 |
| மன்னார்கோயில் வேதநாராயணன் | பாஸ்கரத் தொண்டைமான் | ... 75 |
| பிட்டுத் தோப்பு | பொன்முடி | ... 80 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தரமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்றால், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

## புகையிலையின் வரலாறு... 10

Panama

20

CIGARETTES

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 710 TM

Greens' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 4

# நாகரி லிபியும் தமிழும்

நாட்டில் ஒற்றுமையை வளர்ப்பதற்கான வழிவகைகளை யோசிக்க வேண்டிய மந்திரிகள், இருக்கும் கொஞ்சநஞ்ச ஒற்றுமையையும் குலைப்பதற்குரிய யோசனையைத் தெரிவித்துவிட்டுக் கலைந்திருக்கிறார்கள். நாகரி லிபியில், அரசியல் நிர்ணயச் சட்டம் ஒப்புக் கொண்டுள்ள மொழிகள் அத்தனையும் எழுதப்பட வேண்டுமாம்.

மொழியைப் போல் லிபியும் மக்களின் உடலோடும் உணர்ச்சியோடும் ஒட்டிய விஷயமல்லவா? லிபி விஷயத்தை வைத்துத்தானே பஞ்சாபில் இவ்வளவு பெரும் கிளர்ச்சியும் போராட்டமும் நடந்து வருகின்றன? பயங்கர அடக்குமுறைகளையும் எதிர்த்து, உயிரைத் திருணமாக மதித்துப் போராடுகின்றனர்? சீக்கியரின் பெரும் தலைவரான மாஸ்டர் தாராசிங் எழுபத்தேழு வயதைக் கடந்த நிலையில் உண்ணாவிரதம் இருக்கிறார். இவையெல்லாம் நடைபெற்று வரும்போதே, இவற்றால் அடைய வேண்டிய பாடத்தை உணராது, தேசத்தின் மற்றப் பகுதிகளிலும் கசப்பு ஏற்படுத்தக்கூடிய யோசனை எப்படி வெளியிடப்பட்டது, அங்கீகரிக்கப்பட்டது என்பது விந்தையாக இருக்கிறது.

மற்ற ராஜ்ய மக்கள் எப்படியேனும் இருக்கட்டும். தமிழ் நாட்டில் இந்த யோசனை ஒரு கணத்துக்காயினும் எடுபடுமா? தமிழ் எவ்வளவு பழமையும் பெருமையும் வாய்ந்த மொழி? வடமொழிக்கு இணையான இலக்கியச் செல்வம் பெற்று இன்னும் உயிர்த்துடிப்புடன் வாழுவது கன்னித் தமிழ் அல்லவா? இப்படிப்பட்ட மொழிக்கே உரியதாகிய அழகான லிபி தமிழ் லிபி. இந்தத் தமிழ் எழுத்தை எந்தத் தமிழராயினும் இழக்கத் துணிவாரா? நாகரி லிபியில் தமிழின் பழைய நூல்களை எழுத முடியுமா? எழுதினால்தான் ஒப்புக் கொள்வோமா? புது நூல்களை நாகரியில் எழுதினால் தமிழ் மூளை வேலை செய்யுமா? இது நடக்கும் காரியமா?

சமீபத்தில் ஒரு மலையாளக் கவிஞருக்குச் சென்னையில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் தலைமை வகித்த நாமக்கல் கவிஞர், தமிழின் உயர்வையே மிகைபடப் பேசித் தமிழினின்று மலையாளம் வந்தது என்ற தொனியை உண்டாக்கி விட்டார். இதில் உண்மையிருக்கலாம். ஆனால் கூடியிருந்த மலையாளிகளுக்கு மனக் கசப்பையுண்டாக்கும் போலிருந்தது. இக்கசப்பைப் போக்கவே அவருக்குப் பின் பேசிய ராஜாஜி, மலையாளிகள் தங்கள் லிபியைத் தமிழுக்குக் கொடுக்கலாம் என்று வேடிக்கையாகச் சொன்னார். இப்படி ராஜாஜி சொல்ல நேர்ந்த சூழ்நிலையை விடுத்து, விஷயம் மட்டும் பத்திரிகைகளில் வெளியாகி யிருந்தது. தமிழ் நாட்டில் இச்செய்தி உடனே வேண்டிய கண்டனங்களையும் தேடித் தந்தது.

இதையெல்லாம் பார்த்துமே, டில்லிக்குச் செல்லும் தமிழ் நாட்டு மந்திரிகள், தமிழ் மக்களின் உள்ளத்தைப் பிரதிபலிக்காமல், வடநாட்டு மந்திரிகள் சொல்லுவதற்கெல்லாம் கையைத் தூக்கிவிட்டு வருவது தமிழர்கள் செய்த துரதிருஷ்டம் என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு காலத்தில் காங்கிரஸ் மேலிடத்தார் தமிழ் நாட்டின் அபிப்பிராயத்துக்குப் புறம்பாக ஒரு முடிவு எடுக்கத் தயங்குவார்கள். இன்று அந்நிலையெல்லாம் மாறி, அவர்கள் என்ன சொன்னாலும் சரி சரி என்று தலையாட்டிவிட்டு வருவதே முறையாகப் போய்விட்டது.

நாட்டில் ஒற்றுமையை வளர்க்க வேண்டும் என்றால், மக்களுடைய மனங்கள் ஒன்றுபட வேண்டும். மக்களுடைய மனங்களை அன்பும் நியாய உணர்ச்சியும்தான் இணைத்து வைக்கும். காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையில் ஒரே மொழி பேசுவதாலோ,

ஒரே மாதிரி உடைகள் அணிவதாலோ, ஒரே மாதிரி சிகையும் தாடியும் வைத்துக் கொள்வதாலோ ஒற்றுமை ஏற்பட்டு விடாது. இவை யெல்லாம் உள்ளம் ஒன்றுபட்டால் ஏற்படும் புறத் தோற்றங்கள். உள்ளம் ஒன்றுபட வேண்டுமானுல் அது ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து, உணர்ச்சிகளை மதித்துப் பழகுவதினுலும், நிர்வாகம் நடத்துவதனுலும்தான் ஏற்பட முடியும்.

சமஸ்கிருதம் ஒவ்வொரு பிரதேசத்தில் ஒவ்வொரு லிபியில் எழுதப்பட்டு வந்தது. வங்காளத்தில் வங்காள லிபியில் எழுதப்பட்டு வந்தது. தமிழ் நாட்டில் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டு வந்தது. ஆந்திர நாட்டில் தெலுங்கு லிபியில் எழுதப்பட்டு வந்தது. நாகரி லிபியைப் புகுத்தும் யோசனையினுல் மக்களிடையே கசப்பு வளர்ந்து விரோத பாவம் வளர்வதற்கு வழியுண்டாகும். மேலும் வேகமாக எழுதுவதற்கோ, அச்சிடுவதற்கோ, டைப் அடிப்பதற்கோ வசதியுள்ள லிபி என்றும் அதைச் சொல்லுவதற்கு இடமில்லை.

தெலுங்கு லிபியும், கன்னட லிபியும் நூற்றுக்குத் தொண்ணூறுசதம் ஒருமைப்பாடுள்ளவை. தெலுங்கு படிக்கத் தெரிந்தவர்கள், கன்னடப் புத்தகத்தை எளிதில் வாசித்துவிடலாம். அப்படியே கன்னடம் படிக்கத் தெரிந்தவர்கள் தெலுங்குப் புத்தகத்தை வாசித்துவிடலாம். இருப்பினும் இவர்களில் யாரும் தங்கள் லிபியை விட்டுக் கொடுக்கத் தயாரில்லை. ஆகவே லிபியை வைத்து ஒற்றுமையை நிலைநாட்டி விடலாம் என்கிற காங்கிரஸ் திட்டம் வெறும் பகற் கனவேயாகும்.

# நேருஜியும் ஆட்சிமொழியும்

நேருஜி, ஹிந்தி பேசாத மக்கள் விரும்பும் வரை ஆங்கிலமே நடைமுறையிலிருக்கும் என்றும் அவர்கள் மீது ஹிந்தி திணிக்கப்படமாட்டாது என்றும் மீண்டும் வாக்களித்திருக்கிறுர். மத்திய சர்க்கார் பரீட்சைகளுக்கு ஹிந்தி ஞானம் வற்புறுத்தப்படமாட்டாது என்றும் இனிக்கப்பேசியிருக்கிறுர். கல்கத்தா நகரப் பிரமுகர்கள் சிலர் இவ்விஷயமாகத் தம்மைப் பேட்டி கண்டபோதுதான் மேற்கண்டவாறு பேசி யிருக்கிறுர்.

நேருஜி அவர்கள் காங்கிரஸ் கட்சியைப் பலம் பெறச் செய்வதில் சாமர்த்தியசாலி. ஆனுல் நிர்வாகத்தில் தம்முடைய அபிப்பிராயத்தை அமுலுக்குக் கொண்டு வருவதில் அவருடைய சாமர்த்தியம் மிகக் குறைவு. இதுவே அவருக்கும் காலஞ்சென்ற சர்தார் பட்டேல் அவர்களுக்கும் உள்ள வித்தியாசம்.

பிரதமர் நேரு, ஆட்சிமொழி சம்பந்தமாகக் கொடுக்கும் வாக்குறுதிகள் காற்றில் பறக்க விடப்படுகின்றன. மத்திய சர்க்காரின் உள்துறை இலாகாவில், 1965 க்குள் ஹிந்தி புகுத்தப்பட வேண்டும் என்பதற்காகப் பெரு முயற்சிகளும் நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. இவை நாட்டில் ஒற்றுமையை விரும்பும் மக்களைக் கூட வெறுப்புக் கொள்ளச் செய்யும் அளவுக்குக் கொண்டு போய்விடும் என்பதைக் கல்கத்தாவிலுள்ள தேசிய மொழிகளின் வளர்ச்சிக் கழகத்தார் பிரதமருக்கு எடுத்துக் கூறியிருக்கிறுர்கள்.

சென்ற வாரம் நடைபெற்ற ராஜ்ய முதன் மந்திரிகள் கூட்டத்தில் பல ராஜ்யங்களைச் சேர்ந்த முதன் மந்திரிகள், கல்லூரிகளில் போதனுமொழி ஆங்கிலமாக இருக்கவேண்டும், மாற்றம் செய்யக்கூடாது என்று சொன்னதாகப் பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கிறது. ஆனுல் இந்த யோசனைக்கு அனைவரும் 'ஹிந்தி கற்றுக்கொள்ளும் வரையில்' என்ற நிபந்தனையும் வரம்பும் சேர்த்துச் சொன்னதாகச் செய்தியில் காணப்படுகிறது. இந்த நிபந்தனையை வைத்துக் கொண்டு அமுலும் வரையில் நிலைமை சீர்ப்படாது. கல்லூரி போதனு மொழி இந்தியா முழுவதிலும் ஒன்ருக இருக்கவேண்டும். அது ஹிந்தி என்ருல் கல்லூரிப் படிப்பு சூன்யமாகும். தைரியமாகவும் நியாயமாகவும் யோசனை செய்து கல்லூரிகளில் போதனு மொழி ஆங்கிலமாக இருக்க வேண்டும் என்று தீர்மானித்தால்தான் எல்லாப் பிரதேசங்களிலும் படிக்கும் மாணவர்களுக்குப் பாரத நாட்டில் எந்த இடத்திலும் சேவை செய்யச் சந்தர்ப்பம் கிடைக்கும். இல்லாவிட்டால் தமிழர் தமிழ் நாட்டிலும், கன்னடியர் கன்னட நாட்டிலும், இதே மாதிரி தனித்தனியாக இந்தியா பிளவுபட்டு, அங்கங்கே படிப்புப்பெற்றவர்கள் அங்கங்கே இருந்து தீரவேண்டியதாகும். இதனுல்தான் எல்லாக் கல்லூரி வைஸ் சான்ஸலர்களும் ஆங்கிலமே போதனு மொழியாக இருக்க வேண்டுமென்று பன்முறை வற்புறுத்தியிருக்கிறுர்கள்.

மத்திய ஆட்சிமொழி ஆங்கிலமாகத்தான் இருக்கும் என்பதாக அரசியல் நிர்ணயச் சட்டத்தைத் திருத்துவது தவிர, மற்ற யோசனைகள் எல்லாம் தவறே.

விஷயங்களை அவரவர் தாய்மொழியில் கற்றுக் கொள்வதில் தவறில்லை. ஆனால் உயர்தரக் கல்லூரிப் படிப்பின் தேவைகள் வேறு. உயர்தரப் படிப்புக்கு வேண்டிய புஸ்தகங்களும் போதனை மொழியும் ஆங்கிலமாகவே இருக்க வேண்டும். போதனை முறையில் வேண்டிய அளவுக்குத் தாய் மொழியைக் கலந்து சொல்லிக் கொடுப்பதில் தவறில்லை. ஆனால் ஆங்கிலத்தை விடலாகாது.

நிர்வாகம் ஆங்கிலத்தில்தான் இருக்கும் என்று செய்து விட்டால், விஷய ஞானமும் ஆங்கில ஞானமும் உயர்தரமான முறையில் மாணவர்கள் நன்கு பெறுவார்கள். நாட்டின் ஒற்றுமையும் காப்பாற்றப் படும். அறிவு விருத்தியும் ஏற்படும்.

## சர்க்கார் தொழில்களும் தேர்தல் நிதியும்

சர்க்கார் நிர்வாகத்திலுள்ள தொழிற் கூடங்கள், பொது மக்களின் வரிப் பணத்திலிருந்து தோற்றுவிக்கப்பட்டவையாகும். வரிப் பணம் என்னும்போது, காங்கிரஸ் கட்சியினிடம் அனுதாபம் கொண்டவர்களின் வரிப்பணமும் அதில் சேரும், காங்கிரஸ் கட்சிக்கு விரோதிகளின் வரிப் பணமும் சேரும். தற்போதுள்ள மறைமுக வரிகளை நினைவில் வைத்தால் எல்லாருமே வரி செலுத்துகிறார்கள் என்பது விளங்கும். ஆகவே, சர்க்கார் நிர்வாக யந்திரம் எப்படிக் கட்சிச் சார்பு அற்றதோ, அப்படியே சர்க்கார் நடத்தும் தொழிற் கூடங்களும் கட்சிச் சார்பு அற்றவையாக இயங்க வேண்டும்.

ஆந்திர ராஜ்யத்தில், சர்க்கார் உடைமையில் இயங்கும் சில தொழிற் கூடங்கள், காங்கிரஸ் கட்சியின் தேர்தல் நிதிக்குப் பணம் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. ஆந்திர சர்க்காரின் சட்ட திட்டங்களே, இத்தகைய ஸ்தாபனங்கள் அரசியல் கட்சிகளுக்கு நிதி உதவி செய்யக் கூடாது என்று தடுக்கின்றன. இருப்பினும், அவ் விதிகள் அலட்சியப் படுத்தப்பட்டிருக்கின்றன.

மேலிடத்துச் செல்வாக்குப் பெற்ற காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் யாராகிலும் தலையிட்டதனால் இப்படி நேர்ந்திருக்கிறதா, அல்லது நிர்வாகிகளே இதற்குப் பொறுப்பா என்பது தெரியவில்லை.

கம்பெனிகளிடமிருந்து தேர்தல் நிதி வசூலிப்பது பற்றி மக்கள் சபையில் சட்டம் வந்தபோது, இப்படி சர்க்கார் ஸ்தாபனங்கள் துர்உபயோகப்படுத்த இடமாகும் என்று திரு மஸானி எச்சரிக்கை செய்தார். அப்படி நடக்காமல் பார்த்துக் கொள்வதாக, அப்பொழுது

## சுதந்திர நிதி

(15-7-61 முதல் 19-8-61 வரை)

| | | |
|---|---|---|
| என். ஏ. பி. கிருஷ்ண ஆள்வார் | 5 | 00 |
| என். செல்லப்பய்யர் | 2 | 00 |
| காந்தி ஆசிரம ஊழியர்கள் | 40 | 00 |
| வெ. வெ. வீரப்ப செட்டியார் | 32 | 00 |
| ஸ்ரீமதி ஜானகி கல்யாணராமன் | 2 | 00 |
| சத்தி ச. ந. தர்மலிங்கம் | 1 | 00 |
| கோவை அன்பர் | 10 | 00 |
| ஸ்ரீமதி மங்களத்தம்மாள் | 26 | 00 |
| பி. என். ரங்கசாமி ஐயங்கார் | 25 | 00 |
| பம்பாய் நாதன் | 1 | 00 |
| ஸ்ரீமதி பி. வி. ஜானகி | 10 | 00 |
| கே. பி. ஸ்ரீனிவாசன் | 5 | 00 |
| 31-7-61ல் ரஸிக ரஞ்சனி சபை மண்டபத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் அன்பர்கள் தந்த காணிக்கை ... | 147 | 85 |
| எஸ். ஆனந்தன் | 1 | 00 |
| ஆர். கோதண்டராமன் | 10 | 00 |
| ஒரு நூரல் டிஸ்பென்சரி வைத்தியர் | 5 | 00 |
| பி. கே. கிருஷ்ணமூர்த்தி | 5 | 65 |
| ஆர். கிருஷ்ண பகதூர் | 5 | 00 |
| டாக்டர் பி.வி. முத்துகிருஷ்ண அய்யர் | 2 | 00 |
| டாக்டர் வி. கிருஷ்ணமூர்த்தி | 2 | 00 |
| எம். அழகர்சாமி | 2 | 00 |
| வி. பி. எஸ். சுந்தரம் | 10 | 00 |
| டாக்டர் கே. ராமச்சந்திரன் | 10 | 00 |
| கே. விசுவேசுவரன் | 25 | 00 |
| கே. ஆர். நாராயணன் | 2 | 00 |
| சௌ. சாரநாயகி கிருஷ்ணசாமி | 5 | 00 |
| டாக்டர் ஸ்ரீ ஹரி | 38 | 00 |
| பி. பி. எஸ். அய்யர் | 10 | 00 |
| கே. சீனிவாசன் | 2 | 10 |
| கே. வி. | 2 | 00 |
| வி. கல்யாணம் | 100 | 00 |
| கௌண்டின்யா | 1000 | 00 |
| வி. பி. கிருஷ்ணஸ்வாமி | 21 | 00 |
| ராஜாஜி பாதன் | 1 | 00 |
| எம். என். ஆர். ராவ் | 5 | 00 |
| டாக்டர் ரகுராமன் | 10 | 00 |
| எஸ். எஸ். நாராயணன் | 1 | 00 |
| எஸ். ஆர். ராஜு | 10 | 00 |
| 10-1-61 முதல் 14-7-61 முடிய | 6180 | 55 |
| ரூ. | 7772 | 15 |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி c/o கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

தொழில் வர்த்தக மந்திரியாக இருந்த திரு லால்பகதூர் சாஸ்திரி உறுதியளித்தார். இந்த ஆந்திர விவகாரம், இம் மசோதா சட்டசபையில் வருமுன்பே நிகழ்ந்து விட்டது என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம். இப்படிச் செய்யக்கூடாது என்று ஆந்திர ராஜ்ய சர்க்காரின் விதிகள் தடுத்தும் இது நடைபெற்றிருக்கிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

# என்ன சேதி ?

## ராஜாஜியின் சுற்றுப் பிரயாணம்

இம்மாதம் 28ந் தேதியிலிருந்து ஒரு வார காலம் ராஜாஜி ராமநாதபுரம் ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். முன்பு ராஜாஜியின் உடல் நலக் குறைவின் காரணமாக ஒத்தி வைக்கப்பட்ட இப் பிரயாணம் இப்போது நடைபெறுகிறது.

## நாகோகி கைது

பஞ்சாப் சுதந்திரக் கட்சியின் தலைவர் உத்தம் சிங் நாகோகி கைது செய்யப்பட்டார் என்று செய்தி வெளியாகியிருக்கிறது. தலைவர் உத்தம் சிங் நாகோகி அவர்கள், பஞ்சாபில் எல்லா வகுப்பு மக்களின் அன்பையும் மதிப்பையும் பெற்றவர். எதையும் நடுநிலையில் நின்று சீர் தூக்கி ஆராயும் பண்பு பெற்றவர். கட்டுக்கடங்காமல் பாயும் மக்கள் உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி வைக்கும் ஆற்றல் பெற்றவர். அப்படிப்பட்டவரை இந்தச் சமயத்தில் கைது செய்ததானது, பஞ்சாப் சர்க்காரின் அநாகரிகத் தன்மையை எடுத்துக் காட்டுகிறது.

## செய்தியும் தீர்மானமும்

சென்ற வாரம், தமிழ் 'நாட்டுக் காங்கிரஸ் கட்சியை ஆதரிக்கும் ஒரு பத்திரிகை உண்மைக்குப் புறம்பாக எப்படிச் செய்தியைப் பிரசுரிக்கிறது என்பதை விளக்கும் வகையில் ஒரு கடிதத்தை வெளியிட்டிருந்தோம். அதில் கண்ட விஷயங்களை ஊர்ஜிதம்செய்து சிவகங்கை வக்கீல் சங்கம் ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றி யனுப்பி யிருக்கிறது.

## டென்னிஸ் கிருஷ்ணனின் வெற்றி

திரு கிருஷ்ணன் வெற்றிக்கு மேல் வெற்றி பெற்றுப் பாரத நாட்டின் பெருமையை உயர்த்தி வருகிறார்.

ஹாலந்தில் நடைபெற்ற அகில உலக டென்னிஸ் போட்டியில் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் முல்லிகனை இறுதியாட்டத்தில் வென்றார். மேலும் ஆஸ்டெண்டில் நடைபெற்ற மற்றொரு சர்வதேச டென்னிஸ் பந்தயத்தில் ஹெவிட்டைத் தோல்வியுறச் செய்து புகழ்மாலை சூட்டிக் கொண்டிருக்கிறார். இங்கிலாந்தில் விம்பிள்டனில் நடைபெற்ற அரை-பைனல் ஆட்டத்தில் லாவரோடு திரு கிருஷ்ணன் ஆடி வெற்றி பெறாதது உண்மை. அதன் பிறகு மேலே குறிப்பிட்ட வெற்றிகளைக் கிருஷ்ணன் ஒன்றன் பின் ஒன்றாகப் பெற்று உயர்ந்து விட்டார்.



நீங்கள் அறிய மகிழ்ச்சியடைவீர்கள்...

## 2 புதிய

# நேஷனல் எக்கோ

## ரேடியோக்கள்

**உங்களுக்கு இணையிலா இசை இன்பத்தை அளிக்கும்**

இதோ இரு தேர்ந்தியான புதிய ரேடியோக்கள் ... நேஷனல்-எக்கோவினால் மிகச் சிறந்த முறையில் தயாரிக்கப்பட்ட இந்த ரேடியோக்கள் உங்களுக்கு இனிய இசை விருந்தளிக்கும் ... ஒன்று மின்சார சக்தியால் இயங்குகிறது, மற்றொன்று பாட்டரியினால் இயங்குகிறது. இவ்விரண்டும் அழகான வினியர் காபினெட்கள் கொண்டவை ... ஹை-பை லௌட் ஸ்பீக்கர்களும், கவர்ச்சியான டயல்களும் கூடியவை ... தொனியை தத்ருபமாக அளிப்பவை! மேலும் இவைகள் முற்றிலும் மான்ஸூனைஸ் செய்யப்பட்டவை!

இன்றே உங்கள் அருகாமையிலுள்ள நேஷனல்-எக்கோ ரேடியோ டீலரிடம் இவைகளை இலவசமாக இயக்கிக் காண்பிக்கச் சொல்லுங்கள்!



### மாடல் U-755:

ஏஸி/டிஸி மின்சார சக்தி கொண்டு இயங்குகிறது. 6-வால்வுகள், 8 பாண்டுகள். டோன் கன்ட்ரோல். விலை ரூ. 351.00. எக்ஸைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி

### மாடல் B-755:

பாட்டரியினும் இயங்குகிறது. 6 வால்வுகள், 8 பாண்டுகள். டோன் கன்ட்ரோல். பாட்டரி மிகக் குறைவாக செலவாகிறது. விலை: ரூ. 351.00. எக்ஸைஸ் ட்யூடி உள்பட; வரிகள் தனி



நேஷனல்-எக்கோ
ரேடியோக்கள் சிறந்தவை—
அவைகள் மான்ஸூனைஸ்
செய்யப்பட்டவை!



**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் லிமிடெட்**

பம்பாய் • கல்கத்தா • மதராஸ் • டில்லி
பாட்னா • பெங்களூர் • ஸெகந்திராபாத்

GRA-2259/II

உங்கள்
டார்ச்சில்
எஸ்ட்ரெலா
பொருத்தி
இரவில்






எஸ்ட்ரெலா

பிளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்

# நல்லுறவு ஏற்படுமா?

கொழும்பு, ஆகஸ்டு, 15உ

இலங்கைத் தோட்டங்களில் பன்னெடுங் காலமாக வேலைசெய்து வரும் தொழிலாளரின் பல்லாயிரக் கணக்கான வயது வந்த குழந்தைகள் வேலையில்லாமல் இருக்கிறார்கள். தோட்டங்களில் ஏற்கனவே வேலையிலுள்ளவர்களுக்கே போதிய வேலைகள் இல்லையென்று சொல்லி வாரம் நான்கு நாட்களுக்குத் தான் வேலை கொடுக்கப்படுகிறதென்பது பொதுவான புகார். இந்த நான்கு நாள் சம்பளத்தைக் கொண்டு தோட்டத் தொழிலாளி தன்னையும் தனது குடும்பத்தையும் வேலையில்லாமல் இருக்கும் வயது வந்த குழந்தைகளையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. வேலையற்ற தோட்டத் தொழிலாளரின் வயது வந்த குழந்தைகள் தோட்டத்தை விட்டுச் சென்று நகரப் புறங்களில் வேலை பார்க்கலாமென்றால் அவர்கள் இலங்கையர்களல்ல வென்பது குறுக்கே பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிறது. இந்த நிலைமையில் இங்குள்ள ரப்பர், தேயிலைத் தோட்டங்களுக்குப் பெரிய தலைவலியைக் கொடுத்து வரும் பிரச்னை பல்லாயிரக் கணக்கானவர்கள் வேலையில்லாமலிருக்கையில் அவர்களை என்ன செய்வது என்பது தானே தவிர வேலைக்கு இலங்கையிலோ அல்லது இந்தியாவிலோ ஆள் பிடிப்பதில்லை. உண்மையில் இது சம்பந்தமாகக் காங்கிரஸ் ஏற்கனவே பல ஆண்டுகளாகக் கிளர்ச்சி செய்து வருகிறது. நிலைமை இப்படியிருக்கையில் இலங்கைத் தோட்ட முதலாளிமார்கள் இந்தியாவில் ஆள் பிடிப்பதாயும் அதுதான் சட்ட விரோதக் குடியேற்றத்துக்கு முக்கிய காரணமென்றும் சென்னை ராஜ்ய அரசாங்கம் கூறுவதாயின் இத்தகைய அரசாங்கத்திடமிருந்து இலங்கை இந்தியர்கள் என்ன உதவியை எதிர்பார்க்க முடியும்? விஷயம் புரியாவிடில் அவர்கள் தங்களது திருவாயை மூடிக் கொண்டாவது இருந்திருக்கலாம்.

## வரி, வரி, ஒரே வரி மயம்

இப்பொழுது இலங்கை மக்கள் அனைவரது கவனத்தையும் கவர்ந்திருப்பது நிதி மந்திரியின் புதிய வரிவிதிப்பு முறையும் அதை யொட்டி வாழ்க்கைச் செலவு தினந்தோறும் மளமளவென்று ஏறிக் கொண்டிருப்பதும் தான். கடுமையான புதிய வரிவிதிப்பு யோசனைகளுக்குப் பலத்த எதிர்ப்பு உருவாகிக் கொண்டிருக்கிறது. அரசாங்கத்தை இது வரையில் ஆதரித்து வந்த இடது சாரிக் கட்சிகளான கம்யூனிஸ்ட் கட்சியும் சம சமாஜக் கட்சியும்கூடப் புதிய வரிவிதிப்பைப் பலமாக எதிர்க்கின்றன. யார் எதிர்த்த போழுதிலும் அரசாங்கக் கட்சிக்குப் பார்லிமென்டில் அமோகமான மெஜாரிட்டியிருப்பதினால் வரவு செலவுத் திட்டம் நிறைவேறி விடுவது என்னவோ நிச்சயம். ஆனால் வரிவிதிப்பு நடுத்தர வகுப்பினரை எவ்வளவு கடுமையாகப் பாதிக்குமென்பதற்கு ஒரே ஒரு உதாரணத்தைச் சுட்டிக் காட்டுவது பயனுள்ளதாக இருக்கும். ஒருவருக்கு மாதம் சுமார் 375 ரூபாய் வருமானம் இருப்பதாக வைத்துக் கொண்டால் முதலில் அவருடைய சம்பளத்திலிருந்து ஒவ்வொரு மாதமும் 4 சத விகிதம் அதாவது பதினைந்து ரூபாய் தேசிய அபிவிருத்தி வரிக்காகச் சம்பளம் கொடுக்கும் போதே கழித்துக் கொள்ளப்பட்டு விடும். பிராவிடண்ட் நிதிக்காக இன்னொரு பதினைந்து ரூபாய் சம்பளம் கொடுக்கும் போதே கழிக்கப்படும். ஆக முப்பது ரூபாய் போகவே சம்பளம் கிடைக்கும். வருடக் கடைசியில் வருமான வரியும் வருமான வரித்தொகையில் 15 சதவிகித உபரி வரியும் செலுத்த வேண்டும். இவை தவிர வீட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் வருடத்துக்கு ரூ. 24 வீதம் அரிசி ரேஷன் வரி செலுத்த வேண்டும். இவ்வளவு வரிகளும் நடுத்தர வகுப்பாருக்குத் திடீரென்று இப்பொழுது ஏக காலத்தில் ஏற்படுபவை. இத்துடன் சீனி, மாவு சிகரெட், தீப்பெட்டி முதலியவைகளுடைய விலைகளும் அதிகரிக்கப்பட்டிருக்கின்றன. புளி, காப்பிக் கொட்டை, சர்க்கரை முதலான அநேகம் உணவுப் பொருள்களின் இறக்குமதிகள் முற்றாகத் தடை செய்யப்பட்டுள்ளபடியினால் அவற்றின் விலைகள் விஷம்போல் ஏறியிருக்கின்றன. பவுண்ட் 45 நயா பைசாவாக இருந்த புளி இன்று இரண்டு ரூபாயாக இருக்கிறது. இரண்டு ரூபாய் கொடுத்தாலும் நல்ல புளி கிடைப்பதில்லை. இவ்விதம் வரிப் பளு அதிகரித்து அதே சமயம் வாழ்க்கைச் செலவும் திடீரென்று ஒன்றுக்குப் பத்தாக அதிகரித்திருப்பது பெரும் துன்பத்தை உண்டு பண்ணியுள்ளது. இந்தச் சந்தர்ப்பத்தில் கொள்ளை லாபமடிக்கும் வர்த்தகர்களைக் கடுமையான தண்டனைக்கு உட்படுத்தப் போவதாகப் பிரதம மந்திரி அறிவித்திருக்கிறார். பொதுவாக நாட்டு நிலைமை மிகவும் திருப்தியற்றதாக இருக்கிறது. உற்பத்திப் பெருக்கமே விலைவாசிகள் குறையச் சரியான வழியென்பதை உணர்ந்து வெங்காயம், மிளகு, பருப்பு முதலியவற்றின் உற்பத்தியைப் பெருக்கத் தீவிர நடவடிக்கை எடுக்கப் போவதாக அரசாங்கம் அறிவித்திருக்கிறது.

## இலங்கை - இந்தியா பேச்சு

இங்குள்ள இந்திய வம்சாவழியினர்களின் பிரஜாவுரிமைப் பிரச்னையைத் தீர்க்க இலங்கை இந்திய அரசாங்கங்களுக் கிடையில் விரைவில் பேச்சுகள் ஆரம்பமாகுமென்று கூறப்படுகிறது. இதற்குப் பூர்வாங்கப் பேச்சுகள் நடத்துவதற்காக டில்லியிலிருக்கும் இலங்கைத் தூதுவர் ஸர் ரிச்சர்ட் அலுவிஹார கொழும்புக்கு வந்திருக்கிறார். அவர் டில்லிக்குப் போனதும் இரு தேச அரசாங்கங்களும் பேச்சு நடத்த உருவான நடவடிக்கைகள் எடுக்கப்படுமாம்.

— ரஜனி

# நரசிம்ம நாயகரும் தோற்றார்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"உமக்குக் கொஞ்சங்கூடப் புத்தி இல்லை. இந்த இருநூறு வோட்டுக்களுக்கு ஆயிரம் ரூபாய் செலவழித்தீரே. ஒவ்வொருவருக்கு இரண்டு ரூபாய்க்கு மேல் தரவேண்டாம் என்று நான் கண்டிப்பாய்ச் சொல்லியிருந்தேனே? உம்மை யார் ஐந்தைந்து ரூபாய் கொடுக்கச் சொன்னது? உம்முடைய மடத்தனத்துக்கு நான் என்ன சொல்வது? இந்தச் சேரியாட்கள் இரண்டு ரூபாய்க்குச் சந்தோஷமாக வோட் செய்திருப்பார்கள்."

"இல்லை, சாமி! தயவுசெய்து கேளுங்கள்" என்று சொல்லப் போன சாமி செட்டியாரைக் கோபப் பார்வையால் பேச்சைத் தடுத்து, ஆபீஸ் அறையை விட்டுத் தனபாலராயர் வீட்டுக்குள்ளே சென்று விட்டார்.

சாமி செட்டியார் வெட்கப்பட்டுக் கொண்டு தம் வீட்டுக்குப் போக வெளியேறினார்.

தனபால ராயர் முகத்தில் தோன்றிய வருத்தத்தை அவர் மனைவியார் கண்டார். "இந்தப் பாழும் தேர்தலில் ஏன் புகுந்தீர்கள்? நாம் இதற்கு முன் சந்தோஷமாக இருந்தோம். இந்தச் சனியன் வந்து உங்களைப் பிடித்துக் கொண்டபின் நீங்கள் எப்போதும் கோபமாகவே இருக்கிறீர்கள்" என்றாள் பங்கஜம்மை.

ராயருடைய உள்ளத்தில் பிரவேசித்து எரிந்து கொண்டிருந்த நெருப்பின் அளவு, ஐயோ பாவம், பங்கஜம்மாள் எப்படி அறிவாள்? தேர்தலின் ஆகர்ஷண சக்தியோ, வேகமோ ஸ்திரீகள் எப்படி உணர்வார்கள்? வீட்டு விஷயங்களில் உள்ளத்தை சர்வஸ்வமாக ஈடுபடுத்தும் ஸ்திரீகளுக்கு இந்தத் தேர்தல் போர்களின் லாப நஷ்டங்களும், வைரங்களும், சங்கடங்களும் எவ்வாறு விளங்கும்?

ஆட்டத்துக்கு ஓர் அணு பந்தயமாயினும் சீட்டு ஆடும் பெருமக்கள் அதில் எவ்வளவு மனோராகத்தை, ஆசையைச் செலுத்தி வருத்தமும், கோபமும் அடைகிறார்கள்! தேர்தல் போட்டி அந்தச் சீட்டாட்டத்தைவிட மிகப் பெரிதல்லவா? மனிதனுக்குள் குடியிருக்கும் பிசாசு படிப்பில்லாத இந்த ஸ்திரீகளுக்குத் தெரிய மாட்டாது.

• • •

தேர்தல் முடிந்தது. தனபால ராயர் தோற்றார். எதிர்க்கட்சிக்காரர் குறைந்த செலவில் மிக சாமர்த்தியமாகப் பணத்தைச் செலவழித்து ஜெயித்துவிட்டார். அவருக்குத் தம்முடைய ஜாதியாரின் ஆதரவு அதிகம். அந்தத் தொகுதியில் அந்த ஜாதியார் அதிகம்.

"இந்த மோசக்காரர்களுக்குப் பணம் கொடுத்தது வியர்த்தம். பணத்தையும் வாங்கிக் கொண்டு தங்கள் இனத்தானுக்கே வோட்டுப் போட்டார்கள். இந்த ஜாதி அபிமானத்தை ஒழித்தால் தான் ஜனநாயகம் மிஞ்சும்" என்றார் தனபால ராயரின் முக்கிய ஏஜண்டு கோமதியாப்பிள்ளை.

"அந்த நரசிம்ம நாயக்கர் ஒரு மூட்டை ரவிக்கைத் துண்டுகள் விநியோகித்து வோட்டு சம்பாதித்தாராமே, இது நிசமா?" என்றார் தனபாலராயர்.

"அதுவும்தான் செய்தார். அவருக்கும் ஐம்பதினாயிரம் ரூபாய்ச் செலவு" என்றார் கோமதியாப் பிள்ளை.

"அதில் நமக்கென்ன திருப்தி, கோமதி? நானும் ஒரு லக்ஷம் செலவழித்தேன். இதை ஏதேனும் வியாபாரத்தில் போட்டிருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்" என்றார் ராயர், தலையைக் கைமேல் சாய்த்து வைத்து உட்கார்ந்தவர்.

"அந்த ரவிக்கைத் துண்டுகள் விநியோகம் செய்ததற்குச் சாட்சிகள்



இருக்கிறார்கள். ஏன் நாம் ஒரு ஆட்சேபனை விண்ணப்பம் போடக் கூடாது?" என்றார் கோமதியாப்பிள்ளை.

"கோமதி! இப்போது ஆன செலவும் அவமானமும் போதும்.. ஆட்சேபனை விண்ணப்பம் போட்டு என்ன பலன்? காங்கிரஸ் சர்க்கார் கோர்ட்டிலும் கூட அவனுக்கு அனுகூலமாகவே தீர்ப்புக் கொடுக்கச் செய்வார்கள்" என்றார் தனபால ராயர்.

"இல்லை, இல்லை. கோர்ட்டில் நியாயம் கிடைக்கும்" என்றார் கோமதியாப் பிள்ளை.

* * *

ஆட்சேபனை விண்ணப்பம் தாக்கல் செய்யப்பட்டது. இரு கட்சிகளிலும் தேர்தல் செலவுக் கணக்கு விதிப்படி சமர்ப்பித்தார்கள். ராயர் கொடுத்த கணக்கு ரூ.6500 எதிர்க் கட்சிக்காரர் ரூ.7300க்குக் கணக்கு சமர்ப்பித்தார், ஊர் எல்லாம் அறிந்த விஷயம் சுமார் லக்ஷம் ரூபாய் வரையிலும் ஒவ்வொரு பக்கத்திலும் செலவு என்று. ஆனால் அது வெல்லாம் கணக்கில் இல்லை.



எட்டு மாதங்கள் கழித்துத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. தேர்தல் முடிவு காயம் என்று.

* * *

தனபால ராயர் மேடையில் பிரசங்கம் செய்ய ஆரம்பித்தார். எப்படியாவது இந்த ஜாதிப் பித்து ஒழிந்தால் தான் தேசம் முன்னேறும் என்று பலமாகப் பிரசாரம் செய்தார். எதிர்க் கட்சி நரசிம்ம நாயகரும் லஞ்சங்களை ஒழித்தால்தான் ஜனநாயகம் நிலைபெறும் என்று தீவிரப் பிரசாரம் சட்டசபையில் பேசியும் மேடைப் பிரசங்கங்களும் செய்து வந்தார்.

"இந்தத் தேர்தல் பைத்தியம் ஒழிந் தால்தான் குடும்பங்கள் பிழைக்கும்" என்று இரு பக்கத்து மனைவிமார்களும் பெண் கூட்டங்களில் ரகசியமாகப் பேசி வந்தார்கள். அவர்களுக்கு மேடை இல்லை. சுப காரியங்களுக்குக் கூடும் போது பேசுவதே அவர்கள் பிரசாரம்.

* * *

கீரை விற்கிறவள் வருவாள், பக்கத்து கிராமத்திலிருந்து. அவளுடன் அரை மணி ஓரியாடுவாள் இனமும் தனபாலராயரின் மனைவி, விலையைப் பற்றி. முடிவில் பங்கஜம்மாள் வெற்றி பெறுவாள். அவள் அடையும் மகிழ்ச்சி தேர்தல் வெற்றியிலும்கூட உண்டாகாது. புருஷன் ஒரு லக்ஷம் இழந்தது அவ்வளவு பெரியதல்ல. ஒன்றரை பணம் வியாபாரத்தில் தான் வெற்றி யடைந்தது அவளுக்குப் பெரியதாகத் தோன்றும். கீரைக்காரி ஊருக்குத் திரும்பும்போது இந்தப் பணக்காரம்மாமார்களின் லோபத்தைதயெண்ணி எண்ணித் திட்டிக் கொண்டு போவாள். கீரைக்காரி வன்னியகுலம். அவள் ஏன் நரசிம்மநாயகருக்கு வோட்டுப் போட மாட்டாள்?

* * *

தனபாலராயருக்கு வயது நாற்பது. அவர் தகப்பனார் வயோதிகர். காலில் ஊனம். வெளியே நடக்க மாட்டார்.



"எங்கள் காலத்திலும் தேர்தல்கள் நடக்கும். லஞ்சம் என்ற பேச்சே அப்போது கிடையாது" என்பார் கிழவர்.

"ஆமாம், அப்போது தேர்தலில் ஜெயித்தாலும் தோற்றாலும் ஒன்றே. ஒரு அதிகாரமும் இல்லை, ஒரு லாபமும் இல்லை. இப்போது ஜெயித்தால் ஐந்து வருஷங்களுக்குள் ஐந்து லக்ஷம் பண்ணலாமே, சாமர்த்தியம் இருந்தால்" என்றார் தனபால ராயர்.

"இதுவா ஜனநாயகம்?" என்றார் கிழவர்.

"உங்களுடைய காலம் வேறு. நம் காலம் வேறு."

"என்ன வித்தியாசம்? இப்போது வில்லாளிகள் அதிகம், அவ்வளவு தானே?" என்றார் கிழவர்.

"அப்போது அந்நியராஜாங்கம். இப்போது ஸோஷலிஸம்" என்றார் தனபால ராயர், காங்கிரஸ் கவர்ன்மெண்டின் பேரில் கோபமாக.

"அதுவென்ன? ஸோஷலிஸம் என்பது என்ன?" என்றார் கிழவர்.

"அதுவெல்லாம் உங்களுக்கு விளங்காது. யார் எந்தக் காரியம் செய்வதாயிருந்தாலும், என்ன வியாபாரம் எடுத்துக் கொள்வதாயிருந்தாலும் கச்சேரியில் போய்த் தொங்க வேண்டும். ஒரு சட்டசபை அங்கத்தினர் ஸிபாரிசும் வேண்டும். அதுதான் சோஷலிஸம்."



"போதுமப்பா, போதும்! இது பராதீனமா? சுயராஜ்யமா? நாமெல்லாரும் மன்னர் என்று யாரோ பாடினாராமே! நாம் எல்லாரும் தாஸர், ஸமதாஸர் என்றல்லவோ பாட வேண்டியிருக்கிறது?"

* * *

"என்ன நரசிம்ம நாயகரே? ஏன் முகம் வாடியிருக்கிறது?"

"வாடாமல் என்ன? இந்தத் துரோகிகளை நம்பி நான் ஐம்பதினாயிரம் ரூபாய் விரயம் செய்தேன். ஏமாற்றி விட்டார்கள்."

வக்கீல் கிருஷ்ணய்யங்கார் நாயகருக்கு மிக்க நெருங்கிய சிநேகம்.

"நான் வேண்டாம் என்று முதலிலேயே சொன்னேன். நீர் கேட்கவில்லை" என்றார் வக்கீல் கிருஷ்ணய்யங்கார்.

"ஆமாம்! அந்தப் பார்ப்பாரப் பயல் தனபால ராயருக்கு நீரும் பரிந்து பேசுகிறீர் என்று எண்ணினேன். உம்முடைய பேச்சைத் தள்ளினது தவறு. ஆனாலும் இந்தக் காளிங்கன் இப்படிச் செய்வான் என்று யார் எதிர்பார்த்தார்கள்!" என்றார் நரசிம்ம நாயகர்.

காளிங்க முதலியார் காங்கிரஸ் தலைவரும் முதல் மந்திரியும். நரசிம்ம நாயகர் இன்ஜினீர் இலாகா மந்திரி ஸ்தானம் எதிர்பார்த்தவர், ஏமாற்றமடைந்த பேச்சு இது.

* * *

"ராயரே, நரசிம்ம நாயகரும் தோற்றார். தெரியுமா உமக்கு விஷயம்?" என்றார் கோமதியாப் பிள்ளை சந்தோஷமாக.

"என்ன சமாசாரம்?" என்று கேட்டார் தனபால ராயர்.

"அவருக்கு மந்திரி பதவி கொடுக்க முடியாது என்று முதல் மந்திரி நிர்மாணமாகச் சொல்லி விட்டார்."

"அப்படியா? விநாயகருக்கு ஒரு தேங்காய் உடைக்கச் சொல்லும். அப்படித்தான் ஆகவேண்டும் அந்தப் பயலுக்கு" என்றார் தனபால ராயர்.

* * *

இப்படி அரசியல் உலகத்தின் ஆசைகளும் கோபதாபங்களும். பங்கஜம்மாள் கீரைக்காரியிடமும் பால்காரனிடமும் முனிஸிபல் தோட்டியிடமும் சண்டை பிடிப்பதை விடவில்லை. அது எப்போதும் போலவே நடந்து வந்தது.




















TVS

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் இருபத்தொன்று

அனந்தசாமி நினைத்ததை நிரூபித்துக் காட்டுவது போல், ரங்கன் உடை மாற்றிக்கொண்டு வந்திருந்தான் இப்பொழுது. கால் சட்டைக்குப் பதிலாகச் சன்ன ஜரிகை பார்டர் போட்ட துல்லிய வெள்ளையில் ஓர் எட்டு முழம். மேலே மடியாமல் துவண்டு விழுகிற ஒருவித வெண்பட்டில் தைத்த ஜிப்பா. காலையில் அவர் பார்த்த சிறுபிள்ளைத்தனம் எல்லாவற்றையும் அவன் கழற்றி வைத்து விட்டு வந்தாற் போலிருந்தது. ஆளே அப்படி மாறித் தோற்றமளித்தான். பத்து வயது அதிகமானாற் போல், பொறுப்பும் அடக்கமும் கூடுதலாக வந்து விட்டது போன்ற ஒரு தோற்றம்.

''வாருங்கள், ரொம்ப நேரம் ஆகி விட்டதாமே, நீங்கள் வந்து'' என்றார் அனந்தசாமி.

''நான் மூன்று மணிக்குத்தானே வருவதாகச் சொன்னேன். மூன்றுக்குள் வந்தது என் தப்புத்தானே?'' என்று மரியாதையாக எழுந்து கொண்டான் ரங்கன்.

''உட்காருங்கள்'' என்றார் அனந்தசாமி. உட்கார்ந்தான் அவன்.

''சாப்பாடாயிற்றா?'' என்று விசாரித்தான் ரங்கன்.

''இப்பொழுதுதான் சாப்பிட்டு முடித்தேன். அதென்ன, எனக்கு முன்னால் நீங்கள் கேட்டு விட்டீர்கள்?''

''எனக்கு இதோடு மூன்று வேளை ஆகி விட்டது. நல்ல வேளையாக முன்னால் வந்தேன். இந்தப் புத்தகத்தில் ஐம்பது பக்கம் வாசித்து விட்டேன். ரொம்ப அரிய அபூர்வமான புத்தகங்களெல்லாம் வைத்திருக்கிறீர்களே! இவையெல்லாம் இங்கே கிடைக்கிற புஸ்தகங்களாகவே தெரியவில்லையே?''

''பாதி இலங்கையில் வாங்கினவை. பாதி பர்மாவிலிருந்தும், ஜப்பானிலிருந்தும் என் சிநேகிதர் இரண்டு பேர்கள் அனுப்பியவை.''

''அங்கெல்லாம் கூட உங்களுக்குச் சிநேகிதர்கள் உண்டா?''

''ஆண்டிக்கு என்ன பஞ்சம் சிநேகிதத்துக்கு...?''

சிரித்துக் கொண்டே அவன் மீண்டும் எழுந்து புஸ்தக அலமாரி முன் நின்று நோட்டம் விட்டான். கம்பீரமான, அழகான அந்தத் தோற்றத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்த அனந்தசாமி, ''நீங்கள் இஷ்டப்பட்டதை எடுத்துக் கொண்டு போய் வாசிக்கலாம். நான் கொடுத்தால் கூட வாங்கிக் கொள்ள இங்கே ஆட்களில்லை'' என்றார்.

''நன்றி. எடுத்துப் போகிறேன். தாமதமாகும், திருப்பித் தர.''

''திருப்பித் தர வேண்டும் என்ற அவசியமே இல்லை.''

''நன்றாயிருக்கிறதே'' என்று மீண்டும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான் ரங்கன். சிறிது நேரம் மௌனம் நிலவியது.

''என்னை விட்டு விட்டு நேரே வீட்டுக்குப் போய் விட்டீர்களா?'' என்று ஆரம்பித்தார் அனந்தசாமி.

''இல்லையே. அவர்கள் வீட்டுக்குப் போயிருந்தேன்.''

''யார் வீட்டுக்கு?''

''ராஜாங்கமய்யர் வீட்டுக்குத்தான். இன்னும் நாலைந்து நாட்களில் லீவு முடிகிறது அவருக்கு. நல்ல புத்திமதி, எச்சரிக்கையெல்லாம் சொல்லி விட்டு வந்தேன்.''

''அவருக்கா?''

''எல்லாருக்கும்தான்.''

''எதுக்கு?''

தி. ஜானகிராமன்




''எதுக்கா? ஒழுங்காக இருக்கச் சொல்லித்தான்.''

''எனக்குப் புரியவில்லையே?''

''உங்களுக்கு அவர்களை எத்தனை நாட்களாகத் தெரியும்?''

''இந்த ராஜாங்கமய்யரை முப்பத்தைந்து வருஷங்களாகத் தெரியும்'' என்று பெயரை மீண்டும் சொல்லி மனத்தில் பதிவு செய்து கொண்டார் அனந்தசாமி.

''அப்படியா?''

''ஏன்?''

''முப்பத்தைந்து வருஷங்களாகத் தெரிந்தா இதை யெல்லாம் நீங்கள் அனுமதித்திருக்கிறீர்கள்?''

''விளக்கமாகச் சொல்லுங்கள்.''

''டொக்கி நேற்று ராத்திரி எங்கே போய்விட்டு வந்தானாம்?''

''படம் பிடிக்கிறார்களாம்! டான்ஸ் ஒத்திகையாம்.''

''அதற்குள் அம்பலத்துக்கு வந்தாயிற்று? இப்பொழுதுதானே சொல்லிக் கொள்கிறான் டான்ஸே அவன்? நீங்கள் அதை நம்புகிறீரா?''

''எனக்கென்ன தெரியும்? நம்பாமலிருக்க இதில் என்ன இருக்கிறது?''

''வாஸ்தவம். இந்தக் காலத்தில் தெற்கு வீதியில் ஜண்டை வரிசை கற்றுக் கொள்ளுகிறவர்கள் வடக்கு வீதியில் ஒரு 'ட்யூஷன்' வைத்துக் கொண்டு சரளி வரிசை சொல்லிக் கொடுக்க ஆரம்பித்து விடுகிறார்கள்...''

''வாத்தியாரா யிருப்பது ரொம்பச் சுலபம் எப்போதுமே.''

"டொக்கி அந்த மாதிரி செய்திருந்தாலும் பரவாயில்லையே."

"நீங்கள் விஷயத்தைச் சொல்லவே இவ்வளவு சிரமப்படுகிறீர்களே."

"சொல்லவே எனக்குச் சங்கோசமாக இருக்கிறது."

"ரகசியமாக இருந்தால் நான் கேட்க ஆசைப்படவில்லை."

"இது ரகசியமாகவே இருந்து புதைந்து விட வேண்டும் என்றுதான் உங்களிடம் ஓடி வந்தேன். நேற்று அவன் ஸ்டுடியோவுக்கும் போகவில்லை, ஒத்திகையும் பார்க்க வில்லை. பாண்டிச்சேரிக்குப் போயிருக்கிறாள், அருண் குமாரோடு. அவனைக்கூட உங்களுக்குத் தெரியும் போலிருக்கிறதே. நேற்றுப் பார்த்தேனே உங்களை, அவன் வீட்டில்."

"அவன் குழந்தைக்கு வைத்தியம் செய்கிறேன்."

"முதலில் அவனுக்கு வைத்தியம் செய்யுங்கள். இந்த மாதிரி தனியாக ஒரு பெண்ணை எதற்காக அவ்வளவு தூரம் அழைத்துப் போக வேண்டும்?"

இதைக் கேட்டதும் அனந்தசாமிக்கு இலேசாகச் சிரிப்பு வந்தது. சந்திராவின் நினைவு வந்தது. 'ரங்கன் பிரதர்' 'ரங்கன் பிரதர்' என்று காசியிடம் இடித்துப் பொருமிய சிவபாக்கியத்தின் நினைவு வந்தது. அவருக்கு உள்ளமெல்லாம் தத்தளித்தது. இந்த உலகத்தில் யார் நல்லவர்கள்? யார் கெட்டவர்கள்? கேட்டுக்கொண்டே பிரமித்தார் அவர். இந்த உலகத்தின் நகரங்களிலும், கிராமங்களிலும், மூலைமுடுக்குகளிலும், நீதி மன்றங்களிலும், கூட்டங்களிலும் உட்கார்ந்து நீதி வழங்குகிற மகான்களை யெல்லாம் நினைத்துப் பார்த்தார். 'எப்படி இந்த நீதிபதிகளுக்கு உண்மை புலப்படுகிறது?' என்று திகைத்தார். பகவான் ஏதாவது கண் ஜாடை காட்டி அதோ இருக்கிறது பார், அது தான் உண்மை என்று காட்டி விடுகிறாரா? எனக்கு மட்டும் ஒன்றுமே புரிய வில்லையே! இவன் இவ்வளவு கம்பீரமாக, இருதயத்தை எடுத்து முகத்தில் வைத்துக் கொண்டது போல் நிற்கிறானே என்று மயங்கினார். ஒரு கணம் கழித்து அவன் முகத்தில் தோன்றிய ஒட்டடையை விலக்குவது போல் மயக்கத்தை ஒதுக்கி விட்டு, "நீங்கள் என்ன எச்சரிக்கை செய்தீர்கள் ராஜாங்கம் அய்யர் வீட்டில்?" என்று சாதாரணமாகக் கேட்டார்.

"ஜாக்கிரதையாக இருங்கள். இத்தோடு இரண்டாவது தடவை ஆகிவிட்டது. இனிமேல் இப்படி அசட்டுத்தனம் போகாதீர்கள்" என்று சொன்னேன்.

"இரண்டாவது தடவை என்றால்?"

"பாண்டிச்சேரிக்கு இவளை அவன் அழைத்துச் சென்றது இரண்டாவது தடவை இது."

"ஓகோ."

"நீங்களும் அவர்களிடம் சொல்லி வையுங்கள். ஒருத்தருக்கு இரண்டு பேராகச் சொன்னால்தான் படும்—எனக்காகத் தயவுசெய்து சொல்லுங்கள்" என்று கெஞ்சினான் ரங்கன். அந்தக் குரலில் ஆழ்ந்த அன்பும் கோபமும் இரக்கமும் நடுங்குவதைக் கண்டு அவருக்கு ஏதோ தாக்கினாற் போலிருந்தது.

"நீங்கள்கூட அந்தப் பெண்ணை மகாபலிபுரம், தாராசுரத்துக் கெல்லாம் அழைத்துப் போனீர்கள், இல்லையா?" என்று அதே சூட்டில் கேட்டு விட்டார்.

அவன் அதற்காகக் கலங்கிவிடவில்லை.

"நான் அழைத்துப் போகிறதும், அவன் அழைத்துப் போகிறதும் ஒன்றாகி விடுமா?"

"வெவ்வேறு என்று நம்ப உங்களோடு நான் எத்தனை நாட்கள் பழகி விட்டேன், அப்படி! அவன் நேற்றிலிருந்து பழக்கம். நீங்கள் இன்றிலிருந்து பழக்கம்."

அனந்தசாமி இதை முக விகாரமில்லாமல் கோபமில்லாமல்தான் சொன்னார். அவன் மனம் சூடிமுத்தாற்போல் துடித்தது முகத்தில் தெரிந்தது. அவனைச் சமாதானப்படுத்த வேண்டும் என்று அவர் நெஞ்சு உடனே பரக்கத் தொடங்கியது. "நீங்கள் ஒன்றும் வித்தியாசமாக நினைக்காதீர்கள், இப்படிப் பட்டவர்த்தனமாகப் பேசுகிறேனே என்று. நீங்கள் நன்றாகப் படித்தவர் என்று தெரிகிறது. முக்காலே மூன்று வீசம் பேரிடத்தில் படிப்பின் பயன் அகம்பாவம் தான். உங்களைவிட நான் அறிவாளியாக இருந்தால், உங்களைவிட நான் உயர்ந்தவன் என்றுகூட நினைத்துக் கொண்டு விடுகிறேன். இதுதான் சகஜமாகப் பார்க்கக் கூடிய சேதி. இருந்தாலும் படிப்புக்கு ஒரு பலன் உண்டு. மனுஷனாக ஒருவனை வைத்திருக்கிற பலன் உண்டு என்று நம்பிக் கொண்டு உங்களை நம்புகிறேன். உங்களுக்கும் அவனுக்கும் வித்தியாசம் உண்டு என்று நம்புகிறேன்—தாற்காலிகமாக."

"பார்த்தீர்களா?" என்று தீனமாகக் குறுக்கிட்டான் ரங்கன்.

"பரவாயில்லை. தாற்காலிகமாக இருப்பதை நீங்கள் நிரந்தரமாக ஆக்கி விடுங்களேன்" என்று மேற்கசித்தார் அனந்தசாமி.

சந்திராவைப் பற்றிப் பேச வேண்டும் போல்தான் இருந்தது அவருக்கு. ஆனால் இன்று வேண்டாம் என்று அடக்கிக் கொண்டு விட்டார்.

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்குப் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய சேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருந்து, உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் சேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்...வசீகரமும்
தரும் மணமுடையது

PALMOLIVE
Lavender
TALC POWDER

**டீ லக்ஸ்**
17 மயக்கும் ஸெண்டு
களின் அற்புதக் கலவை

PALMOLIVE
Talcum Powder
DE LUXE

# பாமாலிவ்
டால்கம் பவுடர்

PT&S T.

''டொக்கி சாதாரணப் பெண் இல்லை. அழகோடு கூர்ந்த புத்தி இருக்கிறது. கலைகளில் அசாத்திய ருசி, திறமை இரண்டுமிருக்கின்றன. வீட்டுக் காரியத்திலும் தேர்ந்த பெண். கிராமத்தில் வாழ்ந்த பெண். வீட்டு வேலைகளிலும் துப்புரவாகப் பழக்கியிருக்கிறாள் தாயார். காப்பி, சமையல், வீடு பெருக்குவது எது செய்தாலும் நல்ல திறமையான கை செய்த மெருகும் மணமும் இருக்கும். இவளை ஒநாய்கள் பிடுங்கித் தின்பதை நான் எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடியும்? பகவானுகப் பார்த்து அவர்களுக்கு என்னைப் பழக்கம் பண்ணி வைத்தார் என்று தான் சொல்ல வேண்டும்.''

'' இல்லா விட்டால்.......'' என்று மேலும் தொடராமல் முடித்து விட்டான் அவன்.

''அந்த உணர்வு இருந்தால் போதும்'' என்றார் அனந்தசாமி. சற்றுக் கழித்து, ''உங்கள் சிநேகிதன் எப்படி?'' என்று கேட்டார்.

''யாரு. அருண்குமாரா?''

''ம்.''

''அவனை நன்றாக உள்ளும் புறமும் தெரிந்து கொண்டிருப்பதனால்தான் ஜாக்கிரதையாக இருக்கச் சொல்கிறேன். இந்த உலகத்தில் சற்றுப் பார்க்கும்படியான பொருட்களெல்லாம் தான் அனுபவிப்பதற்காகப் படைக்கப்பட்டிருப்பதாக அவன் மயங்கிக் கொண்டிருக்கிறான். படிப்புக் கிடையாது. புகழ், பணம் இரண்டும் எக்கச்சக்கமாகப் பெருகிக் கொண்டே இருக்கின்றன. சிறு வயசிலேயே நல்ல வாசனைகள் ஏறாத ஒருவன் வேறு எப்படி நினைக்க முடியும்?''

''ம்...'' என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே மொட்டை மாடிக்கப்பால் தெரிந்த சீமை வேப்ப மரத்தைப் பார்த்தார் அனந்தசாமி.

அப்படியே சிறிது நேரம் பார்த்துக் கொண்டேயிருந்தார். ஐந்து நிமிஷங்களாயிற்று. பத்து நிமிஷங்கள் ஆயிற்று. நேற்று சாயங்காலம் அந்த வேப்பங் கிளைகள், இலைகளுக்கு முன்னால் உட்கார்ந்துதான் அவன் பேசிக் கொண்டிருந்தான். ருக்மிணி...ருக்மிணி......

ருக்மிணி, சந்திரா, டொக்கி - எத்தனை இனுகப் பெண்கள்! ஆனால் ஒருவர் கூடப் பழைய நாள் பெண்களைப் போல் இல்லை. தானாகத் தங்களை ஆண்டு கொண்டு, பிறர் மீது ஆட்சி செய்ய நினைத்துக் கொண்டு..... அப்படியா? அப்படி நினைப்பதும் சரியில்லை. ஆனால் இவர்கள் வேறுபட்டவர்கள் - பழைய காலத்துப் பெண்கள் இல்லை.

பழையது, புதியது என்ன? பெண்மை - அவ்வளவுதான். நான் இங்கேயே இருப்பதாகத் தீர்மானித்து விட்டதாகச் சொன்னுளே, ருக்மிணி - ஏதோ வேத காலத்துப் பெண் மாதிரி இல்லை - காலக் கணக்கே இதில் ஏதுமில்லை......

''நான் வரட்டுமா?'' என்று எழுந்தான் ரங்கன். திடீரென்று அவர் பேச்சை நிறுத்திவிட்டு, யோசனையில் ஆழ்ந்ததும் முதலில் அவனுக்கு வியப்பாக இருந்தது. பிறகு அவருடைய இயல்பு அது என்று சமாதானப்படுத்திக் கொண்டான்.

''சரி, அடிக்கடி வந்து போய்க் கொண்டிருங்கள்'' என்றார் அனந்தசாமி. மாடிப் படி வரையில் கொண்டு விடுவதற்காகக் கூடவே சென்றார்.

அதே சமயம் 'சுவாமி', 'சுவாமி' என்று யாரோ கூப்பிட்டார்கள்.

'' யாரோ கூப்பிடுகிறார்கள் '' என்றான் ரங்கன்.

''நான்தான், சுவாமி'' என்றாள் மங்களப் பாட்டி. ''இருக்கிறீர்களா? யாரோ வந்திருக்கிறார்கள்.''

''வரச் சொல்லுங்கள்.''

ரங்கன் வருபவர் மேலே வரட்டும் என்று, படியிறங்காமல் சற்று நின்றான் அங்கேயே.

''வாருங்கள், வாருங்கள்!'' என்று ருக்மிணியை வரவேற்றார் அனந்தசாமி. ''எங்கே இந்த வெய்யிலில்?'' என்றார்.

''இப்பொழுது அவ்வளவு வெயிலாக இல்லையே. இறுக்கம்கூட அவ்வளவாக இல்லையே.''

ரங்கன் அவளைப் பார்த்துக்கொண்டே நின்றான். அவளுடைய நிறத்தையும், உயரத்தையும், களையையும்,உடையிலும் பேச்சிலும் மெருகாய்ப் படர்ந்திருந்த படிப்பையும் பண்பையும் பார்த்துக் கொண்டே நின்றான்.

''அப்ப நான் வரட்டுமா?'' என்றான் ரங்கன்.

''இவர் என் நண்பர் ரங்கசாமி'' என்றார் அனந்தசாமி.

பொருள் உற்பத்தி செய்பவர்களிடையே சுதந்திரப் போட்டி உணர்ச்சியை உண்டாக்கி விட்டால், பொது மக்கள்—அதாவது அப்பொருளை விலை கொடுத்து வாங்கி உபயோகிப்பவர்கள்—அவர்களில் யார் தகுதி வாய்ந்தவர்கள் என்று தீர்மானிப்பார்கள். அந்த உரிமை அவர்களுக்குத் தான் உண்டு. பதவியிலிருந்து கொண்டு, பர்மிட்டுகளையும் லைசென்சுகளையும் விற்கும் கோஷ்டிக்கல்ல.

—ராஜாஜி

''நமஸ்காரம்.''

''இவர் ருக்மிணி டில்லியில் கல்லூரியில் பேராசிரியையாக இருக்கிறார்.''

''ஓகோ, நமஸ்காரம்.''

''இப்பொழுது இவர் லீவுக்கு வந்திருக்கிறார்.''

''அப்படியா? எந்தக் கல்லூரியில்?''

ருக்மிணி கல்லூரியின் பெயரைச் சொன்னாள்.

''அப்படியா?'' என்று விடைபெற்றுக் கொண்டான் ரங்கன்.

அனந்தசாமி ருக்மிணியிடம், ''உட்காருங்கள்'' என்றார் உள்ளே வந்து நாற்காலியைக் காட்டி.

''என்னைத் டில்லிக்குத்தான் அனுப்புவீர்கள் போலிருக்கிறது'' என்றாள் ருக்மிணி.

''—''

''நான் இங்கே வந்து விடப் போவதாக நேற்று சொன்னேனே.''

''அதனால் என்ன இப்ப? இங்கு வரும் வரையில் டில்லிக் கல்லூரி பேராசிரியைதானே?''

''நான் இங்கு வந்து விட்டேன் என்றே சொல்லலாம். சுப்புசாமி மாமா யார் யாரையோ பார்த்துவிட்டு வந்தாராம். மூன்று கல்லூரிகளில் இடமிருக்கிறதாம். இரண்டு நிச்சயமாகக் கிடைத்து விடும்.''

''பேஷ். சுப்புசாமி நினைத்தால் ஆகாததா? புகை புகாத இடங்களில் புகுந்து சாதிக்கிறவர் ஆயிற்றே! சிரத்தை விழ வேண்டும் அவருக்கு. விழுந்து விட்டால் அந்தக் காரியம் கைகூடிவிட்டாற் போலத்தான்.''

''வாஸ்தவம்தான். சில காரியங்களை அவர் மனத்தில் போட்டுக் கொள்ளத்தான் இல்லை. இல்லாவிட்டால் சந்திரா இன்னும் சந்தோஷமாயிருந்திருப்பாள்.''

''எனக்குக் கூட அதைப் பற்றிக் கொஞ்சம் தெரியும்.''

''கொஞ்சம் என்ன, நேற்று நாகம்மா தான் உங்களிடம் எல்லாவற்றையும் சொல்லிக் கொண்டிருந்தாளே.''

''ஆமாம். எனக்குக்கூட வருத்தம் தான். ஆனால் இன்றுதானே ரங்கனோடு பேசப் பழக்கம் ஏற்பட்டது எனக்கு. நீங்கள்தான் பார்த்தீர்களே, இப்பொழுது.''

''யார், இவரா அவர்?''

''ஆமாம்.''

''இப்பொழுது போனாரே, நீங்கள் அறிமுகப் படுத்தினீர்களே.''

''அவனேதான்.''

''ரங்கனா?''

''என்ன இவ்வளவு ஆச்சரியம்!''

''இவனைப் பற்றியா இவ்வளவு தப்பாகப் பேசினாள் நாகம்மாள்!''

நாகம்மாள் சொன்னதெல்லாம் இப்பொழுது அவளுக்கு அதிர்ச்சியைத் தருவது போலிருந்தது.

''என்ன தப்பாகப் பேசினாள் நாகம்மாள்!'' என்றார் அனந்தசாமி.

''முறை தப்பி, கண்ணுபின்னுவென்று யார் யாரோடோ சுற்றுகிறான், அப்படி இப்படி என்றாளே! இவரா அது?''

அனந்தசாமி நிமிர்ந்தார்.

''தோற்றத்தைப் பார்த்து விட்டு எதைச் சொல்ல முடியும்?'' என்றார் அனந்தசாமி.

''எந்தத் தோற்றத்தைப் பார்த்து?''

''நீங்கள் இப்பொழுது பார்த்தது. நாகம்மாள் பார்த்தது. நான் காலையில் அவனைப் பார்த்தது...''

''நீங்கள் எப்படிப் பார்த்தீர்கள், காலையில்...?''

விவரமாகச் சொல்ல ஆரம்பித்தார் அனந்தசாமி. (தொடரும்)

அட்டைப்பட விளக்கம்

## வாழ்வார்க்கு உரை

தலைவன் பிரிந்து செல்லப் போகிறான். தேர் அலங்கரிக்கப் பெற்று நிற்கிறது. பாகனும் செலுத்துவதற்கு அவசரப்பட்டுக் கொண்டு காத்திருக்கிறான். வீட்டு வாயிலில் இருந்து விரைவதற்குக் குதிரைகள் திமிறுகின்றன.

பிரிந்து போவதற்கு முன் தன் காதல் மனையாளிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக நிமிர்கிறான் தலைவன். அவன் வாயிலிருந்து என்ன வார்த்தைகள் வெளிவரப் போகின்றன என்பதை முன்பே புரிந்து கொண்டவளாக நின்றுகொண்டிருந்த தலைவி சிரித்துக் கொண்டே அவனையும் முந்திக் கொண்டு கேட்கிறாள்.

''பிரிந்து போவதைத் தவிர வேறு ஏதாவது செய்தி இருந்தால் சொல்லுங்கள். ஏனென்றால் அது எனக்கு முன்பே தெரியும். 'பிரிவது மீண்டும் வருவதற்காகவே' என்று நீங்கள் சாமர்த்தியமாகச் சொல்லி என்னை ஏமாற்ற முயற்சி செய்யலாம். ஆனால் நீங்கள் வருகிறவரை பொறுத்து உயிர் வாழ்கிறவர்கள் யாரோ அவர்களிடத்தில் போய் அதைச் சொல்லுங்கள்''—இப்படிக் கூறித் துயரச் சிரிப்புடன் அவனை ஏறிட்டுப் பார்க்கிறாள் அவள்.

இந்த அழகிய காதற் காட்சியைத் திருக்குறள் இன்பத்துப் பாலில் காண்கிறோம்.

செல்லாமை உண்டேல் எனக்குரை — மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

# வட்ட மேஜை



## அறப்பணியாற்றும் பத்திரிகை

நாட்டு மக்களுக்கு நல்லதொரு பணியை நல்ல முறையில் நடத்தி வரும் நல்ல பத்திரிகை கல்கி என்றால் மிகையாகாது. அதிலும் சென்ற சில காலமாக ராஜாஜி அவர்களின் அறப் பணியிலே உறுதுணையாக இருந்து வருகிறது தங்கள் பத்திரிகை. தர்மத்தின் அடிப்படையில் தகுந்த தருணத் தில் தகுந்த தலைவரால் ஆரம்பிக்கப்பட்டுள்ள தகுந்த கட்சியான சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை அவ்வப்போது எடுத்துரைத்து வரும் "கல்கி"க்கு எனது வாழ்த்துக்கள்.

பம்பாய்—1
28—7—61

ஆர். ஆராவமுதன்

## கூட்டுப் பண்ணையும் நாட்டுப் பண்பும்

கூட்டுப் பண்ணை முறையை என்றை க்குமே நம் தமிழகம் ஒத்துக் கொண்டதில்லை என்பது நம் பண்டைய இலக்கியங்களிலிருந் தும், பலப்பல காலமாக வந்துள்ள பழமொழி களிலிருந்தும் தெற்றெனத் தெரிகிறது. தமிழ் மரபு பேணிக் காத்த கொள்கைதாம் சுதந் திரக் கட்சி நிலக் கொள்கை என்றே கூறலாம்.

'இனக் கூட்டானாலும் நிலக் கூட்டாகாது' என்கிறது ஒரு பழமொழி. அதாவது நமது பண்புக்கு அந்நியமானவர்களுடன் கூடி வாழ் வதைவிட நிலத்தில் கூட்டு உரிமை கொள்வது அபாயம் என்கிறது. இன்னொருவருடன் ஒன்றுக் குடியிருக்கும் அவதி முழுதும் பண்ணை முறையிலும் உண்டு என்பதைக் 'குடியிருந்து பார், கூட்டுப் பயிரிட்டுப் பார்' என்ற பழமொழி நகைச்சுவையுடன் ஒரு சவாலாகவே கூறுகிறது.

பல நில உரிமையாளர்கள் ஒன்றுசேர்ந்து பயிரிடுவதால் கவனக்கம் குன்றி, அதன் விளைவாக விளைச்சல் குறையும் என்று கருதிய தோடு மட்டுமின்றி, தொன்றுதொட்டே நம் தமிழ் நாட்டினர், நிலச் சொந்தக்காரரின் அக்கறைக்கு வேறெதுவும் ஈடாகாது என்று கண்டிருக்கின்றனர். தனது சொத்து என்ற அன்புடன் விவசாயி பராமரித்தால்தான் நிலத்தின் முழு வளமையையும் வெளிப்படுத் தும் என்று கண்டிருக்கிறது தமிழ்நாடு. இதையே ஒரு குறளாகத் தருகிறார் பொய்யா மொழிப் புலவர்.

செல்லான்கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடிவிடும்.

கணவன் கவனம் செலுத்தா விட்டால், மனைவி எப்படி அவனுக்கு அன்பைத் தராது விடுவாளோ, அதேபோல் உரிமையாளர் அக்கறை செலுத்தாது விட்டால் நிலமும் தனது விளைச்சலைத் தராது தரிசு பட்டுவிடும் என்கிறார் தெய்வப் புலவர். வாரத்துக்குப் பயிரை விடும்போதும் இந்தக் கவ னடுபாடும் அதை ஒட்டி மகசூலும் குன்றுவதையே காணலாம். 'தன் ஆள் இல்லாத வெள்ளா மையும், தான் உழாத நிலமும் தரிசு' என்ற பழமொழி இந்த உண்மையை எவ்வளவு அழகாகக் கூறுகிறது! நிலத்தை வைத்துப் பொது உண்மையைக் கூறும் பழந்தமிழ் உள்ளம் மனிதனை வைத்துப் பேசும் போது ஆத்திரமே அடைந்து விடுகிறது: 'கொண்டு வாரம் கொடுத்தவனும் உழுது வாரம் கொடுத்தவனும் கடைத்தேற மாட் டான்' என்று சொல்கிறது. 'வரப்பே தலை காணி; வைக்கோலே பஞ்சு மெத்தை' என்று வேளாண்மையும், 'வழுவற உழுதவன் வரில் பெரியவன்' என்று வேளாளரையும் போற்றிய தமிழ் இனத்துக்கு ஒவ்வாத முறை களைத்தான் இன்று இந்நாட்டில் இணிக்க முயற்சி நடைபெறுகிறது.

திருநெல்வேலி
31—7—61

ஏ. வி. சுப்பிரமணிய அய்யர்

## அக்கரைச் சீமை

"அக்கரைச் சீமையில் ஆறுமாதங்கள் திரு சோமுவின் கட்டுரையை மிக ஆவலுடன் படித்தவர்களில் நானும் ஒருவன். அவர் சென்று வந்த நாடுகளைப் போய்ப் பார்த்தால் எத்தனை மகிழ்ச்சி ஏற்படுமோ, அத்தனை

இன்பம் படிக்கும்போதே இருந்தது. இது வரையில் தமிழில் வெளிவந்த பிரயாணக் கட்டுரைத் தொடர்களில் முதலிடம் பெறுவது திரு சோமுவின் கட்டுரைத் தொடர்.

மைலாப்பூர் கே. வி. இராமகிருஷ்ணையன்
29—7—61

## கரையைப் பலப்படுத்துமா?

சமீபத்தில் தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் வெள்ளம் புகுந்து மிகுந்த சேதம் ஏற்படுத்திய பின்தான் நமது மாநில அரசாங்கத்தின் கண்களுக்குக் காவிரி, கொள்ளிடம் இவைகளின் உண்மை நிலை தெரிய வந்திருக்கிறது. கரைகளைப் பலப்படுத்த வேண்டிய அவசியத்தை உணர்ந்திருக்கிறது. 1924-ம் வருடம் மேட்டூர் நீர்த் தேக்கம் கட்டப்படாமலிருந்த பொழுது ஏற்பட்ட வெள்ளத்தை நினைத்தால் அது அவ்வளவு பயங்கரம் என்று சொல்லுவதற்கில்லை. இப்பொழுது மேட்டூர் அணை கட்டி அதிலிருந்து பல கால்வாய்களையும் வெட்டியிருக்கிறார்கள். அப்படியும் வெள்ளம் வந்து தஞ்சை, திருச்சி ஜில்லாக்களை மூழ்கடித்தது என்றால் ஆச்சரியந்தான். இதிலிருந்து பல வருடங்களாக நமது அரசாங்கம் காவிரி, கொள்ளிடம் முதலிய நதிகளைச் சரிவரப் பராமரிக்கவில்லை என்று தெரிகிறது. எவ்வளவு வெள்ளம் வந்தாலும் தாங்கக் கூடிய கொள்ளிடம் இன்று மேடிட்டு விட்டது. காவிரியும் மிகவும் குறுகிவிட்டது. கண்டிராக்டர்களின் லாபத்தை உத்தேசித்துக் காவிரிப் படுகையிலுள்ள நாணல் புதர்களையெல்லாம் அழித்து "ரிவெட்மெண்ட்" கட்டி விட்டார்கள். அத்துடன் கரையோரத்திலுள்ள மண்ணைத் தோண்டி எடுத்து விடுவதால் ஆறு மேடிட்டு விடுகிறது. ஆதலால் தண்ணீரைக் கொஞ்சம் அளவுக்கு அதிகமாக விட்டாலும் உடைப்பு ஏற்பட்டு விடுகிறது. நாணலைப் படுகையில் பயிர் செய்திருந்தால் எவ்வளவு தண்ணீர் வந்தாலும் மணலை அரித்துக் கொண்டு ஓடுமேயல்லாது, கரையை உடைக்காது. ஆறும் ஆழமாகும். இவற்றை உணர்ந்து நமது அரசாங்கம் கரையைப் பலப்படுத்தும் முயற்சியில் கவனம் செலுத்துமா?

அறந்தாங்கி
ஆர். வி. ரமணி
29—7—61

## குடிதண்ணீர்ப் பஞ்சமா?

எங்கள் ஊர் சகல வசதியுடன் கூடிய ஒரு சிறந்த கிராமம். சுமார் ஒரு வருஷத்துக்கு முன்பு குடி தண்ணீர்க் குழாய்கள் சுகாதாரத்தைக் காக்க வேண்டும் என்ற பெயரில் தெருக்களைக் கீற்றிக் குழியை வெட்டிப் பின் ஐந்து மாதங்கள் கழித்துக் குழாய்களைப் பொருத்தினர். அதன்பின் பலர் குழிகளில் விழுந்து புகார் செய்த பின் இரண்டு மாதங்கள் கழித்து, அதை மண்ணைக் கொட்டி மூடினர். எங்கள் ஊரில் இருபது கஜ தூரத்தில் மேட்டு வாய்க்காலும், அதற்கு இருபது கஜ தூரத்தில் ஸ்ரீராம சமுத்திரம் என்ற பள்ள வாய்க்காலும், அதற்கு ஐம்பது கஜ தூரத்தில் காவிரி நதியும் இருக்கின்றன. இவற்றில் என்றும் தண்ணீர்ப் பஞ்சமில்லை. இப்படிப்பட்ட குடிதண்ணீர் பஞ்சமான கிராமத்தைக் கண்டு பிடித்து அரசாங்கத்தார் இந்தக் குழாய்களைப் போட வேண்டுமா? இதற்குப் பணம் எங்கு கிடைக்கிறது? தண்ணீர் விலைக்கு விற்கும் இடமெல்லாம் அரசாங்கத்தாருக்குக் கண்ணில் படவில்லையா? இன்னும் குழாய் திறக்கப்படவில்லை. விசாரித்ததில் முதன்மந்திரி அவர்கள் வரவேண்டுமாம், குழாய் திறக்க: வரும் தேர்தலுக்குள்ளாவது இதைத் திறக்க அவர் கண் திறக்குமா? இல்லை, இதைத் திறக்கும் காலத்தில் இதையே ஆட்சியாளர் செய்த பெருதவியெனக் கூறி வோட்டுக்கள் சேகரிக்கும் வழிகளில் ஒன்றாக எண்ணியிருப்பார்களோ, தெரியவில்லை. கிராமங்களையும் அங்குவாழ் மக்களையும் சீர்ப்படுத்துவதாகக் கூறிக் கொண்டு இப்படிக் குழிகளில் தள்ளிச் சீரழிய வைக்க வேண்டாம்.

30-7-61 எம். ஆர். ஆத்ரேயன்
திருவேங்கிமலை (கடாம்பி)

## வெள்ளமும், அரசாங்கமும்

சமீபத்தில், காவிரி, கொள்ளிடம் போன்ற பெரிய ஆறுகளில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கினால், பாதிக்கப்பட்ட கிராமங்களில் குடிசை இழந்தவர்கள், வீடு இழந்தவர்கள் போன்றோர்களுக்குத் தலா ரூபாய் முப்பது விதம் ரொக்க உதவி கொடுத்து உதவப் போவதாகச் சில செய்திகள் கூறுகின்றன. இம்மாதிரி ரொக்க உதவி செய்வதைக் காட்டிலும், குடிசைகள், வீடுகள் கட்டிக் கொள்வதற்குத் தேவையான கீற்றுகள், மூங்கில்கள் போன்றவற்றைக் கொடுத்து உதவலாம். ஏனெனில் இன்று உள்ள நிலையில், கீற்றுகள், மூங்கில்கள் அனைவருக்கும் நியாயமான விலையில் கிடைக்கும் என்ற நிச்சயம் இல்லை.

புதியதாக வீடு கட்டுபவர்கள் கூடுமான வரை, ஆற்றோரங்களில் கட்டாமல் இருக்கும்படி யோசனை கூறலாம்.

திருவாரூர் "ஆரூரான்"
27—7—61

---

மதுரை வழக்கறிஞர் திரு கே. குப்புசாமி ஐயரவர்கள் முதிர்ந்த அநுபவமும், தேசபக்தியும் கொண்டவராகப் பலரும் போற்ற வாழ்ந்தவர். தலைவர் ராஜாஜியிடம் பெருமதிப்புக் கொண்டவர். பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களின் நெருங்கிய நண்பர். மதுரையில் சுதந்திரக் கட்சித் தலைவராகப் பணியாற்றி வந்த பெருமைக்கும் உரியவர்.

இவ்வளவு சிறப்பியல்புகளும் பொருந்திய குப்புசாமி ஐயரவர்கள் அண்மையில் காலமான செய்தி அறிந்து பெரிதும் வருந்துகிறோம். அன்னாரது மறைவினால் வருந்தும் அவரது குடும்பத்தாருக்கும், நண்பர்களுக்கும் நமது ஆழ்ந்த அநுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்து நாள் முழுவதும் புத்துணர்ச்சியையும் நறுமணத்தையும் அனுபவியுங்கள்




நறுமணமுள்ள, புத்துணர்ச்சியளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உபயோகித்தால் மிக உஷ்ண காலத்திலும்கூட குளுமையுடன் இருக்கலாம். இந்த மிருதுவான பவுடரை உங்கள் உடம்பின்மேல் தூவிக்கொண்டால் அது வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் காலையில் இருக்கும் புதுமலர்ச்சியுடனும், நறுமணத்துடனும் விளங்கச் செய்யும். நீண்ட நேரம் புத்துணர்ச்சியுடன் இருக்க எப்பொழுதும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

**சீஸ்ப்ரோ–பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்**

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)


20
கதை: ஜெயந்தி
சித்திரம்: விஜி
போலீஸ் படையுடன் லாஷாவின் மாளிகையினுள் புகுந்து சோதனையிடத் தீர்மானிக்கிறான் குமார். ஷியாமளாவை ஜாக்கிரதையாக இருக்குமாறு எச்சரிக்கும் ஒரு கடிதத்தை வின்யி எழுதிச் செல்கிறாள் . . . . . . . . . .


லாஷாவின் பங்களாவை அடைகிறாள் வின்யி.
என்ன விசேஷம் வின்யி?
ஒன்றுமில்லை. சும்மா, பார்த்து விட்டுப் போகத் தான் வந்தேன்.


ஒரு காரியமுமில்லாமல் வருவாயா? உன்னை எனக்குத் தெரியும் வின்யி.
இனிமேல்தான் நம் நடிப்பை ஆரம்பிக்க வேண்டும்.


வின்யி இலேசாகச் சிரிக்கிறாள்.
அறிந்துதான் வைத்திருக்கிறீர்கள்! உங்களுக்குத் தொந்தரவு தரும் குமாரை இந்த ஊரை விட்டே அனுப்புகிறேன். எனக்கு அதில் என்ன லாபம் கிடைக்கும்?


பணத்தைப் பார்க்காமல் விலைபேசி முடியுமா? யோசனையைச் சொல்லு முதலில்!

நான் உயிருடன் இருக்க வேண்டுமா
னாலும் நீங்கள் உடனே டில்லிக்குச்
சென்று விடுங்கள்' என்று டிமாறுக்கு
ஷியாமாவைக் கொண்டு இது
கடிதம் எழுதச் செய்தால்.....

பூ! இவ்வளவுதானா? இது எனக்குத் தோன்றாமலா போயிற்று? காரிய சாத்தியமானதல்ல, மின்பி!

ஏன்?

அவள் பிடிவாதக் காரி. கடிதம் எழுதச் சம்மதிக்க மாட்டாள்.

அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள். பாம்பின் கால் பாம்பறியும்!

மின்பி! நிஜமாகவா சொல்கிறாய்? அப்புறம் என்னை ஏமாற்றிடுவியோ?

உங்களை ஏமாற்று பவர்கள் வாழ முடியாதென்பது எனக்கு நன்றாகத் தெரியும்!

பலே. கெட்டிக்காரப் பெண், நீ! ஏய்! யாரங்கே! ஷியாமாவை இங்கே அழைத்து வா!

கெண்டா வெறுப்பாக ஷியாமா அங்கு வந்து சேர்ந்ததும்...

ஷியாமா! இதோ பார்! இவள்தான் மின்பி. உன்னுடைய நலனுக்காக இவள் சில விஷயங்கள் சொல்லுவாள். அதன்படி நடந்து கொள்வது தான் புத்திசாலித் தனம்.

எங்களைத் தனிமையில் இருக்க விடுங்கள்.


ஷாஷா அப்பால் போனதும் அன்புடன் ஷியாமாவை நெருங்குகிறாள் விம்பி.
சீ! என்னைத் தொடாதே! இந்தத் தடியனுடன் தொடர்பு கொண்டுள்ள யாரையுமே எனக்குப் பிடிக்காது!


விம்பி மெல்லச் சிரித்துவிட்டுக் கம்மிய குரலில் பேசுகிறாள்.
ஷியாமா! நான் யார் என்பதைப் புரிந்து கொண்டால் இப்படி எரிந்து விழ மாட்டாய். இதோ பார்! உன் அண்ணன் கொடுத்த கடிதம்!


அண்ணனாம், அண்ணன்! நீ என்னை மோசம் செய்ய வந்தவளென்று இதிலிருந்தே தெரிகிறது! அந்தக் கடிதத்தைத் தொடக்கூட மாட்டேன் நான்!



சட்டென்று ஏதோ சந்தேகம் தோன்றவே கடிதத்தைத் தானே பிரித்துப் பார்க்கிறாள் விம்பி.
அப்படி...அப்படியானால் இதை எழுதியது?


கடிதத்தைப் படித்ததும் பேரதிர்ச்சி அடைகிறாள் விம்பி.
...நீ என்மனைவி என்பதை இக்கடிதம் கொண்டு வருபவளிடம் வெளியிடாதே. இன்று இரவு போலீஸாருடன் அங்கு வந்து உன்னை மீட்கிறேன்...


விம்பி அணிந்திருக்கும் கடிகாரத்தின் மீது ஷியாமாவின் பார்வை விழுகிறது.
இது குமாருக்கு நான் கொடுத்த கடிகாரமல்லவா? உன்னிடம் எப்படி வந்தது?


ஆத்திரமடைந்த விம்பி, ஸாஷாவிடம் குமாரைக் காட்டிக் கொடுக்கக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறுகிறாள்.
நான் மோசம் போனேன்! இன்று இரவு குமார் போலீஸாருடன் உங்களைக் கைப்பற்ற வரப் போகிறார். இதோ பாருங்கள், அவர் எழுதிய கடிதத்தை!
தொடரும்




கண்ணாடிப் பாட்டியைப் பல வருடங்களுக்குப் பிறகு ஒரு கல்யாணத்தில்பார்க்க நேர்ந்தது. "யாரூப்பா அது, ஜானகியாடா?" என்று கண்ணாடியை இரண்டு விரல்களால் தூக்கி விட்டுக்கொண்டே அருகில் வந்தாள்.

"ஆமாம் பாட்டி. சௌக்கியம் தானே?"

"சௌக்கியமா இருக்கற துக்குத்தான் வழி பண்ணிக்க வந்திருக்கேன். பேப்பர்லே கதை போட்டுண்டு வறியே. அதுக்கெல்லாம் பணம் தருவாளோ! இல்லே, ராமையா பாகவதரைக் கூப்பிட்டுக் கதை பண்ணச் சொல்றப்பலே தேங்காய் மூடியோ?..." என்று கூறி நிறுத்தினாள் பாட்டி.

"தேங்காய் விலைதான் ஏறிக் கிடக்கே, இப்போ! பணமாகவே கொடுத்து விடுகிறார்கள்."

"அது என்னமோப்பா! பாதிப் பணம் அப்பப்ப எனக்கு வரணுமே, வரலே யேன்னு கேட்கிறேன். நான் கேட்கிறது நியாயம்தானே?" என்றாள் பாட்டி.

"எல்லாம் உங்க ஆசிர்வாதம்தானே!"

"அப்படிச் சொல்லிண்டே கிளம்பிப் போயிடலாம்னு பார்க்கறியா? என் பேச்சு, மூணச்சி கதை, யோகாம்பா கதை, ரங்கு கதை-அவாளுக்குக் கொடுத்தாலும் கொடு. கொடுக்காட்டாலும் போ - எனக்காவது கொடுக்கலாமோல்லியோ நீ......?"

பாட்டி கேட்டது வேடிக்கையாகத் தான். சொன்னது அவ்வளவும் உண்மை.

எழுதத் தூண்டிய, வழி காட்டிய பல குருமார்களில் கண்ணாடிப் பாட்டிக்கு நான் தனி ஸ்தானம் கொடுத்திருக்கிறேன். காவேரி வண்டலில் செழித்தபயிர் கண்ணாடிப் பாட்டி. பேச்சில் அசாதாரணமான நயம், நகைச்சுவை, 'சுருக்சுருக்'கென்று தைக்கிற கூர்மை, சில சமயம் என்ன அர்த்தத்தில் சொல்லுகிறாள் என்று இலேசில் கண்டு பிடிக்க முடியாத பூடகம், சொல்லாமல் சொல்லுகிற தொனி, அதிர்வேட்டு மாதிரியும், சிற்றலை போலவும் பல இனுக்குச் சிரிப்புகளை எழுப்பக் கூடிய ஹாஸ்ய வகைகள், எதைச் சொன்னாலும் தனக்கென்று ஒரு தனிப்பார்வை — பாட்டி ரொம்பப் பெரியவள்.

தி. ஜானகிராமன்

"மோக முள்" நாவலில் வருகிற பல பாத்திரங்களும் சம்பவங்களும் கண்ணாடிப்பாட்டியும் நானும் கண்டு ரசித்தவை தான். அவற்றையெல்லாம் ஒரு நாவலாக எனக்கு எழுதத் தோன்றியதே பாட்டியின் பார்வையை இரவல் வாங்கிக் கொண்டதனால் தான். பாட்டிக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் அவளுக்குத் தெரிந்த கதைகளும், மன விசித்திரங்களும், சொல்ஜாலங்களும் இந்த உலகத்திலேயே சிலருக்குத்தான் கைவரும். பாட்டியின் கலைக்கண்ணில் ஒரு திவலை கூட நமக்கு லபிக்கவில்லையே என்று எனக்குத் தீராத குறை. "மோக முள்"ளில் சில அத்தியாயங்களைக் கிடைத்த பொழுது வாசிக்கச் சொல்லிக் கேட்டாளாம் பாட்டி. ஓரிரண்டு இடங்களை நன்றாக இருப்பதாக அவள் ஒப்புக் கொண்டு கூட விட்டாள். ஆகவே மற்ற விமர்சகர்களைப் பற்றி நான் கவலைப்படவில்லை.

பள்ளிக்கூடத்தில் படித்த பத்து வருஷங்களில் ஞாபகம் இருக்கக் கூடியதாக ஒன்றுமில்லை. எப்பொழுது இச் சிறையிலிருந்து விடுபடப் போகிறோம் என்று ஆத்திரப்பட்டது ஞாபகம் இருக்கிறது.

"உனக்குக் கணக்கு வராது. நீ கதை பண்ணத்தான் லாயக்கு. தொலை" என்று என் முகத்தில் பிரம்பை விட்டெறிந்த நாமமும் அம்மை வடு முகமும் கொண்ட மூன்றாம் வகுப்புக் கணக்கு வாத்தியார் ரங்காச்சாரியார், எனக்கு ஆசிர்வாதம் செய்தார். அந்த ஆசிர்வாதம் —

வகுப்புக் கட்டுரைகளில் சொந்தக் கைவரிசையைக் காட்டி அதிகப் பிரசங்கித்தனமாக அசடு வழிந்ததற்கு, சில வாத்தியார்கள் மற்றப் பையன்களுக்கு நடுவில் பரிஹாசம் செய்து மனத்தைக் கிழித்துப் போட்டதில் ஏற்பட்ட புண்கள்—

தஞ்சாவூரில் அப்பொழுதெல்லாம் மூலைக்கு மூலை சங்கீதக் கச்சேரிகள் அமர்க்களப்படும். சிவகங்கை அனுமார், வெங்கடேசப்பெருமாள் சன்னிதி அனுமார், மேலவீதி விசுவநாதர், மேலவீதிப் பிள்ளையார், தெற்குவீதிக் காளி அம்மன், வரகப்பையர் சந்தில் தியாகையர் பூஜித்த ராம விக்ரஹங்கள், நாணயக்

காரச் செட்டித்தெரு ராமலிங்க மடம், பக்கத்தில்! திருவையாறு - இத்தனை தெய்வங்களுக்கும் நடக்கிற உற்சவ சங்கீதக் கச்சேரிகளை ஒன்று விடாமல் ஐந்து வயதிலிருந்தே கேட்டுக் கொண்டிருந்த பழக்கம்—

நாலைந்து பேரிடம் சிறு வயதிலிருந்தே சங்கீதம் கற்கும் வாய்ப்புக் கிடைத்தது. கலைஞர்களுக்கு உரிய பேச்சின் அழகில் மயங்கினது —

உமையாள்புரம் சுவாமிநாதய்யரிடம் சில நாட்கள் சங்கீதம் சொல்லிக் கொள்ளப் போய்க் கொண்டிருந்தேன். மற்றவர்களைவிட சங்கீதத்தை உபாசனையாக, தியான மார்க்கமாக, அவர் கையாண்ட ஒரு தனிப்பண்பு, உலகத்தின் ஒலிகளையெல்லாம் நாதக் கடவுளின் பற்பல சைகைகளாகவும் விவகாரங்களாகவும் அவர் கண்ட விந்தையைத் துளியாவது பார்க்கக் கிடைத்த வாய்ப்பு —

கும்பகோணத்தில் கல்லூரியில் படித்த நாலு வருடங்களும் பள்ளி வாழ்க்கைக்கு நேர்மாறாக இருந்தன. அவ்வளவு உற்சாகம். அவ்வளவு அமைதி. இலக்கியங்களைப் பரவலாகப் படிக்க வாய்ப்புக் கிடைத்தது. பரம ரசிகர்களாக இருந்த இரண்டு மூன்று ஆசிரியர்களின் தோழமை இந்த வாய்ப்பைப் பெருக்கிற்று. அந்தப் பூரிப்பு —

கல்லூரியில் எனக்கு இணைபிரியாத நண்பன் ஒருவன் உண்டு. எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் தெய்வமாக வணங்குவான். அதை ஒரு தனி மதமாக வளர்த்திருந்தான் அவன். அவனோடு நெருங்கிப் பழகப் பழக என் உள்ளத்தில் சபலத்துக்கும் தூய்மைக்கும் மூண்ட ஓயாத சண்டைகள் —

நான் குடியிருந்த தெருவில் ஒரு கிழவர் ஐம்பத்தைந்து வயதில் ஒரு பதினாறு வயதுக் கட்டழகியை (அழகான பெண்கள் யார் யாருக்கோ போய்ச் சேர்வதைப் பாருங்கள்)க் கலியாணம் செய்து கொண்டு வந்து முப்பத்திரண்டு வயதுப் பிள்ளையை அவன் மனைவி குழந்தைகளுடன் வீட்டை விட்டு விரட்டி, சரியாக ஒரு வருஷம் புது மனைவியோடு தனிக் குடித்தனம் செய்துவிட்டு, திடீரென்று ஒருநாள் சிவபதம் அடைந்து விட்டார். அதை ஒரு வருஷம் பார்த்துக் கொண்டிருந்த ஆற்றாமை —

தஞ்சாவூர் ஜில்லாவில் ஒரு கிராமம். அங்கே ஒரு மிராசுதார். சிறு பையனாக இருக்கும் பொழுதே முப்பது வேலி நிலத்துக்கு வாரிசாகி விட்டான். தகப்பனார் இறந்து, நிலம் கைக்கு வந்ததுமே, பண்ணை முறையை உதறி எல்லா நிலங்களையும் குத்தகைக்கு விட்டு விட்டுச் சுகவாசியாக வாழத் தொடங்கினான். சுகவாசி யென்றால் வேறொன்றுமில்லை. திண்ணையில் பெரிய கலியாண ஜமக்காளத்தை விரித்து, ஊரில் உள்ள சின்னவர் பெரியவர்களையெல்லாம் சேர்த்துக் கொண்டு சீட்டாட்டம். ஓயாத ஒழியாத சீட்டாட்டம். அரையில் வேட்டி நழுவியதைக்கூட உணராத சீட்டாட்டம். மற்ற நேரங்களில் திண்ணையில் மரச்சாய்வு நாற்காலியைப் போட்டு, சட்டத்தை நீட்டி அதன்மேல் காலைப்போட்டு, எப்பேர்ப்பட்ட பெரியவர்கள் வந்தாலும் (ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தாசில்தாரைத் தவிர) அந்தக் காலை மடக்காமல், எழுந்து கொண்டு விடாமல் படுத்திருப்பான். வம்பளப்பான். இந்த மாதிரி எத்தனையோ ஜன்மங்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் இருக்கின்றன. (மற்ற ஜில்லாக்கள் அவ்வளவாக எனக்குப் பழக்கமில்லை). இந்த ஜன்மங்கள் ஒன்றிரண்டைப் பார்த்த குழப்பம் —

தஞ்சாவூரில் நான் படிக்கும்பொழுது ஒரு நாள் நாலைந்து வடக்கத்தியர்கள் தம்புராவைத் தூக்கிக் கொண்டு வாசலோடு போனார்கள். என் தகப்பனாரும் நானும் திண்ணையில் நின்று கொண்டிருந்தோம். எங்கள் வாசலண்டை வந்த அவர்கள் என் தகப்பனாருக்குக் கும்பிடு போட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார்கள். ஹாலில் உட்கார்ந்



உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் * முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனியுங்கள் * போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் * முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனியுங்கள் * போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் * முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனியுங்கள் * போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள் * முத்திரையுடன் பாது
காப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா என்று கவனியுங்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று
முத்திரையுடன் பாதுகாப்பு அமைக்கப்பட்ட மூடி இருக்கிறதா
என்று கவனியுங்கள் * போலிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள்.
உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று

GENUINE
PHILLIPS
MILK OF MAGNESIA
SHAKE WELL BEFORE USING

ஒவ்வொரு பிலிப்ஸ் பாட்டிலின் மூடியும் போலிகளை கலக்க முடியாதபடி பாதுகாக்கிறது. இந்த மூடி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவின் ஒவ்வொரு துளியையும் அசல் என உத்திரவாதம் அளிக்கிறது. மலச் சிக்கல் ஏற்படும் பொழுது உங்களுக்கு பத்திரமாகவும், நிச்சயமாகவும் பூரண நிவாரணத்தை உறுதியாக்குகிறது.

பிரசித்தி பெற்ற மில்க் ஆப் மக்னீஷியா ஒரே இரவிலே, ஆரோக்கிய ஒழுங்கை திரும்ப ஒப்படைக்கிறது. அதி சீக்கிரம் அமிலத்தை சமப்படுத்தி அதனால் ஏற்படும் வயிற்றுக் கோளாறையும், மாறு எதிர்ச்செயலையும், வாயு உபாதைகளையும் தவிர்க்கிறது.

போலிகளை கலக்க முடியாதபடி மூடி அமைக்கப்பட்டிருக்கும் சீல் செய்த பாட்டிலா என்று பாருங்கள். எப்பொழுதும் அசல் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவையே வாங்குங்கள். 2 அவுன்ஸ் 4 அவுன்ஸ் மற்றும் 12 அவுன்ஸ்களில் கிடைக்கிறது.

PHILLIPS
MILK OF MAGNESIA
4 TABLETS 4

இரைப்பையில் மிதமிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கைக்கடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.

PHILLIPS
MILK OF MAGNESIA
4 TABLETS 4

உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா ஒன்றே ஒன்று

பிரத்தியேக விநியோகஸ்தர்கள்: டேஞ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்.

தார்கள். தம்புராவை மீட்டினன் ஒருவன். பெரியவர் ஒருவர் பாட ஆரம்பித்து விட்டார். ஒரு மணி நேரம் உலகப் பிரக்ஞை அழிய அழியப் பாடினார் அவர். அவர் மகனும் சேர்ந்து கொண்டான். அந்த மாதிரி சாரீரங்களை நான் இதுவரையில் கேட்டதில்லை.

அவ்வளவு கனம், அவ்வளவு இனிமை, அவ்வளவு சுருதி உணர்வு, விண்ணுக்கும் பாதாளத்துக்கும் அனுயாசமாக ஓடி ஓடிப் பாய்கிற ஆற்றல்! கட்டி விழுந்த குழந்தையின் முனகல் போன்ற சில கர்நாடக வித்வான்களின் குரல்களும் நினைவில் வந்தன. பல வருஷங்கள் கழித்து, பிழை பொறுக்காமல் வடக்கத்தியர்களின் குரல் வளத்தைப் பற்றி ஒரு பிரபல கர்நாடக வித்வானுடன் தர்க்கம் செய்ய நேர்ந்தது. 'குரல் இருந்தால் மட்டும் போதுமா' என்று ஒரே வார்த்தையில் அலட்சியப் புன்னகையோடு அவ்வளவையும் 'டைபசல்' செய்து விட்டார் அவர்! ஒரு கிணற்றில் இத்தனை தவளைகளை எப்படி அடைத்திருக்கிறார் பகவான் என்று அப்போது ஓர் ஆச்சரியம் ஏற்பட்டது. அந்த ஆச்சரியம்—



என்னைவிட எட்டு வயது அதிகமான ஒரு பெண். நன்றாகப் படித்தவள். நல்ல வடித்தெடுத்த அழகு. அடிக்கடி அவளோடு பேசிப் பழகும் வாய்ப்புக் கிடைத்தது. ஆழ்ந்த அமைதியும், புத்திக் கூர்மையும், எதையும் கண்டு வியந்துவிடாத அழுத்தமும் நிறைந்த அவளை மரியாதையாகப் போற்றத் தொடங்கினேன். கடைசியில் அது மோகமாக மாறி, அவள் அதைத் தெரிந்துகொண்டு, என்னைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் போய், ஒரு வருஷம் கழித்து யாரோ ஒரு மின்சார என்ஜினீயரைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட செய்தியைக் கேட்டது—

இந்த எல்லாமாகச் சேர்ந்து,கொதித்து "மோக முள்" என்ற நாவலாக ஆகிவிட்டது. முக்கியமானவற்றைச் சொல்லியாயிற்று.

எப்படி அதை எழுதினேன் என்று கேட்டால் பதில் சொல்ல முடியவில்லை. அந்த எல்லா ஞாபகங்களும் உள்ளே கிடந்தன. ஒருநாள் ஒரு வாரப் பத்திரிகையிலிருந்து மூன்று பேர்கள் வந்து 'ஒரு தொடர்கதை எழுதுங்களேன்' என்றார்கள். நாலைந்து தடவை வந்தார்கள். இந்த ஞாபகங்கள், என் ஆசைகள், நப்பாசைகள், நான் எப்படி இருந்திருக்க வேண்டும் என்று நினைத்தேனே, பார்த்த மனிதர்கள் பாத்திரங்களாக எப்படி மாற வேண்டும் என்று விரும்பினேனே, எல்லாமாகச் சேர்ந்து நாவலாக உருவாயின. மறுபடியும் எப்படி என்றால் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை.

ஏதோ உட்கார்கிறோம், எழுதுகிறோம். சில சமயம் தரதரவென்று எழுத முடிகிறது. சில நாளைக்கு ஒரு வரி கூட எழுதமுடியவில்லை. நாட்கணக்கில் எழுதவே முடிவதில்லை. எழுத வந்தால்தானே! நாலு நாட்கள் ஐந்து நாட்கள் மண்டையை உடைத்துக் கொண்டு,கடைசியில் அழாத குறையாக, படுத்து விடுகிறது. காலையில் எழுந்திருக்கும் பொழுது பனிச் சென்று கோவில், சினிமாவுக்குப் போகிற ஸ்திரீகள் 'குக்'கரில் வைத்து விட்டுப் போகிற அரிசி மாதிரி, எல்லாச் சிரமங்களும் விடிந்து, தானாக எண்ணங்கள் பக்குவமாகி இருக்கும். வேகமாக, பேனா அதை எழுதி விடுகிறது. அவ்வளவுதான்.

தொடர்கதை எழுதுவதைப் பற்றி விமர்சகர்கள் நல்ல அபிப்பிராயம் சொல்வதில்லை. எனக்குக்கூட அந்த அபிப்பிராயத்தில் சிறிது சார்பு உண்டு. ஆனால் நான் எழுதின மூன்று நாவல்களும் தொடர்கதைகளாக வந்தவைகள்தான். பாத்திரத்தில் பச்சைத் தண்ணீரில் கிடக்கிற காய்கறிகளை வேக வைக்க,தொடர்கதை எழுதச் சொல்லும் பத்திரிகாசிரியரின் தூண்டுதல் நல்ல தியாக வந்து உதவிச் சமைத்துக் கொடுக்கிறது. நெருப்பை ஜாக்கிரதையாகப் பயன்படுத்துவது நம் பொறுப்பு.

என்ன, சமையல் உபமானமாகவே இருக்கிறதே என்று நீங்கள் கேட்கிறீர்கள். முன் ஜன்மத்தில் தவசிப் பிள்ளையாக இருந்தேனோ, என்னவோ, யார் கண்டார்கள்?

> காங்கிரஸ் சொல்லும் சமப்படுத்தும் சோஷலிஸம் முற்றும் தவறான கொள்கை: ஒரு மோசடி; வெறும் தேர்தல் தந்திரம். வோட்டர் கூட்டத்தை ஒரு கழுதையாகப் பாவித்து, காங்கிரஸ் அதன் முதுகின் மேல் உட்கார்ந்து கொண்டு சோஷலிஸம் என்ற முள்ளங்கியை முன்னால் நீட்டி ஆசை காட்டி ஓடச் செய்கிறது. —ராஜாஜி



# உங்கள் வாழ்வுக்கு ஜலம் ஆதாரமா?

**அதற்குக் குறைவு வராமல் பார்த்துக்கொள்ளுங்கள்**

சிறந்த வழி, மையர்ஸ் அல்லது வாஸ்ப் பம்பிங் திட்டத்தை நிறுவனம் செய்வதுதான். உலகெங்கும் எண்பதாண்டுகளுக்கு மேலாகச் சேவை செய்து தன் சிறப்பை நிலை நாட்டிய திட்டம் இது.

**MYERS OR WASP**

## மையர்ஸ் அல்லது வாஸ்ப்

## சுயமாய் இயங்கும் பம்பிங் திட்டங்கள்

தொழில்களுக்கான பம்பிங், திரவ சம்பந்தமான எவ்வித பம்பிங் பிரச்சினைகளுக்கும் திறமை மிக்க ஆலோசனைக்கும், உதவிக்கும் எங்களை அணுகுங்கள்.

ஆழ் கிணறு பம்பிங் எங்கள் விசேஷ அம்சம்.

**வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ் ப்ரை. லிட்.,**

330, தம்பு செட்டித் தெரு
சென்னை-1






[இப்படி ஒரு தினமா என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? சுதந்திர தினம், குடியரசு தினம் எனக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஈ ஒழிப்பு வாரம் என்பதுகூட உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் 'கொசு தினம்' என்பதைப் பற்றி நீங்கள் பெரும்பாலும் கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். எனினும், இக் 'கொசு தினம்' -ஆகஸ்ட் 20 வைத்தியத்தின் வரலாற்றில் உண்மையிலேயே ஒரு பொன்னாள் ஆகும். அதைக் குறித்துத்தான் சிறிது தெரிந்து கொள்ளலாமே!]

1857-ம் ஆண்டில் நிகழ்ந்த 'சிப்பாய்க் கலகம்' அல்லது 'முதல் இந்திய விடுதலைப் போர்' இன்று அனைவருக்கும் தெரிந்த ஒரு வரலாற்று விவரம். அது தொடங்குவதற்கு இன்னும் மூன்று நாட்கள் இருந்தன. இந்திய ராணுவத்தில் ஒரு படைத் தலைவரின் மனைவி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். கலகத்தின்போது அக்குழந்தையும் அதன் தாயும் கலகக்காரர்களின் வெறியிலிருந்து தப்பியதற்குக் காரணம் அத்தலைவனின் படையில் இருந்த கூர்க்க வீரர்களின் எஜமான விசுவாசமும் அன்பும் தான். அந்தக் குழந்தையை-அந்திய நாட்டினரின் மகவைக் காப்பாற்றியதற்கு அவ்வீரர்களைப் பாராட்ட வேண்டியது நமது முக்கியமான கடமை. ஏனெனில், அவர்கள் காப்பாற்றிய குழந்தை வேறுயாருமில்லை; மலேரியா என்னும் குளிர்க் காய்ச்சல் எவ்வாறு பரவுகிறது என்பதைக் கண்டுபிடித்து அதன் கொடிய பிடியிலிருந்து மக்கள் குலத்தை விடுவிப்பதற்குக் காரணமாயிருந்தவர் 'ரொனல்ட்ராஸ்' தாம்!

ரொனல்ட் ராஸுக்கு எட்டு வயதாயிருக்கும் போது அவரை இங்கிலாந்துக்கு அனுப்ப வேண்டியதாயிற்று. இந்தியாவின் சீதோஷ்ண நிலை அவருக்கு ஒத்துக் கொள்ளவில்லை. இங்கிலாந்தில் இருந்த காலை அவருக்குப் பள்ளிப் படிப்பு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. இசை, இலக்கியம், ஓவியம், கவிதை, கணிதம் போன்ற பல்வேறு துறைகளிலும் அவருக்கு நாட்டம் இருந்தது. ஆயினும், அவர் ஒரு வைத்தியர் ஆகவேண்டும் என்றே அவர் தந்தை நிர்மானித்தார். எனவே, லண்டனில் இருந்த செய்ன்ட் பார்த்தலோமியூ ஆஸ்பத்திரியில் வைத்திய மாணவராகச் சேர்ந்தார் ராஸ். வைத்தியப் படிப்பில் அத்துணை ஆர்வம் இல்லையெனினும், அவ்வாஸ்பத்திரியில் காயங்களைக் கழுவிக் குணப்படுத்தும் போது நுண்ணுயிர்கள் எவையும் இல்லாதவாறு சுத்தம் செய்யப்பட்ட கருவிகளையும் உபகரணங்களையும் பயன்படுத்திய முறையும் அதனால் விளைந்த நன்மையும் அவரைப் பெரிதும் கவர்ந்தன.

1881 இல் வைத்தியப் பரீட்சையில் தேர்வு பெற்று, இந்திய ராணுவப் படையின் வைத்தியப் பிரிவில் சேர்ந்தார் ராஸ். சமாதான காலங்களில் ராணுவ வைத்தியர்களுக்கு மிகுதியாக வேலை இருப்பதில்லை. ஆகவே, அவர் கவிதை எழுதினார்; கணிதமும் வான வியலும் பயின்றார். டென்னிஸ், போலோ விளையாடினார்; பியானோ வாசித்தார். ஆனால் இந்தியாவின் கடும் வெப்ப நிலை காரணமாக அவர் உடல் நலிவுற்றார். மருத்துவத்துறையையே விட்டுவிடலாமா என்ற எண்ணம் கூட அவருக்குத் தோன்றியது. எனினும், குளிர் காய்ச்சலினால் அவதியுற்று மடியும் கோரக் காட்சியும் அவர் மனக் கண்ணின் முன் அடிக்கடி தோன்றி வந்தது. அதை வெல்வதற்குத் தமது வைத்திய அறிவைப் பயன்படுத்தி, நிலையான சேவை ஏதேனும் தாம் செய்ய வேண்டும் என்னும் கருத்து வலுக்கத் தொடங்கியது. தமது உடல் நலத்தைச் சீர்செய்து கொள்ளும் பொருட்டுத் தாயகம் சென்று, சிறிது காலம் தங்கிவிட்டு 1890-ல் மீண்டும் இந்தியா வந்தார்.

உடனே, அவர் மலேரியாவின் மர்மத்தை அறிவதில் முனைந்து அதற்கான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டார். அப்போது சார்லஸ் லவேரான் என்னும் பிரெஞ்சு வைத்தியர் மலேரியா குறித்துக் கொண்டுள்ள கருத்துக்களைப் பற்றி அவர் கேள்விப்பட்டார். மலேரியாக் காய்ச்சலினால் வருந்தும் நோயாளிகளின் ரத்தத்தில் 'ப்ளாஸ்மோடியா' எனப்படும் ஒட்



ரொனல்ட் ராஸ்

டுண்ணிகள் இருப்பதையும் அந்த ஒட்டுண்ணிகளின் ஒரு வளர்ச்சி நிலையிலேயே மலேரியா உண்டாவதையும் லவெரான் கவனித்திருந்தார். லவெரான் எழுதிய நூல்களை ராஸ் வரவழைத்துப் படித்தார்; தமது நோயாளிகளின் ரத்தத்தைப் பரிசோதித்தும் பார்த்தார். ஆனால், மலேரியா ஒட்டுண்ணி எதுவும் அவருக்குத் தென்படவில்லை.



மீண்டும் அவர் இங்கிலாந்து சென்றார். அப்போது தான் வைத்திய வரலாற்றில் ஒரு முக்கியமான சந்திப்பு நிகழ்ந்தது. ராஸும் டாக்டர் மான்ஸன் என்பவரும் சந்தித்து மலேரியா பற்றிப் பேசினர். மலேரியா நோயாளி ஒருவனின் ரத்தத்தில் மலேரியா ஒட்டுண்ணிகள் இருப்பதைத் தமது நுண் நோக்கியில் மான்ஸன் ராஸுக்குக் காட்டினார். மான்ஸன் சீனாவில் வைத்தியராகப் பணியாற்றியவர். யானைக்கால் வியாதிக்குக் காரணமான அந்த 'ஃபைலேரியா'ப் புழுக்கள் பரவுவதற்குக் கொசுக்கடிதான் ஏதுவாகிறது என்பதைக் கண்டு பிடித்தார். மலேரியா பரவுவதற்கும் கொசுக்கள்தாம் காரணம் என்று தாம் கருதுவதாக மான்ஸன் ராஸிடம் கூறினார். இவ்விவரங்களை யெல்லாம் அறிந்து கொண்ட ராஸின் மகிழ்ச்சியை நீங்களே ஊகித்துப் பார்த்துக் கொள்ளலாம்!

1895 ஏப்ரல் 25ஆம் தேதி ராஸ் ஸிகந்திராபாத் வந்து மீண்டும் ராணுவத்தில் பணியாற்றி வரலானார். அவருடைய நினைவெல்லாம் மலேரியாவைப் பற்றித்தான். தாம் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சிந்தித்தார். ஒட்டுண்ணிகளைப்பற்றி கண்டுபிடித்தாக வேண்டும். அதாவது, மலேரியா நோயாளியின் ரத்தத்தில் காணப்படும் ஒட்டுண்ணிகளையும் கொசுக்களின் வயிற்றில் தென்படும் ஒட்டுண்ணிகளையும் (அப்படி ஏதாவது தென்பட்டால்!) ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே வர வேண்டும். கொசுக்களில்தான் எத்தனை வகை! ஒவ்வொரு கொசுவின் வயிற்றையும் அறுத்து அதன் ஒவ்வொரு 'செல்'லையும் நுண்நோக்கியில் பார்த்தாக வேண்டும்.

ராஸ் காலை ஏழு மணியிலிருந்து இரவு ஏழு மணிவரை ஓயாது உழைத்து வந்தார். கொசுக்களைப் பிடித்தல், நோயாளிகளிடமிருந்து ரத்தம் எடுத்தல் போன்ற வேலைகள் அவருக்குப் பெருந் தொல்லையாய் இருந்தன. மேலும், காற்றில்லாத புழுக்கமான அறையிலேயே, அவர் ஆராய்ச்சிகளை நடத்த வேண்டியதாயிருந்தது. எனினும், சிறிதும் அயராது கருமமே கண்ணும் அவர் வேலை செய்து வந்தார்.. தமது ஆராய்ச்சிகளைப் பற்றி ராஸ் மான்ஸனுக்கு எழுதினார்; மான்ஸனும் தமது கருத்துக்களை ராஸுக்கு எழுதி வந்தார்.



இதற்கிடையில் அவர் காலரா வேலைக்காகப் பங்களூருக்கு மாற்றப்பட்டார். அங்கிருந்து ஊதகைக்கு அவர் செல்ல வேண்டியதாயிற்று. அதனால் மலேரியா ஆராய்ச்சிக்குத் தடங்கல் உண்டாயிற்று. ஆனால் ஊதகையில் அவருக்கே மலேரியாக் காய்ச்சல் ஏற்பட்டது. காய்ச்சலின் காரணத்தை ஆராய முயன்றார். அப்போது சுவரின் மேலிருந்த ஒருவகைக் கொசு அவர் கவனத்தை ஈர்த்தது. சுவர் மட்டத்துக்கு இணையாக இல்லாமல் சற்று மேற்புறமாகச் சாய்வாயிருந்தது அதன் உடலின் பின் பகுதி. (மலேரியா பரவுவதற்கு இவ்வகைக் கொசுதான் காரணம்; 'அனபீலீஸ்' கொசுவெனப்படுவது.) அதன் கடியினால்தான் காய்ச்சல் ஏற்பட்டிருக்க வேண்டுமென அவர் தீர்மானித்தார்.

1897 ஜூன்.

காலரா வேலை எல்லாம் முடிந்து மீண்டும் ஸிகந்தராபாத் வந்து சேர்ந்தார். தமது ஆராய்ச்சி வேலையைத் தொடங்கி விட்டார். புழுக்கமும் வெப்பமும் அவரால் தாங்கமுடியவில்லை. அறை முழுதும் சிறுசிறு பூச்சிகள். நுண்-நோக்கியின் ஒரு கண்ணாடி வில்லை வேறு விரிசல் கண்டிருந்தது. அவ்வளவு சிரமத்துக்கிடையிலும் அவர் தம்முடைய ஆராய்ச்சியை நிறுத்தவில்லை.

ஆகஸ்ட் 15 அன்று அவரது உதவியாளர் அறையின் சுவர் மீது இருந்த ஒரு கொசுவைக் காட்டினார். அதன் உடலின் பின் பகுதி சுவரின் மட்டத்திலிருந்து மேற்புறம் சாய்வாயிருந்ததை ராஸ் கவனித்தார். ஊதகையில் அவர் கண்ட அதே கொசு வகைதான்! அதே வகைக் கொசுக்களை வளர்த்து அவற்றை அறுத்துப் பார்த்து வந்தார்.

ஆகஸ்ட் 20: மேலும் மூன்று கொசுக்களை அன்று அறுத்துச் சோதனை செய்தார் ராஸ். ஒன்றும் தென்படவில்லை. ஆயிரக்கணக்கான கொசுக்களை அறுத்துப் பார்த்தும் பயன் இல்லை. இன்னும் இரண்டே எஞ்சியிருந்தன. அவருக்கே அயர்வு தோன்றியது. எனினும், விடா முயற்சியுடன் இரண்டில் ஒன்றை வெட்டி, அதன் வயிற்றை அறுத்து, நுண்-நோக்கியில் வைத்துப் பார்த்தார். வட்ட வடிவமான சிறு துகள் ஒன்று தென்பட்டது; கொசுவின் வயிற்று 'செல்' ஆக அது இருக்க முடியாது. உற்றுப் பார்த்தார். அம்மாதிரி பன்னிரண்டு இருந்தன. ஒவ்வொன்றிலும் கரிய பொருள்-டாக்டர் மான்ஸன் காட்டியதைப்போன்றது -இருந்தது தெரிந்தது. தாம்

கண்டது மலேரியா ஒட்டுண்ணியின் வளர்ச்சியில் ஒரு நிலை என்பதை ராஸ் அறிந்தார். விடாமுயற்சியும் அறிவாராய்ச்சியும் வெற்றி பெற்றன. கொசுவின் மீது கொண்ட வெற்றிக்கு அறிகுறியாக ஆகஸ்ட் இருபதை அவர் 'கொசு தினம்' என்று அழைத்தார்.

* * *

**ம**றுநாள் கடைசிக் கொசுவும் அறுக்கப்பட்டது. மீண்டும் அதே கரிய உண்டைகள்; ஆனால், அன்று அவை சற்றுப் பெரிதாயிருந்தன; அதாவது அவை வளர்ந்திருந்தன. அடுத்து அவை எப்படிக் கொசுவினிடமிருந்து புதிய நோயாளிக்குப் போகின்றன என்பதைக் கண்டுபிடித்து விட்டால் மலேரியாவைக் கட்டுப்படுத்தி விட்ட மாதிரிதான். முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார் அல்லவா? அதற்கு இன்னும் ஓர் ஆண்டு அவர் காத்திருக்க வேண்டியிருந்தது. ஊண் உறக்கமின்றிக் கருமமே கண்ணாயிருந்து இறுதியில் அதையும் அவர் கண்டு பிடித்து விட்டார்.

மலேரியா ஒட்டுண்ணிகள் நூலிழைகள் போல் வளர்ந்து கொசுவின் உமிழ் நீர்ச் சுரப்பியை வந்தடைகின்றன. அத்தகைய கொசு ஓர் ஆளைக் கடிக்கும் போது உமிழ் நீருடன் அவையும் அந்த ஆளின் ரத்தத்துடன் கலந்து அவனுக்குக் காய்ச்சல் உண்டாக்குகின்றன.

இந்த 'அனபலிஸ்' வகைக் கொசு சதுப்பு நிலங்களிலும் நீர்த் தேக்கங்களிலும் பெருகுவதால் நீரைத் தேங்க விடக் கூடாது. மேலும், கொசுப் புழுக்களுக்குச் சுவாசிப்பதற்குக் காற்று கிடைக்காமல் மருந்தெண்ணெய் தெளித்தும் மலேரியாவை ஒழித்து விடலாமென அவர் கூறினார். கூறியதோடு மட்டுமில்லாமல் 1914-18 உலகப் போரின்போது போரிலே குண்டுகள் பட்டு மடிவதை விட வீரர்கள் மலேரியாவினால் அதிகமாக மரணமடைந்து கொண்டிருந்தனர். இத்தாலியிலும் கிரீஸிலும் மலேரியாக் கொசுக்கள் வளர விடாமல் தடுத்து, நேரிடையாகச் செய்து காட்டி எண்ணற்ற போர் வீரர்களை மலேரியாவிலிருந்து அவர் காப்பாற்றினார்.

* * *

**ஒ**ரு சமயம் லிவர்ப்பூல் பாதிரி ஒருவர் ராஸை சந்தித்தபோது, "ஆமாம். இவையெல்லாம் முக்கியமானவை என்று நீங்கள் மெய்யாகவே நினைக்கிறீர்களா?" என்று கேட்டார்.

"ஆம், முக்கியமானவைதாம்; எடுத்துக்காட்டாக, வாட்டர்லூ போரைவிட மிகவும் முக்கியமானவை!" என்றார் ராஸ்.

"ஏன்?" என்று பாதிரி வினவியதற்கு, ராஸ் "நெப்போலியன் அவரது வாழ்நாளில் அழித்த மக்களின் எண்ணிக்கை பத்து லட்சம் இருக்கும். ஆனால், வெப்பப் பிரதேசங்களில் இந்த ஒட்டுண்ணிகளுள் ஒன்றினாலேயே அத்தனை மக்கள் ஓராண்டிலேயே மடிகின்றனர்" எனப் பதிலளித்தார்.

உண்மைதானே!




"நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பதை நீங்கள் ஒத்துக் கொள்கிறீரா?"

"அதெப்படி நான் ஒத்துக் கொள்ளுவது? நான் டாக்டராச்சே! என் செல்வம் அப்புறம் என்ன ஆவது?"

★

குமாஸ்தா: சார்! நம்மிடமிருந்து வேலையை விட்டு 'டிஸ்மிஸ்' ஆன சங்கு ராஜுவைப் பற்றி வேறு ஒரு ஆபீஸிலிருந்து விசாரிக்கிறார்கள். அங்கே வேலைக்கு அவன் மனுப் போட்டிருக்காப் போலே இருக்கு!

முதலாளி: அவன் சோம்பேறி, அயோக்கியன், 'பிராட்'. அவனுக்குச் சொந்தமா எதுவும் தெரியாது, எதையும் எங்களிடமிருந்துதான் கற்றுக் கொண்டான் என்று சொல்லி விடு!

★

சலவைத் தொழிலாளி: இன்னும் ஏதேனும் என்னிடமிருந்து பாக்கி வரவேண்டியதிருக்கா?

அவர்: ஜிப்பாவுக்கு இரண்டு கைகள் மட்டும்தான் கொண்டு வந்திருக்கே. மீச்சம் வரணுமே.

★

டாக்டர்: உங்கள் உடம்பு பாழாய்ப் போனதற்கு இப்புகையிலைதான் காரணம்!

நோயாளி: அப்பாடி! நீங்கள் ஒருவர்தான் குற்றத்தை என் மேல் போடாமல் புகையிலை மேல் போட்டீர்கள். என் மனைவி நான்தான் காரணம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள்!




★

"சுயநலம் கருதாத பெண்ணைத்தான் நான் கல்யாணம் பண்ணிப்பேன்!"

"உம்! சுயநலம் கருதற பெண் உன்னை ஏன் கல்யாணம் பண்ணிக்கப் போறா?"

★

டாக்டர்: தலைவலிக்கும் வயிற்றுவலிக்கும் என்ன வித்தியாசம் தெரியுமா?

நண்பர்: நீங்க கொடுக்கிற மருந்தைப் பொறுத்த வரைக்கும் எந்த வித்தியாசமும் இருக்கிறதாக எனக்குத் தெரியல்லே!

★

"உங்கள் கதைகள் சாகாம இருக்கணும்னு நீங்க உயர்ந்த கருத்துக்கள் கொண்ட கதை எழுதணும்!"

"இப்ப நான் சாகாம இருக்கிறதுக்குத்தானே பாடு பட்டுக் கொண்டிருக்கேன்!"

★

"ஊரிலேயிருந்து என் அக்கா பத்தாம் தேதி வருகிறார்களாம்!"

"வரட்டுமே! தாராளமாக வரட்டும்."

"அவளோடு ஐந்து பையன்களும் வருகிறார்களாம்...!"

"நன்றாக வந்து இருக்கட்டும். பட்டணத்தையெல்லாம் சுற்றிக் காண்பியுங்கள்!"

"ஆச்சரியமாயிருக்கே. நீ ஒரு ஆட்சேபணையும் சொல்லவில்லையே?"

"நான் ஏன் சொல்லுகிறேன்? நான்தான் ஒன்பதாம் தேதியே என் அம்மா வீட்டுக்குப் போவதாக முடிவு கட்டி விட்டேனே!"

★

ஜோசியர்:—உங்கள் ரேகைப்படி உங்களுக்கு இருபத்திநாலு வயதில் ஒரு பெரிய கண்டம் வந்திருக்கணுமே? நீங்கள் தப்பிப் பிழைத்திருப்பதே ஆச்சரியம்தான்!

கையைக் காட்டுபவர்: ஆமாம்! எனக்கு அந்த வயதில்தான் கல்யாணமாயிற்று!

★

நிருபர் (பிரபல சினிமா நட்சத்திரத்திடம்):—நீங்கள் இந்தப் படத்தில் வேலைக்காரியாகத் தத்ரூபமாக நடித்திருக்கிறீர்களே, இது எப்படி?

நடிகை: இரண்டு வருஷத்துக்கு முன்னாடி இருந்ததை அப்படியே நெனச்சுக்கிட்டேனுங்க!

★

ஒரு செய்தி: வெள்ளக் காட்சியைத் தத்ரூபமாகப் படமெடுக்கச் சென்றிருந்த அரோகரா படக் கம்பெனி டைரக்டர், காமிராமேன் காமிராவுடன் வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டனர். தயவு செய்து தேடுபவர்கள் காமிராவை மட்டும் கண்டு பிடித்துக் கீழ்க்கண்ட முகவரியில் தருமாறு அந்தக் கம்பெனியின் முதலாளி அறிவிக்கிறார்!

★




மின்சார விசிறி: எனக்கு ஒரே பயமாய்த் தலையைச் சுத்தறது....!

மின்சார விளக்கு: எனக்கு ஒரேயடியாய்க் கண்ணெல்லாம் எரிகிறது!



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

20

இறைவனுடைய அருளைப் பெற வேண்டும் என்பதற்காக மக்கள் விரதங்கள் காத்து, நோன்பு இருக்கிறார்கள். உடம்பை வருத்தி யோகப் பயிற்சி செய்கிறார்கள். துறவு பூண்டு சரீரத்தைத் துன்புறுத்தி இந்திரியங்களை ஒடுக்கப் பார்க்கிறார்கள். இவர்களை நோக்கிப் பாடுகிறார் திருமூலர், 'அன்பு ஒன்றினால்தான் என் அப்பனை அடைய முடியும் என்று!

என்பே விறகாய்
இறைச்சி அறுத்திட்டு

[என்பு - எலும்பு. இறைச்சி - தசை] எலும்பையே விறகாக அடுப்பில் போட்டு, உடம்பின் தசைகளையே கறிகாயைப் போல் வறுக்கும் சட்டியில் இட்டு,

பொன்போல் கனலில்
பொரிய வறுப்பினும்

தங்க நிறம் அடையும் வண்ணம் நன்றாகப் பொரியும்படி வறுத்தாலும்,

என்பே விறகாய்
இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல் கனலில்
பொரிய வறுப்பினும்

அதாவது கடுமையான தவங்களாலும் விரதங்களாலும் இந்த உடம்பை எவ்வளவு தூரம் வருத்தியபோதிலும்,

அன்பொடு உருகி
அகம்குழை வார்க்குஅன்றி

[அன்பொடு உருகி-அன்பினால் உருகி. அகம் குழைவார்க்கு அன்றி - உள்ளம் இளகி, நெகிழ்கிறவர்களுக்கு அல்லாமல், மற்றவர்களுக்கு.]

என்பொன் மணியை
எய்தஒண் ணாதே

[என் பொன்மணியை — தங்கமணியாகிய என் அப்பனை. எய்த ஒண்ணாது- அடைய முடியாது. 'என்' என்பது, திருமூலருடைய உள்ளம் அன்பினால் உருகிக் குழைவதைக் காட்டுகிறது.]

அன்பினால் உருகி உள்ளம் குழைந்தால் அல்லாமல், என் அப்பனை அடைய முடியாது! இதயம் உருகாமல் உடலை வருத்தி எத்தனை தவங்கள் இருந்தும் பயனில்லை. அன்பு ஒன்று தான் அவனை அடையும் மார்க்கம்.

என்பே விறகா
யிறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலில்
பொரிய வறுப்பினும்
அன்பொ டுருகி
அகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியை
எய்தவொண் ணாதே

உடலினை வருத்துவதை விட்டு, அன்பைச் செலுத்தி அதனால் தன்னுள்ளத்திலும் இன்பம் அடைந்து, இறைவனையும் திருப்தி செய்வதே முறை என்கிறார் முனிவர்.

அன்போடு மனம் குழைந்து இறைவனை வழிபடும் பக்தர்களுக்கு அவனுடைய அருள் எப்படிக் கிடைக்கிறது என்பதை இனிப் பாடுகிறார்.

ஈசன் அறியும்
இராப்பக லும்தன்னைப்
பாசத்துள் வைத்துப்
பரிவுசெய் வார்களை

[ஈசன் அறியும் - இறைவனுக்குத் தெரியும். இராப் பகலும் - இரவும் பகலும் அதாவது இடைவிடாமல், வேறு பொருள்களில் இச்சை செலுத்

தாமல், தன்னைப் பாசத்துள் வைத்து - அன்போடு இறைவனை ஆராதித்து, அதாவது தன்னையும் இறைவனையும் நன்ருகப் பிணைத்துக் கொண்டு. பரிவு செய்வார்களை - பக்தி செலுத்துகிற வர்களை.]

'ஈசன் அறியும்' என்று சொல்லும் போது, யார் அன்பு செலுத்து கிருர்கள், எவ்வளவு செலுத்து கிருர்கள் என்பதெல்லாம் ஈசனுக்குத் தெரியும். உலகத்தாருக்குத் தெரிய வேண்டியதில்லை என்பது முனிவர் கருத்து.

தன்னைப் பக்தியோடு வழிபடுகிற பக்தர்களை இறைவனுக்குத் தெரியும். அதனுல் நாம் செய்ய வேண்டியது என்ன?

தேசுற்று அறிந்து
செயலற்று இருந்திடில்

[தேசுற்று அறிந்து-தெளிவடைந்து, அந்த ஞானத்தோடு. செயலற்று இருந்திடில் - எல்லாம் ஈசன் செயலே, நமது செயல் ஒன்றுமில்லை என்று ஆணவம் ஒழிந்த நிலையிலே இருந்தால்.]

ஈசன்வந்து எம்மிடை
ஈண்டிநின் றுனே

[ஈசன் வந்து-இறைவன் அவனுகவே விரைந்து வந்து. எம்மிடை-எம்மிடத்தில். ஈண்டி நின்றுன் - ஆலிங்கனம் செய்வான்போல் மிக நெருங்கி நின்று கொள்வான். 'நின்றுனே' என்பதி லுள்ள இறந்தகால வினையும், 'ஏ' காரமும் உறுதியையும் அதிலுள்ள ஆனந்தத்தையும் காட்டுகின்றன.]

நமக்குத் தொழில் அன்பு செய்தல் ஒன்றுதான், வேறு செயல் இல்லை என்று சரண் புகுந்து இறைவனுக்குப் பக்தி செலுத்திஞேமாஞல், இரு வருள் தாஞகவே வந்து அணைத்துக் கொள்ளும்.

ஈசன் அறியும்
இராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப்
பரிவுசெய் வார்களை ;
தேசுற் றறிந்து
செயலற் றிருந்திடில்
ஈசன்வந் தெம்மிடை
ஈண்டிநின் றுனே !



# அஞ்சறைப் பெட்டி

உபாத்தியாயர் அன்றைக்கு ரொம்பக் கோபமாய்க் காணப் பட்டார். வகுப்பில் அவர் நுழைந்ததுமே மாணவர்கள் 'கப்சிப்' என்று அடங்கி ஒடுங்கி விட்டார்கள், ஒருவனைத் தவிர. 'டக்-டக்' 'டொக்-டொக்' என்று சத்தம் எழுந்தது, அவனிருந்த திக்கிலிருந்து.

பொல்லாத கோபம் வந்தது வாத்தியாருக்கு. "தடிப் பயலே! எழுந்து நில்லுடா! ராஜேந்திர சோழனின் இன்னொரு பெயரென்ன? சட்டென்று சொல்லு, விழிக்காமல்!" என்று இரைந்தார் அவர். "கங்கை கொண்ட சோழன் ஸார்!" பளிச்சென்று பதில் கிடைத்தது. ஆசிரியர் பிரமித்தார். "முதலாம் குலோத்துங்கனின் சேனாதிபதி யார்?" "கருணாகரத் தொண்டைமான் ஸார்!" உபாத்தியாயர் மூர்ச்சையே போட்டு விழுந்து விடுவார் போலிருந்தது. இவ்வளவு

"உண்மையான சோஷலிஸம் கிராமியத் தொழில் வளத்தைப் பெருக்கிக் கொண்டு போவதில்தான் இருக்கிறது. பெருவாரியான உற்பத்தியின் பலனாக மேல்நாடுகளில் ஏற்பட்டிருக்கும் குழப்பமான நிலைமையை நம் நாட்டிலும் உண்டாக்குவதை நாம் விரும்பவில்லை" என்றார் ஸர்தார் படேல். (ஆமதாபாத், ஜனவரி 3, 1935) இதனை நேருஜி அன்றைக்கும் ஏற்றுக் கொள்ளவில்லை; இன்றும் ஒப்புக் கொள்ள மறுக்கிறார்.

பார்டோலியில் அதிகப்படியான வரி விதிப்பை எதிர்த்த விவசாயி களுக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்றார் வீர வல்லபர். அவர் பெற்றுத் தந்த சலுகைகள் ஒருபுறமிருக்க, நாடு முழுவதிலுமிருந்த விவசாயிகளிடையே ஏற்பட்ட புது விழிப்பும் உற்சாகமும் நம்பிக்கையுமே

இயந்திர சகாப்தத்தைக் கேலி செய்யும் வகையில் சார்லி சாப்ளின் ஒரு திரைப்படம் எடுத்தார். சாப்பிடுவதற்குக்கூடக் கைகளை உபயோகிக்க விரும்பாமல் அதற்கென ஓர் இயந்திரத்தை அமைத்துக் கொண்டார். இயந்திரம் உணவை எடுத்து அவர் வாயில் வைக்கும். சாப்ளின் மென்று விழுங்குவார். திடீரென்று இயந்திரத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டுக் கனவேகமாக உணவுப் பொருட்களைச் சாப்ளினின் வாயில் திணிக்கத் தொடங்கி விட்டது. எவ்வளவு வேகமாக விழுங்கி னாலும் இயந்திரத்தின் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியவில்லை அவரால்!

சாப்ளினின் நகைச்சுவையில் ஏதேனுமொரு கருத்தும் இல்லாமல் போகாது. லண்டனில் பிறந்த சார்லி சின்னஞ்சிறு குழந்தையாக இருந்தபோதே மேடை நடிகரானார். பின்னர் அமெரிக்கா சென்று

60,000 மைல் நீளமுள்ள ரத்தக் குழாய்கள் நம் உடலில் உள்ளன என்றால் நம்புவது கஷ்டமாக இருக்கும். ஆனால் அது உண்மை! இருதயம் நிமிஷத்துக்கு எழுபது முறை இயங்கி ரத்தக் குழாய்கள் வழியே ஒன்றரை காலன் ரத்தத்தை அனுப்பிக் கொண்டேயிருக்கிறது. இதில் இரண்டு பைண்டு ரத்தத்தை ஒரே சமயத்தில் இழக்க நேரிட்டாலும் திடகாத்திர மான ஒரு மனிதனுக்குத் தீங்கொன்றும் நேராது. ஆனால் ரத்த தானத் தின் தேவை மிக அதிகமாயிருந்த உலக மகா யுத்தங்களின் போதுகூட ஒரு தடவைக்கு ஒரு பைண்டு ரத்தத்தைத்தான் ஏற்றுக் கொண்டார்கள். இப்படி வருஷத்தில் ஒருவன் ஐந்து முறைகள் வரை தானம் தரலாம். பிறரது ரத்தத்தை நோயாளியின் ரத்தக் குழாய்களுள் செலுத்தலாம் என்ற யோசனை 1600-ம் வருஷத்திலேயே இத்தாலிய வைத்தியர்

அதிகாலையில் எழுந்திருந்து ஸ்ரீஹரி என்று சொல்லி விட்டுக் கலப் பையை எடுத்துக் கொண்டு போய் நாள் முழுதும் வயலில் உழுது விட்டு இரவில் படுக்கைக்குச் செல்லும்போது இன்னொரு தரம் ஹரி நாமஸ்மரணம் பண்ணிய ஒரு குடியானவனைக் கண்டார் நாரதர். 'பக்திமானாகத் தோன்றவில்லை' என்று தமக்குள் எண்ணிக் கொண்டு பரந்தாமனிடம் சென்று தமது அபிப்பிராயத்தை வெளியிட்டார்.

பகவான் நாரதரைப் பார்த்து, "எண்ணெய் நிரம்பிய இந்தக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு இந்தப் பட்டணத்தை ஒரு தரம் சுற்றி வாரும். ஆனால் ஒரு துளி எண்ணெய்கூடக் கீழே சிந்தாமல் ஜாக்கிரதை யாக இருக்க வேண்டும்" என்றார். நாரதர் அவ்விதமே செய்து பகவானிடம் திரும்பி வந்தபோது, "எத்தனை தடவை என்னை





குடிகையான ஒரு பையனுடு தன் வகுப்பில்? "சிப்பாய்க் கலகம் நடந்தது எந்த வருஷம்?" "1857-ல் ஸார்!"

"டேய்! வா, இப்படி!" என்றார் உபாத்தியாயர் ஆச்சரியம் தாங்காமல்.

பையன் நடுங்கிக் கொண்டே வந்து சேர்ந்தான்!

"யாருடா நீ? உன் பேரென்ன?"

"நான் ஒன்றும் பண்ணலீங்க. அந்த மேஜையின் கால் ஒடிஞ்சு போச்சுன்னு ரிப்பேர் பண்ண நயினா அனுப்பிச்சாருங்க என்னே. சரி பண்ணிட்டேன்!" என்று கூறித் தச்சன் மகன் சிங்காரம் ஓட்டம் பிடித்தான்!



பார்டோலி சத்தியாக்கிரகத்தின் உண்மையான வெற்றியாகும். ஒரு சமயம் அநியாயமாக விவசாயிகளைத் தூண்டி விடுகிறீர்களாமே? கட்டு மீறினால் அவர்களைக் காவலில் வைக்குமாறு 'ஸர்தாரிட'மிருந்து உத்தரவு வந்திருக்கிறது என்று படேலுக்குப் பூச்சாண்டி காட்டினார் ஒரு சில்லறை அதிகாரி.

"ஸர்தாரா? யாரது ஸர்தார்? என் மக்களுக்கு என்னைத் தவிர வேறு ஒரு ஸர்தாரைத் தெரியாது; கிடையாது!" என்றார் பட்டேல் கம்பீரமாக. அன்று முதல் 'ஸர்தார்' என்ற பெயர் அவருக்கு நிலைத்து விட்டது! இத்தகைய அஞ்சா நெஞ்சினரை இரும்பு மனிதர் என்று அடைமொழி போட்டும் பாரத நாட்டினர் அழைத்ததில் வியப்பில்லைதானே!



திரைப் படங்களைத் தயாரித்தார். உலக முழுதிலுமுள்ள லட்சோப லட்சம் மக்கள் அவரைத் திரையில் பார்த்துச் சிரித்திருக்கிறார்கள். ஆனால் அவரது சொந்த வாழ்க்கை ஒரு சோகக் கதைதான். விவாகரத்து வழக்குகளும், தந்தை-மக்கள் உறவு முறை பற்றிய வழக்குகளும் இடம் பெற்ற கசப்பான வரலாறு அது. பெரியோர்கள் பலர் அவரை மகாமேதை எனப் போற்றிப் புகழ்ந்துள்ள போதிலும் வேறு பலர், தம்மை வளர்த்து லட்சாதிப் பிரபுவாக்கிய அமெரிக்காவுக்குத் துரோகம் செய்யும் வகையில் அவர் ருஷ்யக் கம்யூனிஸத்தின் சார்புள்ளவராக எப்படி விளங்கலாம் என்று கேட்கத் தொடங்கினார்கள்.



ஒருவருக்குத் தோன்றியது. ஆனால் யோசனை நிறைவேற்றப் பட்டதும் பல நோயாளிகள் திடீரென்று மரணமடைந்தனர். புதிரை விடுவிக்க முந்நூறு வருஷங்கள் பிடித்தன. ரத்தங்களில் மொத்தம் நான்கு வகை என்பதைக் கண்டுபிடித்தார் டாக்டர் லாண்டு ஸ்டெய்னர். ரத்த தானம் அளித்தவரும் அதனைப் பெற்றுக் கொள்ளும் நோயாளியும் ஒரேவகை ரத்தமுடையவர்களா யிருத்தல் வேண்டும். இல்லையேல் ஆபத்துத்தான்.

ரத்தத்திலுள்ள செலப்பு, வெள்ளணுக்களை அகற்றி விட்டால் கிடைப்பது பிளாஸ்மா. இதனைப் பயன்படுத்துவதால் அபாயமேதுமில்லை. கோரமான போர்க் களங்களில்கூட இதனை உபயோகித்துப் பலருக்கு வாழ்வளித்திருக்கிறார்கள்.



நினைத்தீர்?" என்று பகவான் கேட்டார். "பிரபோ! ஒரு தரம்கூட நினைக்கவில்லை. என்னைப் நிரம்பிய கிண்ணத்தின்மீது கவனமாக இருக்கையில் வேறு ஒரு ஞாபகமும் வரவில்லை" என்று நாரதர் பதில் சொன்னார்.

"நல்லது நாரதரே! இந்த ஒரு கிண்ண எண்ணெயினால் நீர் என்னை முற்றிலும் மறந்து போனீர். ஆனால் அந்தக் குடியானவன் பாரமான சம்ஸாரச் சுமையைத் தாங்கிய போதிலும் தினம் தவறாமல் இரண்டு தரம் என்னை ஸ்மரிக்கிறான்" என்று பகவான் கூறி அருளினார்.

— பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

# வாழ்க மணமக்கள்



போளூர் கல்கி விற்பனையாளர் திரு சோமசுந்தரத்துக்கும், திரு சீனிவாசகம் பிள்ளையின் புதல்வி சௌ. சண்முகத்தம்மாளுக்கும் திருமணம் சிறப்பாக நடந்தது.



திருவல்லிக்கேணி நேஷனல் ஸ்டோர்ஸின் அதிபர் திரு ஆர். எஸ். மணி அவர்களின் புதல்வி சௌ. மதுராம்பிகைக்கும், திரு சேஷாத்திரிக்கும் விவாகம் விமரிசையாக நடைபெற்றது.



ரயில்வே கண்டிராக்டர் திரு சுந்தரமய்யர் அவர்களின் புதல்வர் திரு ராமமூர்த்திக்கும், சௌபாக்கியவதி கல்யாணிக்கும் கல்யாணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.



ரங்கசாமி நாடார் அவர்களின் குமாரர் திரு பெரியசாமிக்கும், மிராசுதார் திரு ராம ராமானுஜத்தின் குமாரி சௌ. ஸ்ரீதேவிக்கும் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.



புது தில்லி திரு கிருஷ்ணமாச்சாரியாரின் புதல்வி சௌ. கோமளவல்லி குளித்தலை திரு சேஷய்யங்காரின் புதல்வர் திரு கிருஷ்ணசாமியை மணம் புரிந்து கொண்டார்.



கான்பூர் இல்பார்ன் கம்பெனியின் மானேஜர் திரு வி. வி. எஸ். மணியன் அவர்களின் புதல்வி சௌ. அன்னபூரணிக்கும், திரு வேங்கடராமனுக்கும் விவாகம் நடந்தேறியது.

# புது வெள்ளம்

## அத்தியாயம் ஏழு

## சித்திரப் பாவை

அகிலன்

**வா**ழ்க்கை என்பதே ஒரு வகையில் ரயில் பிரயாணம் போன்றதுதான். பிறப்பும் இறப்புமாகிய இரண்டு எல்லைகளுக்குள்ளே மனிதன் பலரைச் சந்திக்கிறான். சிலரோடு பழகுகிறான்; சிலரைப் பிரிந்து விடுகிறான்.

இந்தப் பிரயாணத்துக்கிடையில் அவனுக்குக் கிடைக்கும் சில இன்பகரமான அனுபவங்களும் துன்பகரமான அனுபவங்களும் அவனால் மறக்க முடியாதவை.

முருகையனுக்கு விழுப்புரம் சந்திப்பில் ஏற்பட்ட அந்தச் சிறிய அனுபவமும் அவனால் மறக்க முடியாத ஒன்றுதான். எதிர்பாராத இடத்தில், எதிர்பாராத நேரத்தில், எதிர்பாராத ஒருத்தியைச் சந்தித்து விட்டான். அதனால் ஏற்பட்ட ஆனந்தப் பெருக்கிலிருந்து அவன் மீள்வதற்கே அவனுக்குச் சில விநாடிகள் தேவைப்பட்டன.

முருகையனின் இதயம் கண்களின் வழியே பொங்கிச் சித்திராவின் முகத்தில் இன்ப நடனம் புரிந்தது. கண்கள் இமைப்பதை மறந்தன.

''என்ன அத்தான் இப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்றாள் சித்திரா. ''வாய் திறந்து பேசவே மாட்டீர்கள் போலிருக்கிறதே! உங்களை இந்த இடத்தில் பார்த்தது எனக்கு எவ்வளவு! சந்தோஷமாக இருக்கிறது, தெரியுமா?''

வாய் திறந்து அவன் பேசாத பேச்சை அவள் புரிந்து கொள்ளவில்லையோ, அல்லது போதாதென்று இன்னும் அதிகமாக அவனிடம் சித்திரா எதிர்பார்த்தாளோ, தெரியவில்லை. அவனைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்பிலே அவளுடைய மல்லிகை மொட்டுக்களான பற்கள் நறுமணத்தை வாரி வீசின. சிரிப்புக்குக்கூட மணம் உண்டா?

''ஒன்றுமில்லை சித்திரா!....'' என்று பேசுவதற்கு வெட்கப்பட்டுக்கொண்டே, நாணித் தலை குனிந்தான் முருகையன். ''நீ.... நீ கூட இப்போது முன்பிருந்ததைவிட அடையாளம் தெரிந்துகொள்ளாதபடி வளர்ந்திருக்கிறாய்.''

''பார்த்தால் பேச வரவில்லை; பேசினால் பார்க்க முடியவில்லை. நல்ல வெட்கம் உங்க



ளுக்கு!'' என்று பரிகசிக்கத் தொடங்கி விட்டாள் சித்திரா.

முருகையனே மிகவும் துணிவோடு பேசக் கூடியவன்; எதையும் செய்யக் கூடியவன். ஆனால் அவனுடைய பேச்சும் செயலும் ஆண்களுக்கு மத்தியில்தானே தவிர, பெண்களுக்கு முன்னாலல்ல. பெண்களுடன் பழக வேண்டிய சூழ்நிலையே அவனுக்கு ஏற்பட்டதில்லை. அப்படி ஏதாவது அவன் பழகியிருந்தால் அதுவும் சித்திராவிடம்தான். மூன்று வருடங்களுக்கு முன்பு அவன் கண்ட சித்திராவா இவள்...?

''நான்கூட உங்களைப் பற்றி விசாரித்து மாமாவுக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தேன். சிறையிலிருந்து இன்னும் திரும்பவில்லையென்று பதில் வந்தது'' என்றாள் சித்திரா.

''நானும் அப்பாவுக்கு எழுதியிருந்தேன்'' என்றான் முருகையன். ''நான் சிறைப்பட்ட அன்றைக்கு ஊரை விட்டுத் திரும்பியவர்கள் பிறகு அங்கு போகவே இல்லையாமே? கிராமத்துக்கு மறுபடியும் வந்தீர்களா என்று அப்பாவிடம் கேட்டிருந்தேன்....''

''ஓ! உங்களுக்குக்கூட என்னைப்பற்றி நினைவிருக்கிறதா!'' என்றாள் சித்திரா. ''அப்படி நினைவிருந்தால் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கக் கூடாது? சிறையிலிருந்து நேரே சென்னைக்கு நம் வீட்டுக்கு வந்திருக்கக் கூடாது?— திடீரென்று உங்களை வழிமறித்துக் கொண்டவுடன் சமாதானம் சொல்லுகிறீர்கள்; அவ்வளவுதான்!''

முருகையனுக்குச் சித்திரா இவ்வளவு உரிமையுடன் பேசியது வியப்பைத்தான் தந்தது. நெருங்கிய உறவாக இருந்தாலும் தூரத்துப் பழக்கமுள்ளவர்கள் சித்திராவின் வீட்டுக்காரர்கள். சித்திரா மட்டிலும் அவர்களைப் போலல்லாமல் அவனிடம் உரிமை கொண்டாடியது அவனுக்குப் பெருமையாக இருந்தது.

''சென்னைக்கு வந்திருப்பேன். ஆனால் உன்னையும் அத்தையையும் தவிர, மற்றவர்களிடம் எனக்குப் பழக்கமில்லை. உன்னுடைய அண்ணாக்களையும் எனக்கு நன்றாகத் தெரியாது. அதனால்தான் அங்கு வரவில்லை.''

''வராமல் போகாமல் இருந்தால் எப்படித் தெரிந்து கொள்ள முடியும்? உங்களைப் பற்றி வீட்டில் எல்லோருக்கும் தெரியும். நீங்கள் சிறைக்குப் போனதற்குக்கூட வீட்டில் எல்லோரும் முணுமுணுத்தார்கள். நான்தான் உங்கள் கட்சியிலிருந்து கொண்டு அவர்கள் வாயை அடைத்தேன்.''

அவள் தன் சிறிய அண்ணன் மாணிக்கத்தின் குடும்பத்தோடு மாயவரத்துக்குப் போய் விட்டுச் சென்னைக்குத் திரும்பும் விவரத்தைக் கூறினாள். அண்ணனும் அண்ணியும் வண்டிக்குள் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார்களாம். அவர்களை எழுப்பி அவனை அறிமுகம் செய்து வைப்பதாகத் தெரிவித்தாள்.

''வேண்டாம், சித்திரா! தூக்கத்தில் எழுப்பி அவர்களுக்குத் தொல்லை கொடுக்க வேண்டாம்'' என்று தடுத்தான் முருகையன்.

''அதெல்லாம் முடியாது! உங்களை எங்களோடு சென்னைக்கு அழைத்துக் கொண்டு போவதென்று முடிவுசெய்து விட்டேன். நீங்கள் இப்போது எங்களுடன் சென்னைக்கு வருகிறீர்கள். ஒரு வாரம் வீட்டில் தங்கி விருந்து சாப்பிட்டுவிட்டு, என்னோடு ஊரைச் சுற்றிப் பார்க்கிறீர்கள்! பிறகு உங்கள் கிராமத்துக்குக் கிளம்புகிறீர்கள்!''

''அப்பா அங்கே ஆவலோடு காத்துக் கொண்டிருப்பார், சித்திரா!''

''எழும்பூர் போனவுடன் அவருக்கு விவரமாய் ஒரு தந்தி கொடுத்துவிட்டால் போகிறது. இவ்வளவு நாட்கள் பொறுத்தவருக்கு இன்னும் ஒரு வாரம் பொறுக்க முடியாதா, என்ன? நீங்கள் ஒன்றும் பச்சைக் குழந்தையுமில்லை; எங்கள் வீடு சிறைச்சாலையைவிட மோசமான இடமுமில்லை.''

சித்திரா வக்கீலுக்குப் படித்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறது என்று நினைத்துக் கொண்டான் முருகையன். எவ்வளவு அழகாக, எவ்வளவு சாமர்த்தியமாக, எவ்வளவு துணிவோடு பேசுகிறாள்!

''இப்போது என்னால் வரமுடியாது, சித்திரா! அப்பா நான் சிறைப்பட்டதிலிருந்து மிகவும் நொந்து போயிருக்கிறார். அவரைப் போய்ப் பார்த்துவிட்டுப் பிறகு நானே சென்னை வருகிறேன். கட்டாயம் வருகிறேன். இப்போதைக்கு நீ என்னை மன்னித்துவிடு.''

அவனுடைய முடிவான பிடிவாதத்தைக் கண்டு சித்திராவின் முகம் சுருங்கியது. ''ஹூம்! நான் சொன்னால் கேட்பீர்களா? மகாத்மா காந்தி சொன்னால் உயிரைக்கூடத் தியாகம் செய்வீர்கள். உங்கள் அப்பாவைப் பார்ப்பதற்கென்றால் சிறைக் கோலத்தோடு ஓடுவீர்கள். நான் கூப்பிட்டால் மாத்திரம் மதிக்க மாட்டீர்கள்!''

அவளுடைய இந்தச் சொற்கள் முருகையனைச் 'சுருக்'கென்று தைத்தன. ஆனால், அதற்காக அவன் விட்டுக் கொடுக்கவும் இல்லை. அப்போது வண்டிக்குள்ளிருந்து, ''சித்திரா!'' என்று ஓர் ஆண் குரல் எழுந்தது.

"வீட்டுக்கு வராவிட்டாலும் அண்ணாவையாவது வந்து பாருங்கள். அவர் விழித்துக் கொண்டு விட்டார்!"

சித்திராவுடன் சென்று அவளுடைய சிறிய அண்ணன் மாணிக்கத்துக்கும் அவர் மனைவிக்கும் கைகூப்பினான் முருகையன். அவனைப் பற்றிய விவரங்களைச் சித்திரா மாணிக்கத்திடம் சொல்வதற்கு முன்பு அவர் அவனை ஒரு விதமாக முகத்தைச் சுளித்துக் கொண்டு பார்த்தார். அவருடைய முதற் பார்வை அவனை வரவேற்கக் கூடியதாக இல்லை. ஆனால் விவரம் தெரிந்தவுடன் அவர் தம்மை மாற்றிக் கொண்டு விட்டார்.

வயது முப்பதுக்குள்ளிருந்தாலும் அவருடைய இளம் தொந்தி சட்டைக்கு மேல் தெரிந்தது. நறுக்கு மீசையும் ஒட்ட வெட்டிய கிராப்புத் தலையும் உருண்டை வடிவமுமாகக் காட்சியளித்தார் அவர். அவருடைய மனைவி ஒல்லியாகவும் நோயாளி போலவும் தோன்றினாள். அவள் தேகமெங்கும் தங்கம் மினுமினுத்தது.

"வாங்க தம்பி! வாங்க! பெரிய பாளையத்து மாமாவோட பிள்ளை நீங்கதானா? இப்படி உட்காருங்க!" உற்சாகத்தை வரவழைத்துக் கொண்டு முருகையனுக்கு வரவேற்பளித்தார் மாணிக்கம். "அம்மாவும் சித்திராவும் உங்களைப் பற்றி ரொம்பச் சொல்லியிருக்காங்க. அவங்களோட சேர்ந்து கிராமத்துக்குப் புறப்படலாம்னு பார்த்தா எங்கே முடியுது?" என்றார்.

"பட்டணத்திலே குடியிருக்கிறவர்களுக்கு எங்கே சொந்தக்காரர்களைப் பற்றி நினைக்க நேரமிருக்கிறது? இப்படி எப்போதாவது சந்தித்தால்தான்" என்று தன் கணவனுக்கு ஒத்துப் பாடினாள் அவர் மனைவி.

சித்திரா மீண்டும் தன் கோரிக்கையை அவர்களுக்கு மத்தியில் தொடங்கினாள். "இப்படியே சென்னைக்கு வரச் சொல்லிக் கேட்டுக் கொண்டேன். இவர் மாட்டேன் என்கிறார் அண்ணா!"

"ஏன், வந்துவிட்டு வரலாமே!" என்று தம் தங்கைக்காக ஒரு வார்த்தை கூப்பிட்டு வைத்தார் மாணிக்கம். முருகையன் முன்போலவே அதைப் பணிவோடு மறுத்தான். பிறகு, மாணிக்கம் பொதுவாகச் சில விஷயங்களைப் பேசிவிட்டு, "சித்திராவோட நீங்க பேசிக்கிட்டிருந்ததைப் பார்த்து நான் வேறே யாரோன்னு நினைச்சிட்டேன். ஆளைப் பார்த்தால் நஞ்சையும் புஞ்சையுமாய்ப் பத்துக்காணி நிலத்துக்குச் சொந்தக்காரப் பிள்ளை மாதிரியா தோணுது?" என்றார் சிரித்துக் கொண்டே.

முருகையனுக்கு இப்போது ரயிலைப் பற்றிய நினைவு வந்து விட்டதால் அவன் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு எழுந்தான்.

"தம்பி! ஒரு சின்ன சமாசாரம்!" என்றார் மாணிக்கம்.

"என்ன?"

"ஊருக்குப் போனவுடனே ஒரு ரெண்டு மூட்டை சீரகச் சம்பா அரிசி அனுப்பி வையுங்க. காலம் ரேஷன் காலமாய்ப் போச்சு. எதையெடுத்தாலும் பங்கிடுகிறான்; கட்டுப்பாடுங்கிறான். பட்டணத்திலே நல்ல அரிசிக்கே பஞ்சம் வந்திருக்கு."

"தாராளமாய் அனுப்பி வைக்கிறேன்" என்று மிகவும் உற்சாகமாய்ப் பதிலளித்தான் முருகையன். தன்னிடம் அவர் அந்தச் சிறிய உதவியைக் கேட்டது அவனுக்குப் பெருமையாக இருந்தது.

"வேண்டாம், அத்தான்! நீங்கள் ஒன்றும் சிரமப் படவேண்டாம்!" என்று குறுக்கிட்டாள் சித்திரா. "அதில் எவ்வளவோ ஆபத்து இருக்கிறது. இந்தக் காலத்தில் ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு அரிசி அனுப்புவது சட்ட விரோதம்."

மாணிக்கத்துக்குச் சித்திராவின் குறுக்கீடு தர்ம சங்கடமாகப் போய்விட்டது. அத்துடன் அவள் நிற்காமல் தன் அண்ணனைப் பார்த்து, "அண்ணா! இப்பத்தான் இவர் சிறையிலிருந்து வெளியே வந்திருக்கிறார். திரும்பவும் இவர் அங்கே போக வேண்டுமா?" என்று கேட்டாள்.

மாணிக்கத்துக்கு இப்போது சித்திராவை அப்படியே மென்று தின்று விட வேண்டுமென்று தோன்றியது. ஒரு வழியாக நிலைமையைச் சமாளிப்பதற்கு முன் வந்தார். "வேண்டாம் தம்பி! பாவம்! சிறு பிள்ளை! சாமர்த்தியக் காரப் பிள்ளையாக இருந்தால் இருபது மூட்டை கூட அனுப்பி வைக்கலாம். உனக்குச் சாமர்த்தியம் பத்தாது; விட்டுத் தள்ளு!"

முருகையன் இந்தப் பேச்சுக்களிலிருந்து தப்பித்துக் கொள்ள விரும்பினான். அதற்கேற்றாற்போல் அவனுடைய ரயிலின் முதல் மணியும் அடித்துவிட்டது. பெட்டியிலிருந்து கீழே இறங்கினான். சித்திராவும் அவனுடன் தொடர்ந்து வந்தாள்.

"அத்தான் மறந்துவிடக் கூடாது. கட்டாயம் சென்னைக்கு வரவேண்டும். ஏமாற்றி விடமாட்டீர்களே!"

"கட்டாயம் வருகிறேன், சித்திரா! நான் சிறைக்குப் போகும் போதும் நீ பக்கத்திலிருந்தாய். இப்போது திரும்பி

வரும் போதும் உன்னைத்தான் முதலில் பார்த்தேன். வருகிறேன், சித்திரா!''

''வரும்போது எனக்கு என்ன கொண்டு வருகிறீர்கள்?''

''என்ன வேண்டும்?''

''வாய்க்கால் கரைச் செவ்விளநீரை மரமேறிப் பறித்துப் போட்டீர்களே, நினைவிருக்கிறதா? அதையெல்லாம் இப்போது கொண்டு வர முடியாது. தோட்டத்துத் தக்காளிப் பழமும், ஒரு கொத்து மருக்கொழுந்தும் கொண்டு வாருங்கள்.''

ஒரு கணம் வியப்போடு அவளைப் பார்த்து விட்டு' ''கொண்டு வருகிறேன், சித்திரா!'' என்று சொல்லிக் கொண்டே, நகர்ந்துவிட்ட தன்னுடைய ரயிலில் ஓடி வந்து ஏறினான் முருகையன். அவளுடைய உருவம் மறையும் வரையில் தனது கரத்தை ஆட்டினான்.

வண்டிக்குள்ளிருந்த குருசாமி மெதுவாக எழுந்து வந்து முருகையன் காதில் கூறினான். ''அண்ணா! அற்புதமான ஒரு காதல் நாடகத்தை நான் இதுவரை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன், அண்ணா!'' முருகையன் தனக்குள் சிரித்துக் கொண்டான்.



## அத்தியாயம் எட்டு

# கலைஞனின் நிலை

சென்னையில் ரயிலேறிய ஏழையின் குடும்பம் விழுப்புரம் தாண்டியவுடன் முருகையனுக்குப் பக்கத்தில் வந்து சேர்ந்தது. அவர்கள் முன்பு உட்கார்ந்திருந்த இடத்தில் முரடனின் முணுமுணுப்பும், மிரட்டல் பார்வையும், மறைமுகத் தொல்லைகளும் தாங்க முடியாத அளவுக்குப் போய்க் கொண்டிருந்தன. விழுப்புரத்தில் பிரயாணிகள் சிலர் இறங்கி விட்டதால் முருகையனுக்கு அருகில் தாராளமாக இடமும் இருந்தது. அங்கே வந்து விட்டார்கள்.

தன்னைச் சுற்றிலும் மிக நெருக்கமான இடத்தில் ஏழைமைத் தோற்றத்தின் பயங்கரக் காட்சியைக் கண்டவுடன் முருகையனின் ,மனம் புழுவாய்த் துடித்தது. ஏற்கனவே அவன் தன் கிராமத்திலும் திருச்சி நகரத்திலும் கண்டு பழகினவன்தான் என்றாலும் அவன் சிறைக்குப் போய் விட்டுப் புது மனிதனாக வந்திருந்தான்.

அவனைப் போலவே சிறைக்கு வந்தவர்களில் ஒரு வயது முதிர்ந்த பேராசிரியரும் இருந்தார். அவரிடம் அவன் கற்றுக் கொண்டவை, திருக்குறளும் காந்தியடிகளின் வாழ்க்கைச் சரித்திரமும். இவை இரண்டையும் முருகையனுக்குச் சொல்லி வைத்து உலக வரலாற்றையே அவனுக்குப் புரிய வைத்து விட்டார்.

முருகையன் அந்த ஏழையிடம் அவன் வரலாற்றை அறிந்து கொள்ளும் ஆர்வத்தில் அவனைப் பற்றி விசாரித்தான்.

அவன் பெயர் முனியாண்டி. ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு வரையில் தென்னார்க்காடு கிராமம் ஒன்றில் விவசாயக் கூலியாக வாழ்ந்தவன். கிராமத்தில் மக்களின் தொகை பெருகி விட்டதால் பிழைப்புக்கு வழி இல்லை. பட்டணத்துக்கு வந்துவிட்டான். பட்டணத்தில் படாத பாடு பட்டு, கடைசியாக ரிக்ஷா இழுப்பதில் முனைந்து விட்டான்.



இப்போது அவன் ரிக்ஷாக்கார முனியாண்டி.

''சாமி! ரிக்ஷா இழுக்கிறதிலேயும் அடாபிடிக்காரனுங்க சில பேர்கள் இருக்கிறானுங்க. நான் பஞ்சத்துக்கு ரிக்ஷா இழுக்கிறவன். எனக்குத் தப்பு தண்டா விவகாரம் பிடிக்காது சாமி!''

முருகையன் புன்முறுவல் பூத்துவிட்டு முனியாண்டிக்குப் பக்கத்தி லிருந்த அவன் மைத்துனனைச் சுட்டிக் காட்டி ''இவன் என்ன வேலை செய்கிறான்?'' என்று கேட்டான்.

''வேலைக்காக அலைஞ்சுக்கிட்டிருக்கான். பட்டணத்திலே முனைஞ்சு பார்த்தால் ஏதாவது வேலை கிடைக்காமல் போகாது; மூட்டை தூக்கலாம்; வண்டி இழுக்கலாம்; தோட்ட வேலை செய்யலாம்; ஆனால் இவனோட முதுகு வளைய மாட்டேங்குது.''

இப்போது குருசாமி குறுக்கிட்டான். ''உனக்குக் குடும்ப பாரம் முதுகு மேலே அழுத்துது. நீ குனிந்து கொடுத்து ரிக்ஷாவோட நுகத்தடியிலே உன்னை மாட்டிக்கிட்டே! இவனுக்குக் கவலையில்லே; ஊர் சுத்தறான். அப்படித்தானே ..?''

முனியாண்டியின் மைத்துனன் குருசாமியைச் சுட்டு விடுவது போல் விழித்துப் பார்த்தான். அவனுடைய தோற்றமும் பார்வையும் அவ்வளவு சரியாயில்லே.

''முழிக்காதே, தம்பி! உழைக்கணும், உழைக்கணும், உழைச்சுப் பிழைக்கணும்!'' என்றான் குருசாமி.

முருகையன் அந்தக் குடும்பத்து மனிதர்களை ஒவ்வொருவராய்ப் பார்த்துவிட்டு ஒரு கணம் யோசனை செய்தான். பிறகு பேசினான்.

''முனியாண்டி! காவேரிப் பாசனத்திலே எங்களுக்குக் கொஞ்சம் நிலம் இருக்கு. எங்க கிராமத்திலே உங்களுக்குக் குடியிருக்க வீடும் கிடைக்கும். விவசாயம் பண்ணி நிலத்திலே பாடுபட உங்க இரண்டு பேருக்கும் விருப்பமிருந்தால், நான் வேலை கொடுக்கிறேன். சாப்பாட்டுக்கும் துணிக்கும் நீங்க கஷ்டப்பட வேண்டாம். குடும்பத்தோட எல்லோரும் கிராமத்துக்கு வந்து விடலாம்.''

குருசாமி வியப்போடு முருகையனை நிமிர்ந்து பார்த்தான். அதுவரையில் அவனைத் தன்னைப்போல் ஓர் ஏழை என்றே நினைத்திருந்த குருசாமிக்கு இப்போது ஆச்சரியமாக இருந்தது. 'அண்ணன் தாராள மனசு படைச்ச

கிராமவாசி; பெரிய குடும்பத்துப் பிள்ளை போல் தெரியுது' என்று தனக்குள் கணக்குப் போட்டுக் கொண்டான்.

ஆனால் முனியாண்டி முருகையனின் அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. ''சாமி! நாங்க பட்டணத்திலேயிருந்து பழக்கப்பட்டு விட்டோம். கஷ்டமோ, சுகமோ, கடற்கரைக் காத்துக்கு அடிமைப்பட்டுப் போயிட்டோம். இனிமே என்னாலே ஏர் பிடிக்க முடியாது. வயல் வரப்பிலே கால் வைக்க முடியாது.''

முருகையன் இந்தப் பதிலை எதிர் பார்க்கவே யில்லை. திடுக்கிட்டான். பழக்கத்துக்கு அடிமைப்பட்ட மனிதனை அதிலிருந்து மாறச் செய்வது மிகவும் சிரமம் என்று அப்போதுதான் அவனுக்குத் தோன்றியது. ''சரி, முனியாண்டி! உனக்குச் சம்மதமில்லேயென்றால் நான் கட்டாயப்படுத்த வில்லே'' என்றான்.

''அண்ணே! நான் உங்க கிராமத்துக்கு வந்திடட்டுமா?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் குருசாமி.

''நான் விளையாட்டுக்குச் சொல்லிறேன்னு நினைக்காதீங்க. இந்தச் சினிமா வந்தாலும் வந்தது. நாடகக் கம்பெனிகளோட இடுப்பையே முறிச்சுப் போட்டுடுச்சு. ஆயிரக்கணக்கான பேரு நாங்க அவதிப்பட்டுக் கிட்டிருக்கோம். பத்து இருபது பேரு மாத்திரம் சினிமாவாலே பிழைச்சுக்கிட் டிருக்காங்க.''

''நாடகக் கலைக்கே ஆபத்து வந்திருக்கிறதென்று சொல்றீங்களா?''

''அண்ணே! கலை-கத்திரிக்காய்ங்கிறதெல்லாம் புளிச்சேப்பக்காரன் பேசற பேச்சு. கலையை வளர்க்கறதுக்காக நான் நாடகக் கம்பெனியிலே சேரலே. சின்ன வயசிலே வீட்டிலே சோறில்லாமல் விரட்டிட்டாங்க. வயித்தை வளக்கறதுக்காக அதிலே சேர்ந்தேன். ஒரு வேளைச் சாப்பாடு, இரண்டு வேளை பலகாரம், இதுக்காகத்தான் நான் நடிகனானேன். கம்பெனியிலே இருந்த எல்லாப் பையன்களும் இப்படி வந்தவங்கதான். எங்களை அடிச்சு, உதைச்சு, சர்க்கஸிலே பழக்கற மாதிரிப் பழக்கி நடிக்க வைச்சாங்க. அப்படியெல்லாம் பழகி நாங்க முன்னுக்கு வந்தோம். வந்துக் கிட்டிருக்க சமயத்திலே தான் இந்தச் சினிமாவும் வந்திடுச்சு!''

''சீக்கிரம் நீங்க சினிமாவிலே நடிக்கப் போறீங்க!'' என்று உற்சாகமாய்ச் சொல்லி வைத்தான் முருகையன்.

''ஊஹூம்! அது இப்போதைக்கு நடக்காது. போய் சினிமா முதலாளி கிட்டே முட்டிப் பார்த்துட்டுத்தான் திரும்பி வர்றேன். ஏதாவது ஸ்பெஷல் நாடகத்திலே பிழைப்புக் கிடைக்குதான்னு பார்க்கணும்.''

முருகையன் சில சமயங்களில் திருச்சியில் குருசாமியின் நடிப்பைப் பார்த்துக் களித்திருக்கிறான். குருசாமி தன்னைக் கலைஞன் என்று சொல்லிக் கொள்ளா விட்டாலும் உண்மையான கலைஞன் அவன். அவனுடைய நிலையைக் கேட்டும் முருகையன் இரங்கினான்.

இந்தச் சமயத்தில் டிக்கட் பரிசோதகர் அங்கு வரவே, எல்லோரும் சட்டைப் பையைத் துழாவுவதும் பெட்டிகளைத் திறப்பதுமாக இருந்தார்கள். குருசாமி தன் சட்டைப் பைக்குள் கையை விட்டுத் தேள் கொட்டியவனைப் போல் துடிக்கத் தொடங்கினான். பேச்சு ஒன்றும் சரியாக வெளிவரவில்லை.

''பர்ஸ்! பர்ஸ்!....டிக்கட்!டிக்கட்!.. பணம்! பணம்!'' என்று அவன் பம்பரமாய்ச் சுழன்றான்.

அருகில் திடீரென்று எவன் கன்னத்திலோ பளீரென்று அறை விழும் சத்தம் கேட்டது. எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். முனியாண்டி வெறி கொண்டவன் போல் தன் மைத்துனனைக் கை ஓயாமல் அறைந்து கொண்டிருந்தான்.

''எடுடா, பர்ஸை!''

''நான் எடுக்கலே, மச்சான்!''

''கொடுக்கிறியா? கொல்லட்டுமா?''

மேலும் நான்கு அறைகள். முகம் வீங்கிப் போனவுடன் குருசாமியின் பணப்பை பத்திரமாக அவனிடமிருந்து கிடைத்தது.

''எப்பவுமே இவன் இப்படித்தான்! இப்ப உங்ககிட்டயே தன் கைவரிசையைக் காட்டிட்டான்'' என்றான் முனியாண்டி.

''நான் உழைச்சுப் பிழைக்கணும்னு சொன்னேன். பார்! - அவனோட உழைப்புத்திறமை வெளிப்பட்டிருக்கு!'' என்றான் குருசாமி.

விருத்தாசலம் ரயிலடி வந்தவுடன் முனியாண்டியின் குடும்பம் ரயிலைவிட்டு இறங்கியது. தன் மைத்துனனின் சார்பில் அழமாட்டாக் குறையாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டான் முனியாண்டி.

ரயில் மீண்டும் கிளம்பியவுடன் முருகையனுக்குச் சித்திராவின் நினைவு வந்தது. குருசாமியும் அவளைப் பற்றியே அவனிடம் கேட்டு வைத்தான்.

''அண்ணே! விழுப்புரத்திலே வந்திச்சே அந்த அம்மாதான் எனக்கு அண்ணியா வரப் போறாங்க போல் இருக்கு! அப்படித்தானே? எப்பண்ணே உங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம்?''

முருகையனின் முகத்தில் புது மலர்ச்சி தோன்றியது. (தொடரும்)

ரீடா கூந்தலைப் பாதுகாக்கும்



தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்குப் போஷாக்குத் தருவதால் உங்கள் கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும் பளபளப்பான கருமை நிறத்துடனும் காணப்படும். இதிலுள்ள மருந்துசசத்துக்கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி, பொடுகைபபோக்கி, நரைக்காமல் பாதுகாக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத் தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது நல்லெண்ணெயில் கலந்து எப்போதும் உபயோகியுகங்ள். காரிருள் போன்ற கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள் பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன் உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு செய்யுங்கள்.



# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

ரீட்டா கம்பெனி, சென்னை-1.

R.6 TM













MARGO
HYGIENIC TOILET

# வெள்ளிப் பனி மலை வீதியிலே

## 3. கங்கை வெள்ளமும் கருணை வெள்ளமும்

என்.வி.அனந்தராமன்

ஜாகேஷ்வரத்திலிருந்து நாங்கள் புறப்பட்ட நேரத்தில் ஏற்பட்ட சோதனை எங்களை ஒரு கணம் மலைப்படையும்படி செய்து விட்டது. நாங்கள் பயணம் புறப்படுவதற்கு இருந்த மோட்டார் ஓர் அங்குலம் கூட நகருவதற்கு மறுத்துவிட்டது. ஒன்றரை மைல் தொலைவு மோட்டாரைத் தள்ளிக்கொண்டே சென்று அங்கிருந்து 'துண்டேஷ்வர்' என்னும் கோவிலை அடைந்தோம். சாலையை ஒட்டியிருந்த வாய்க்காலின் பிரவாகத்தை மரப் பாலத்தின் மூலமாகக் கடந்து கோவிலுக்குச் சென்றோம். இக் கோவிலிலுள்ள லிங்க மூர்த்தம் கேதார்நாத்தில் உள்ளது போலவே இருக்கிறது. கோவிலில் அர்ச்சகர்கள் இருந்த போதிலும் கேதார்நாத்தைப் போலவே இங்கு வரும் யாத்திரிகர்களும் லிங்க மூர்த்தத்தைக் கட்டித் தழுவியே வழிபடுகிறார்கள். கோவில் மூலத்தானத்தில் கும்மிருட்டாயிருக்கிறது. துண்டேஷ்வரர் தரிசனம் முடிந்த பின்பு அங்கிருந்து பிற்பகல் இரண்டு மணிக்கு அல்மோராவுக்குப் புறப்பட்டோம். அல்மோரா இமயத்தின் பகுதியில் கடல் மட்டத்துக்கு மேல் 5494 அடி உயரத்திலுள்ள சுகவாசஸ்தலம். இமயத்தின் சுற்றுப்புறங்களுக்கு இதுவே நடுநாயகமான இடம். அல்மோராவை அணுகும்போதே தென்படும் அவ்வூரின் மலைச்சரிவுகளும் இடையிடையே கட்டப்பட்ட இரம்மியமான வீடுகளும் பார்க்கப் பார்க்க அலுக்காதவை. மப்பு மந்தாரமில்லாத பகல் நேரத்திலே இவ்வூரிலிருந்து பார்த்தால், பனி மூடிய நந்தா தேவி, திரிசூலி, பஞ்சசூலி, பத்ரிநாத் முதலிய மலைச் சிகரங்கள் தெளிவாகத் தெரியும்.

அல்மோராவில் இறங்கியவுடனே நாங்கள் நந்தாதேவி கோவிலுக்குச் சென்று வழிபாடு செய்தோம். அல்மோரா மிகச் சிறந்த வியாபார ஸ்தலமும் ஆகும். வரலாற்றுப் புகழ் வாய்ந்த ஊராதலால் இங்கு அரசருடைய அரண்மனை ஒன்றும் இருக்கிறது. 'கூர்மாசலம்' என்பது இதற்குப் புராணப் பெயர். பாலேஷ்வர், பாதாள தேவி, ஸ்யாஹி தேவி, சுகர்தேவி நரசிங்க மந்திர் போன்ற கோவில்களும் இங்கு உள்ளன. அல்மோராவிலிருந்து புறப்பட்டுக் 'கோஸி' நதியைக் கடந்து பிற்பகலில் சோமேஷ்வர் போய்ச் சேர்ந்தோம். அங்கே சோமேஷ்வரரைத் தரிசனம் செய்த பின்னர் கௌசானி வழியாக 'வைத்ய நாதத்துக்'குப் புறப்படலானோம். 'கௌசானி' என்ற பெயரைச் சொன்னவுடனே யாரும் காந்தியடிகளை நினைக்காமல் இருக்கமுடியாது. காந்தியடிகள் சிறிது காலம் கௌசானியில் தங்கித் தாம் அபூர்வமாகக் கண்டு உணர்ந்த அநுபவங்களை 'அநாசக்தி யோகம்' என்ற பெயரில் நூலாக வெளியிட்டிருக்கிறார். காந்தியடிகள் கௌசானியில் தங்கியிருந்த இடம் இப்பொழுது ஓர் ஆசிரமமாகத் திகழ்கிறது.

பின்னர் கருட கங்கையும், கோமதிகங்கையும் கலக்கும் இடத்திலுள்ள வைத்யநாதம் கோவிலைத் தரிசனம் செய்துவிட்டு இங்கிருந்து புறப்பட்டுச் சென்று முன்னிரவில் பாகேஷ்வரத்தை அடைந்து சிற்றுண்டி விடுதி ஒன்றின் மாடியில் தங்கினோம். எங்களுடைய வழியில் பாகேஷ்வரம்தான் தந்தி நிலையம் இருக்கக் கூடிய கடைசி ஊர். ஆதலால் நாங்கள் எல்லாரும் அவரவர்கள் வீட்டாருக்கு உடல் நலத்தோடு இருப்பதாகவும், கவலைப் படவேண்டா மென்றும் தந்தி கொடுத்தோம். நாங்கள் பாகேஷ்வருக்குப் போய்ச் சேர்ந்த நாளைக்கு மறு நாள் கோமதி நதியும், சரயூ நதியும் சேருகிற சங்கமத்தில் நீராடிவிட்டு உமையொருபாகனாகிய 'பாகேஷ்வரரை' வணங்கினோம். பாகேஷ்வரம் ஊரைச் சுற்றிலும் அடர்ந்த காடு. ஊருக்குள் பெரிய கடைகளெல்லாம் இருக்கின்றன.

பாகேஷ்வரத்துக்கு வேறு ஒரு முக்கியத்துவம் உண்டு. மகர சங்கராந்தியன்று இவ்வூரில் பெரிய சந்தை யொன்று கூடுகிறதாம். அதில் பூட்டானிய வியாபாரிகள் திபெத்திய பொருள்களைக்கொடுத்து, தங்களுக்குத்தேவையான பொருள்களுக்குப் பண்ட மாற்றுச் செய்து கொள்வார்களாம். பொதுவில் மகர சங்கராந்தியை ஒரு பெரிய விழாவாக இந்தப் பக்கத்து மக்கள் கொண்டாடுகிறார்கள்.

இந்த யாத்திரையின் இடையே கோமதி நதியும் சரயூ நதியும் சங்கமமாகின்ற இடமாகிய 'மார்க்கண்ட ஷீலா' என்னும் இடத்தைப் பற்றிச் சிறிது கூற வேண்டியது அவசியம். இங்கே சங்கமத் துறையை ஒட்டினாற் போல் பல கோவில்கள் இருக்கின்றன. சரயூ நதியின் நடுவில் தொங்கு பாலத்தருகே 'மார்க்கண்ட ஷீலா' என்ற கற்பாறை ஒன்று கம்பீரமாகக் காட்சியளிக்கிறது. மார்க்கண்ட ரிஷி இப்பாறையின் மீதமர்ந்து 'துர்க்காசப்தசதி' என்ற நூலை இயற்றியதாகச் சொல்கிறார்கள். இதை அடுத்துள்ள குன்றின் உச்சியில் மார்க்கண்டேய ஆசிரமம் ஒன்றும் அமைந்திருக்கிறது.

எங்கள் யாத்திரை முன்னேற முன்னேற வழிகளும் சாலைகளும், வசதிக் குறைவுள்ளவைகளாக மாறத் தொடங்கி யிருந்தன. பாகேஷ்வரத்திலிருந்து 'காப்கோட்' என்னுமிடம் வரை கற்சாலைகள் அமைக்கப்பட்டிருப்பினும் முன் இரவு பெய்த மழையின் காரணத்தால் அவை பழுதுபட்டிருந்தன. மேலும் மழை வந்து இடையூறு செய்யுமோ என நாங்கள் பயந்த பயத்தைப் போக்குவது போல் வெயில் நன்றாகக் காய்ந்து நாங்கள் பயப்பட வேண்டாம் என்பது போல் ஆகாயம் ஆறுதல் அளித்தது.



வைத்யநாதம் ஆலயமும் மலையும்

'காப்கோட்' சரயூ நதிக் கரையில் அமைந்திருக்கும் ஒரு சிறிய ஊர். சரயூ நதி மிக அருகில் ஊரை அரவணைத்தாற்போல் பாய்கிறது. இங்கே நதியில் குண்டுப் பாறைகள் அதிகம். எச்சரிக்கையோடு நீராட வேண்டும். கால் தவறினால் நதியின் அளவிட முடியாத பிரவாக வேகத்தில் வீழ்ந்து குண்டுப் பாறைகளில் மோதி அல்லல்பட வேண்டியதுதான். காப்கோட்டிலிருந்து கயிலை யாத்திரைக்கு நடந்து செல்வது தவிர வேறு சாதனங்கள் - நவீன வாகன வசதிகள் எதுவும் பயன்படாது. நடக்க இயலாதவர்களும், வயதானவர்களும், நான்கு பேர்கள் சுமந்து தூக்கிக் கொண்டு போகிற 'தண்டி' எனப்படும் நாற்காலி போன்ற வாகனத்தில்தான் போக வேண்டும். இந்தப் பகுதிகளில் பயன்படுத்தப்பெறும் ஒரு வகைக் குதிரைகளில் ஏறிச் செல்வோரும் உண்டு.

நடந்து செல்வோரும் பிறரும் யாத்திரைக்கு வேண்டிய எல்லாச் சாதனங்களையும் இங்கேதான் ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். சுமை கூலிகளையும், வழித் துணைகளையும் இங்கேயே அமர்த்திக் கொள்ள வேண்டும். காப்கோட்டிலிருந்து புறப்படுவதற்கு முன்னால் படுக்கைகள் எல்லாம் மழையில் நனைந்து விடாமலிருக்க மெழுகுத்துணி போட்டுக் கட்டிக் கொண்டபின், கம்பளிச் சட்டைகளை அணிந்து போர்வைகள், பிளாஸ்க், தண்ணீர்ப் பாட்டில் முதலியவற்றைத் தயார் செய்து கொண்டோம். சுவாமி வித்தியானந்த சரஸ்வதி அவர்கள் எங்களுக்குத் தேவையான சுமை கூலிகளையும், குதிரைகளையும் ஏற்பாடு செய்தார்கள்.

காலையில் காப்கோட்டிலிருந்து நாங்கள் புறப்பட்டபோது பெரு மழை பெய்து நின்றிருந்தது. பாதையில் பல நதிகளும், காட்டு ஓடைகளும், அருவிகளும் பிரகிருதியின் எல்லையற்ற பூரிப்பை வெளியிடுவன போல் பொங்கிப் பிரவாகித்துக் கொண்டிருந்தன. அந்த மழைக் குளிரையும் பொருட்படுத்தாமல், சரயூ நதியில் நீராடிவிட்டு மேலே யாத்திரையைத் தொடர்ந்து 'தேஜ்பஹாட்' என்ற கிராமத்தில் தங்கி அங்கேயே, சமைத்துச் சாப்பிட்டபின் இரவு ஏழு மணிக்கு 'ஸ்யாமாதாரா' என்ற ஊருக்குப் போய்ச் சேர்ந்தோம். இரவுத் தங்கல் அங்கேதான். மறுதினம் 'ஸ்யாமாதாரா'விலிருந்து பதினொரு மைல் தொலைவிலுள்ள 'க்வீடி' என்ற ஊருக்கு முன்னேறினோம். முதலில் நாலு மைல் ஒரே ஏற்றம். பின்னர் மூன்று மைல் கடுமையான இறக்கம். மூவாயிரம் அடி கீழே இறங்கியதும் பனி மூட்டம் கலைந்து வழி தெளிவாக இருந்தது. அந்தப் பள்ளத்திலிருந்து நான்கு பக்கமும் வான வெளியெல்லாம் சொல்லி மாளாத கொள்ளை எழில்கள் தெரிந்தன. அவற்றைப் பார்த்துக் கொண்டே நடந்தோம். பயங்கரமான மலைச் சரிவுகள். அப்பகுதிகளில் நடக்கும்போது ஆடுமாடுகள் கூடக் கால் வழுக்கி உருண்டு கீழே விழுந்து இறந்து விடுவதாக எங்கள் வழிகாட்டி சொன்னான். உண்மையில் அவன் வழியைக் காட்டிக் கொண்டிருந்தானா, பயத்தைக் காட்டிக் கொண்டிருந்தானா என்று பிரமை கொண்டோம். கைலாய நாதனைக் காணப் போகிற தைரியத்தினால் பிரமை நீங்கி மேலே நடந்த போது ராம் கங்கா நதி அருகில் தெரிந்தது. ஆனால் அந்த நேரத்தில் ராம் கங்கா நதியில் ஏற்பட்டிருந்த வெள்ளப் பெருக்கை எழுத்தால் எழுதிக் காட்ட முடியாது. பொதுவாகவே இந்த மலை வட்டாரங்களில் உள்ள காட்டாறுகளின் அழகே விந்தையானது. உருகி வரும் வெண் பனிக்கட்டிகளின் நீர்ப் பெருக்குத் தெளிந்து திரண்டு நுரையுடன் வருவதையும், அதிலிருந்து எதிர்ப் பெற்றுச் சீறும் அலைகளின் பச்சை நிறத்தையும், அமைதியான நீர்ப்பரப்பு உள்ள இடங்களில் ஆகாய நிறத்தையும், கூழாங்கற்களின் மீது நீரலைகள் புரளும் போது உண்டாகிற சப்த ஜாலங்களையும், பார்த்தாலன்றி — கேட்டாலன்றி நினைத்துமட்டும் ரசிக்க முடியாது.

ராம் கங்காவை நெருங்குவதற்கு முன்னால் நாங்கள் போய்க் கொண்டிருந்த வழியிலே நன்றாகக் கேட்குமாறு எங்களை யாரோ கை தட்டி அழைக்கவே எல்லாரும் திகைப்போடு திரும்பினோம். ராம் கங்காநதியின் அக்கரையிலிருந்த சிலர் கைதட்டி எங்களை நோக்கி ஏதோ கூவினர். அருகில் சென்று உற்றுக் கேட்ட போதுதான் அவர்கள் கூச்சலிடுவதன் காரணம் எங்களுக்குப் புரிந்தது. நாங்கள் அதுவரை போய்க் கொண்டிருந்த வழி தவறான வழி என்றும், போக வேண்டிய வழி வேறு என்றும் அவர்கள் இரைந்து கூவி அறிவுறுத்தினார்கள். சாட்சாத் கயிலாய நாதனே அவர்கள் மூலமாக எங்களுக்கு வழி காட்டத் தூண்டியதாக எண்ணி உரிய வழியில் திரும்பி ராம்கங்கா நதியின் கரையில் வந்து நின்றோம். கங்கை வெள்ளத்தையும் எங்களுக்கு வழிகாட்டிய கருணை வெள்ளத்தையும் கண்டு வியந்தோம். ராம் கங்கா நதி பிரவாகச் சுழல்களுடன் பொங்கிப் பாய்ந்து கொண்டிருந்தது. என்ன செய்வதெனத் தோன்றாமல் குதிரைமேலிருந்த பொருள்களைக் கரையிலே இறக்கி வைத்தோம். (தொடரும்)


ஆகஸ்ட் 24 உ முதல்
சென்னை காஸினோ · பிராட்வே · உமா
மற்றும் தென்னகமெங்கும்
ஸ்ரீ கணேஷ் பிரசாத் மூவீஸ்
மருதநாட்டு வீரன்
டைரக்ஷன்... T.R.ரகுநாத்
தயாரிப்பு
B.ராதாகிருஷ்ணா B.Com.
திரைக்கதை.வசனம்...ரவீந்தர்

# மணிபல்லவம்

நா. பார்த்தசாரதி

## 2 அறிவுப்போர்க்களம்

இடையீடின்றி நெருங்கி வளர்ந்த பசும் புல்வெளியில் பால் குடம் சரிந்தது போல் நாளங்காடியின் அடர்ந்த மரக் கூட்டங்களுக்குள்ளே நிலவு கதிர் பரப்பிக்கொண்டிருந்தது. எதிர்ப் பக்கத்தே வழியை மறித்தாற் போல நின்ற தேரிலிருந்து தன்னைச் சினத்தோடு நோக்கிய நகைவேழம்பரையும் பெருநிதிச் செல்வரையும் சிரித்துக் கொண்டே பார்த்தான் இளங்குமரன். அந்தப் பார்வையும் சில கணங்கள்தான். அதன் பின்பு கூட்டம் விலகி வழி ஏற்பட்டிருந்த வேறு பக்கமாக யானையைத் திருப்பிச் செலுத்திக் கொண்டு சென்றான் அவன். நாளங்காடியில் இன்று சந்தித்த இந்த இருவரும் அவனுடைய மனத்தில் கடுமையான வெறுப்புக்கும் குரோதத்துக்கும் உரியவர்களாக இருந்த காலமும் உண்டு. இன்றோ அவனுடைய மனத்திற்குள் எவர் மேலும் வெறுப்பில்லை; எவர் மேலும் குரோதமில்லை. உருவுடன் கூடிய ஆசைகளும் உருவமற்ற ஆசைகளும் எதுவுமே இல்லை. மேலே மிக உயர்ந்த வானப் பரப்பில் பறக்கும் பறவை சிறகுகளைத் தவிர வேறெந்தப் பாரமுமில்லாமல் பறந்து செல்வது போல் அவனுடைய நினைவுகளின் போக்குக் கீழிருந்து மிக உயரமான இடத்தில் மிக உயரமான மார்க்கத்தில் சென்றது. விருப்பு வெறுப்புக்களில் சாயாத நிலையான மனத்தைச் 'சமசித்தத்துவம்' என்று கூறியிருந்தார், நாங்கூர் அடிகள். சமசித்தத்துவத்தை அடைய முயன்று கொண்டிருந்தான், இளங்குமரன். அப்படிப்பட்ட சித்தத்தோடு பார்க்கிற போது உலகமே விசித்திரம்தான்.

சாயவும், கோணவும், செய்யாமல் ஒரு நிலைப்பட்ட மனத்தோடு இன்னதைக் காணலாம், இன்னதைக் காணக் கூடாது என்ற சம்பிரதாய எல்லைகளையும் கடந்து பார்த்தால் கண்ணுக்குத் தெரிவன எல்லாம் அநுதாபத்துக்கும், பரிதாபத்துக்கும் உரியனவாகவே தென்படுகின்றன. துன்பப்படுகிறவர்கள், இன்பப்படுகிறவர்கள், துன்பமும், இன்பமும் கலந்து படுகிறவர்கள்-எல்லாரும் இந்த உலகத்தில் நெஞ்சில் சுகமோ, துக்கமோ எதையோ சுமந்து கொண்டு திரி



கிறார்கள். உடம்பையும், பொருட் சுமைகளையும், தேரிலோ, குதிரையிலோ, பிறரிடம் கொடுத்தோ சுமக்கச் செய்வது போலச் சுமக்கச் செய்ய முடியாதது நெஞ்சின் சுமை. நினைப்பதைச் சொல்ல இயலாமல் சுமப்பதைத் தவிர்க்க முடியாமல் குழந்தையின் துன்பம் போல் தனக்குற்றதைச் சொல்ல மொழியின்றிச் சொன்னாலும் அவற்றுக்கு உணர்த்தும் ஆற்றலின்றித் தவிப்பது ஒப்ப இந்திர விழாக் கூட்டத்தில் தெரிந்த முகங்களில் எல்லாம்தான் இரங்குவதற்கான ஏதோ ஓர் உணர்வைத் தேடிக் கொண்டிருந்தான் இளங்குமரன். சுகத்தைச் சுமந்தால் என்ன? துக்கத்தைச் சுமந்தால் என்ன? சுமை என்னவோ சுமைதானே? சுமைக்கு உள்ளடங்கிய பொருள் உப்பானாலும், வெல்லமானாலும், சுமக்கின்றவனுக்குக் கனமான சுமையாவது போலத்தானே நினைவுகளும்?

'மதுவிலிருந்து பிறக்கும் மயக்கம் போல ஐம்பெரும் பூதங்களின் மயக்கமே இந்த உலகம்' என்று வெறியுடன் கூறிக்கொண்டு வந்த அந்தக் கணிமகனிலிருந்து, கனற் பொறி பறக்கும் பார்வையால் தன்னை எரித்துவிடுவதுபோலப் பார்த்த நகைவேழம்பர் பெருநிதிச் செல்வர் வரை எல்லாருடைய நெஞ்சிலும் சுமை இருப்பது இளங்குமரனுக்கு விளங்கிற்று. ஆசையாக இருக்கிறவரை அதுவே ஒரு சுமை. ஆசை நிறைவேறி விட்டால் 'நிறைவேறி விட்டது' என்று நினைத்து நினைத்துப் பூரிக்கும் திருப்தியே ஒரு சுமை. எண்ணியது நிறைவேறாவிட்டால் நிராசையும், அதனால் ஏமாற்றம் உண்டாவதும் சுமையே. ஆகாயத்தில் பறக்கும் பறவையைப் போல நெஞ்சில் சுகதுக்கச் சுமையில்லாத நாங்கூர் அடிகளைப் போன்றவர்களே உயர்ந்த நினைவுகளில் சஞ்சரிக்க முடிகிறதென்று எண்ணினான் இளங்குமரன். அவருடன் பழகிய பயனாலேயே தனக்கும் அந்த நிலை ஓரளவு வந்ததெனவும் நம்பினான்.

இப்படிச் சிந்தனையில் ஆழ்ந்த மனத்தோடு யானையைச் செலுத்திக்கொண்டு நான்கு பெரிய வீதிகள் சந்திக்கும் நாளங்காடிச் சதுக்கத்துக்கு வந்திருந்தான் அவன். அந்த இடத்தில் அவன் வெற்றி கொள்ள வேண்டிய போர்க்களம் காத்திருந்தது. அங்கே பலவேறு சமயங்களைச் சேர்ந்த அறிஞர்கள் பிறரை வாதுக்கு அழைக்கும் கோலத்தில் கொடி கட்டிக் கொண்டு கூடியிருந்தார்கள். எங்கும் அறிவொளிரும் கண்கள். சுவடிகள் நிறைந்த கைகள். எதிர்த்து வாதம் புரிவதற்காக மற்றவர்களை அழைக்கும் கொடிகள். வாதிடுபவர்களின் திறமையைக் காண்பதற்காகக் கூடியிருந்தவர்களின் முகங்களில் எல்லையில்லாத ஆர்வம் தெரிந்தது. யானையிலிருந்து கீழிறங்கிக் கொடியும் கையுமாக அந்த ஞானவீதிக்குள் நுழைந்தான் இளங்குமரன். அங்கிருந்த வயது மூத்த அறிஞர்களுக்கு நடுவே பேரெழில் நம்பியாகிய இளைஞன் ஒருவன் கொடி ஏந்திய கையினனாக நுழைந்தவுடன் கூடியிருந்த காவிரிப் பூம்பட்டினத்துப் பொதுமக்களுக்கு ஆர்வம் பெருகிற்று. 'இனிமேல் இங்கே சுவையான நிகழ்ச்சிகளைக் காணப் போகிறோம்' என்பது போன்ற உற்சாகமும் அவர்களுக்கு உண்டாயிற்று.

"இந்தப் பெரிய உலகம் முழுவதும் படைப்புக்கு முழுமுதற் காரணனாகிய தேவன் ஒருவன் இட்ட முட்டை. படைப்புக்கு நல்வினை, தீவினைகள் காரணமில்லை. தேவன் ஆணை ஒன்றே போதும்" என்று தனது கொடிக்குக் கீழே நின்று இரைந்து கூவிக் கொண்டிருந்த ஒரு பிரமவாதிக்கு முன்னால் போய் நின்றான் இளங்குமரன்.

ஒளி மயமான உடலோடு கந்தருவலோகத்து இளைஞன் ஒருவன் போல எதிரே வந்து கொடியை ஊன்றிக் கொண்டு நிற்கும் இளங்குமரனைக் கண்டவுடன் அந்தப் பிரமவாதி தான் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருந்தவற்றை நிறுத்திவிட்டு அவனை உற்றுப் பார்த்தார். அவருடைய பார்வையைக் கண்டு இளங்குமரன் புன்னகை பூத்தான்.

"உச்சந் தலையில் இருந்து உள்ளங்கால் வரை தேடுவது போல என்னிடம் எதைப் பார்க்கிறீர்கள், ஐயா?"

"எதையா? பார்க்க வேண்டியதைத்தான் பார்க்கிறேன். நீயோ இளம் பிள்ளையாகத் தோன்றுகிறாய். காற்றாடியைப் பறக்கவிட்டு மகிழ வேண்டிய கைகளில் கரையில்லாத ஞானத்தின் சின்னமாகிய இந்தக் கொடியை ஏந்திக் கொண்டு வந்து நிற்கிறாய். என்னைக் காட்டிலும் குறைந்த அறிவுள்ளவர்களோடு நான் வாதிடுவது *ஏகதேசம் என்னும் தருக்கக் குற்றமாகி விடுமே?"

"ஞானத்தின் நிறைவையோ, குறைவையோ தோற்றத்திலிருந்தும் பருவத்திலிருந்துமே தெரிந்து கொண்டுவிட முடியுமா, ஐயா? முடியுமானால் காட்சியைத் தவிர மற்ற அளவைகள் எல்லாம் பொய்யாகி விடுமே? காட்சியே அளவையும் துணிவும் ஆனால் எனக்கு நீங்கள் சொன்ன அதே தருக்கக் குற்

---

* வாதி - பிரதிவாதி இருவரில் ஒருவரது பலக் குறைவு.

றத்தை உங்களுக்கும் நான் சொல்ல லாமே. ஊன்று கோலை ஊன்றித் தொண்டு கிழவராய்த் தள்ளாடி நடக்க வேண்டிய முதிய வயதிலே தளர்ந்த கைகளில் கொடியோடு நிற்கிறீர்களே? ஊக்கமும் உற்சாகமும் கற்ற நூல்களின் எந்தப் பகுதியிலும் எந்த விநாடியிலும் மனத்தை இணைத்துக் கொள்ள முடிந்த ஞாபகமும் உள்ள இளைஞனாகிய நான், மூப்பினால் இவற்றை யெல்லாம் இழந்திருக்கும் உங்களோடு வாதம் புரிய விரும்புவதும் ஏகதேசம் என்னும் தருக்கக் குற்றம் ஆகுமே? பசுவின் கால் குளம்பைக் காட்டிலும் அதற்குப் பின்னால் முளைத்த கொம்பு வலியதாவது போல முன் தோன்றியதனினும் பின் தோன்றியது வலிமையுடையதென்னும் நியாயமும் உங்களுக்குத் தெரிந்திருக்குமே....?''

--இதைக் கேட்டபின் கண்களை அகல விரித்து இளங்குமரனை வியப்போடு பார்த்தார் அந்தப் பிரமவாதி. 'யாரோ சிறு பிள்ளை தன்னை வம்புக்கு இழுக்க வந்திருக்கிறான்' என்று நினைத்ததற்கு முற்றிலும் மாறாக எதிரே நிற்பவன் பழுத்த ஞானமும் தருக்க நியாய வழிகளில் நல்ல தேர்ச்சியும் உள்ளவன் என்று அறிந்ததும் தன்னுடன் அறிவுப்போரிட வந்திருப்பவன் தனக்குச் சரியான எதிரி தான் என்ற நிறைவோடு அவர் வாதிட முன் வந்தார்:

''பால் தயிராவது போலப் பிரமமே உலகமாகத் திரிந்து ஆக்கம் பெற்றிருக்கிறது. உயிர்களுக்கு நல்வினை, தீவினை, இரண்டும், முதல்வனாகிய இறைவன் ஆணையினால் வருமென்பது பொருந்தாது. உலகத்து மக்கள் ஒன்றைச் செய்வதற்குக் கருவியும், துணைக் கருவிகளும் வேண்டி நிற்றல் போல இறைவனுக்கு இவ்வுலகைப் படைக்கும் காலத்தில் துணைக் கருவிகள் வேண்டிய இல்லை. வேண்டும் என்றால் முழு முதலாகிய இறைவனின் சுதந்திரத்துக்கு அது இழிவாகும் அல்லவா ?'' என்று பரிணாமவாதத்தைத் தொடங்கினார் பிரமவாதி.

''நீங்கள் கூறுவது பொருந்தாது. இரு வினைகள் துணைக் கருவிகளாகவே அமையும். பிறவி வினையினால் வந்தது. வினைக்கு வினைவாயிலது. நல்வினைக்குப் பயன் இன்பம். தீவினைக்குப் பயன் துன்பம். பயன்களை நுகர்வதற்குப் பிறந்தே ஆகவேண்டும். பழத்தினுள் அடங்கிய வித்துக்கள் மீண்டும் முளைப்பது போல வினைகள் பழுத்த பின் பயன் தோன்றுவது தவறாது. புனருற்பவமாகிய மறு பிறப்பில் வினை வித்துக்கள் முளைக்கும். ஒரு நகரத்து அரசன் தன் நகரத்தைக் காப்பதற்குக் காவலர்களை நியமிப்பது போல இறைவனுடைய நியமனம் பெற்று இருவினைகள் ஆணை நடத்தும். ஆகையினால் உங்களுடைய பரிணாமவாதத்துக்குப் பொருள் இல்லை. எந்தவிதமான பயனும் இல்லை.''

''நல்லது! அப்படியானால் நீ இதற்குப் பதில் சொல்! வினைகள் உண்டு என்பதற்கும் அவை உயிர்க்குப் பயனாகத் தொடரும் என்பதற்கும் அவை முதல்வன் ஆணையால் நடக்கும் என்பதற்கும் சான்று என்ன? உள்ள பொருளானால் அப்பொருள் தோற்ற வேண்டும். வினைகளுக்குத் தோற்றம் ஏது?''

''தோற்றமற்றவை யெல்லாம் இல்லாப் பொருள்கள் என்பது உங்களுடைய முடிவானால் இந்த உலகமாகிய முட்டையை இட்டவனாக நீர் கூறும் தேவன் தோன்றுமையின் - இல்லாதவனாவான். இல்லாப் பொருள்கள் எல்லாம் தோற்றமுடையனவும் அல்ல. தோன்றுப் பொருள்களெல்லாம் இல்லாதனவும் அல்ல. உள்ளதாவதொரு பொருளை மறுப்பதற்கே இல்லை என்னும் சொல் பயன் படும் ஆகையினால் நீர் இல்லை யென்று மறுப்பதனாலேயே அது உள்ளதாகின்றது. பொருள் தோன்றிய பின்பே அதற்குக் குணந் தோன்றும் என்பது தருக்க நூல் முடிவாதலால் 'வினைகள் இல்லை'யென அவற்றுக்கு இன்மையாகிய குணத்தை நீர் கற்பிக்கத் தொடங்கிய தனாலே அதற்கு முன்பே அவை உள்ளனவாகக் கருதி உடன்பட்டீர். முற்பிறவியில் சேர்த்த வினைகளில் அப்போதே நுகர்ந்தவை போக எஞ்சிய வினைகள் 'சஞ்சிதம்' எனப் பெயர் பெறும்.

ஆசைப்பட்டு அடைந்த இன்பமும் இன்பப்பட்டு அடைந்த ஆசைகளுமாக விருப்பம் அடங்காமல் வளர்வதைப் போலத் துன்பப்படுவதனால் பெற்ற ஆசைகளும், ஆசைப்படுவதனால் பெற்ற துன்பங்களுமாக வினைகள் உயிர்க்குப் பயனாகத் தொடரும் இயல்பின. சூதாடுகிறவர்கள் சூதில் பொருளை இழக்க இழக்க, இழந்தவற்றைப் பெறுவதற்காக மேலும் அவ்விளையாட்டின் மேல் பெருங்காதல் கொள்வர். இழந்தவற்றைப் பெற்ற பின்பும் மேலும் மேலும் பெறுகிற ஆசையால் காதல் பெருகும். ஆகவே சூதாடுகிறவர்களுக்குத் தோற்றுத் துன்பப்படுகிற போதும் ஆசை; வென்று இன்பப்படுகிற போதும் ஆசையே. ஆசையாகிய துன்பமும், துன்பமாகிய ஆசையும் மாறி மாறி நிலவும் சூதாடுமிடம் போல உயிர்கள் ஏதாவதொரு வினை எஞ்சி நிற்கும் படியே தொடரும்.

# ஆனந்தமான வாழ்க்கைக்கு




காட்பரீஸ் சாக்கலேட்...

மிட்டாய் மட்டுமல்ல — ஒரு உணவும் கூட

காட்பரி என்றாலே தரத்தில் உயர்ந்தது

'இழந்தொறூம் காதலிக்கும் சூதேபோல்
உழந்தொறூம் காதற் றுயிர்' [துன்பம்

என்ற ஆன்றோர் வாக்கை நீரும் கேள்விப்பட்டது உண்டு அல்லவா? காந்தத்துக்கு நேராக இரும்பைப் பிடிக்கும் போது அந்தக் காந்தமே இரும்பை வலிந்து இழுத்துக் கொள்ளுதல் போல இறைவன் நுகர்வித்தலாலே வினைப் பயனை உயிர்கள் நுகரும் என்பது தெரிந்துகொள்ள வேண்டும்—''

என்று இளங்குமரன் கூறி விளக்கிய போதில் மேலே அவனிடம் என்ன கேட்பது என்று தோன்றாமல் தடுமாறினார் அந்தப் பிரமவாதி. அவர் தலை குனிந்தார். ஏதேதோ சுவடிகளைப் புரட்டினார். மீண்டும் சுவடிகளைக் கட்டி விட்டு நிமிர்ந்தார். ஏதோ கேட்கத் தொடங்கி விட்டுக் கேள்வியை முடிக்காமலே மறுபடி தலை குனிந்தார். அப்போது குனிந்த அவருடைய தலை மீண்டும் நிமிரவே இல்லை. [சுற்றிலும் கூடியிருந்த பெருமக்களிடமிருந்து 'நாவலோ நாவல்' என வெற்றிக் குரல் முழக்கம் எழுந்தது. அந்த முழக்கம் மேலே எழுந்து ஒலிக்கத் தொடங்கிய அதே நேரத்தில் அவருடைய கொடி கீழே விழுந்தது.

இளங்குமரன் அந்த வெற்றியின் செருக்கில் தன் மனம் களித்துப் போகாமல் குருவைத் தியானித்துக் கொண்டு சுற்றிலும் ஒலித்த வாழ்த்தொலிகளைக் கேட்பதிலும், உணர்வதிலும், உதாசீனனாகி மேலே நடந்தான்.

உலகத்துப் பொருள்களின் பொதுத் தன்மை, சிறப்புத் தன்மை, கூட்டுத் தன்மை ஆகியவற்றை விவரித்துக் கொண்டே 'வைசேடிகன்' ஒருவன் இளங்குமரனுக்கு முன்னால் வந்து தன்னுடைய கொடியை நட்டான். காது செவிடுபடும்படி உரத்த குரலில் பேசினான் அவன்.

''பொருள்களிலே நீர், ஒலி, ஊறு, உரு, சுவை ஆகிய நான்கு குணங்களை உடையது. தீ, ஒலி, ஊறு, உருவம் ஆகிய மூன்று குணங்களை உடையது. காற்று, ஒலி, ஊறு ஆகிய இரண்டே குணங்களை உடையது. ஆகாயம் ஓசைக் குணம் ஒன்றே உடையது....ஆகாயம் ஓசைக் குணம் ஒன்றே உடையது'' என்று செவிகளைத் துளைக்கிறாற் போன்ற பெருங் குரலில் ஒரே வாக்கியத்தைத் திரும்பத் திரும்பக் கத்தினான் அந்த வைசேடிகன். அவனைப் பார்த்து, ''இப்போது இந்தக் கணமே ஆகாயம் தனது ஓசைக் குணத்தை இழந்து விட்டது, ஐயா!'' என்று சொல்லி மெல்லச் சிரித்தான் இளங்குமரன். ''ஏன்? எப்படி இழந்தது?'' என்று வைசேடிகன் வெருண்டு கேட்டபோது, ''ஆகாயத்தின் ஓசைக் குணம் அவ்வளவும் இப்போது உங்களுக்கே வந்து விட்டது. இல்லாவிட்டால் இவ்வளவு பலமாகக் கத்துவீர்களா?'' என்று நிதானமாகச் சொல்லிக் கூட்டத்தில் சிரிப்பலைகளை எழச் செய்தான் இளங்குமரன்.



## 3. வன்னி மன்றம்

இந்திரவிழாவின் காரணமாக அறிஞர்கள் ஒன்று கூடியிருந்த நாளங்காடிச் சதுக்கத்தில் தன்னை எதிர்ப்பவரைத் தலைகுனியச் செய்யும் இணையில்லாத ஞானத்தோடு இளங்குமரன் சமயவாதம் புரிந்து கொண்டிருந்த இதே சமயத்தில் பூம்புகாரின் வேறொரு பகுதியில் அவனை அழித்து ஒழிப்பதற்குச் சமயத்தைத் தேடி வாதம் புரிந்து கொண்டிருந்தனர் இரண்டு மனிதர்கள்.

புறநகரில் சக்கரவாளக் கோட்டத்து மதிலருகே நகைவேழம்பரும் பெருநிதிச் செல்வரும், தாங்களிருவரும் ஏறி வந்திருந்த தேரை நிறுத்திவிட்டுப் பேசியவாறே நடந்து கொண்டிருந்தார்கள். பூதம் நின்ற வாயிலின் மேல் நோக்கி வானளாவ நிற்கும் பூதச் சிலையின் தலையிலே சூட்டியிருந்தாற்போல் நிலவின் ஒளி பரவிக் கொண்டிருந்தது.

அந்நேரத்தில் அந்தப் பகுதியில் அவர்கள் இருவரையும் தவிர வேறு மனித சஞ்சாரமே இல்லை. நகரமே மகிழ்ச்சியில் திளைத்திருக்கும் மாபெரும் இருவிழாத் தொடங்கியிருக்கும்போது சுடுகாட்டுக் கோட்டத்துக்குப் போகிற பாதையில் யார்தான் வருவார்கள்?

பெருநிதிச் செல்வர் ஆத்திரம் அடைந்தாற்போன்ற கண்டிப்பான குரலில் நகைவேழம்பரிடம் பேசிக் கொண்டு வந்தார் :—

''உலகத்தை யெல்லாம் ஏமாற்றுகிற சாமர்த்தியத்தை வைத்துக் கொண்டு நீரே சில சமயங்களில் பிறரிடம் ஏமாந்து விடுகிறீர் நகைவேழம்பரே! இந்தப் பிள்ளையாண்டான் துறவியாகி எங்கோ கண்காணாத நாடுகளுக்குச் சென்று விட்டதாகக் கூறினீரே. இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் பின்

இப்படிக் கொடி சுமந்த தோற்றத்தோடு யானை மேல் அமர்ந்து இவன் இங்கே வருவானென்று நீர் எதிர்பார்க்கவில்லையோ? சாதுரியமாக வாழ விரும்புகிறவன் தன்னுடைய வழிகளில் வேண்டாதவர்களுடைய குறுக்கீட்டை எந்தக் கணத்திலும் எதிர்பார்த்துக் கொண்டே இருக்க வேண்டும்.

உமக்கும் எனக்கும், நிர்ப்பயமான வாழ்க்கை சாகின்ற வரையில் இருக்க முடியாது. பயமுறுத்தி வாழ வழி செய்து கொண்டவர்கள் பயந்து பயந்து வாழ்வது தான் நியதி. பிறரை அலற அலற அழ அழப் பயமுறுத்திய நாட்களை நீரும் மறந்திருக்க மாட்டீர்; நானும் மறக்கவில்லை. உம்முடைய திறமையையெல்லாம் செலவழித்து இரண்டு முறை இந்தப் பிள்ளையாண்டானைக் கொலை செய்ய முயன்றீர். முடியவில்லை. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் இதே இந்திரவிழாவின் முதல் நாள் இரவில் சம்பாபதிவனத்தில் இவனையும் இவன் வளர்ப்புத் தந்தையையும், சேர்த்து அழித்து விடுவதற்காக முரட்டு நாகர்கள் இருவரை ஏவினோம். முடியவில்லை. பின்பு இவனும் இவனை வளர்த்த அருட்செல்வரும் தங்கியிருந்த தவச்சாலைக்குத் தீ வைக்க ஏற்பாடு செய்தோம். அந்த ஏற்பாட்டிலும் அருட்செல்வ முனிதான் எரிந்து சாம்பரானான். இந்தப்பிள்ளை அப்போது தவச்சாலையில் இல்லாததால் தப்பி விட்டான். இவன் சாகாமல் வளர்ந்து நமக்குத் தொல்லை கொடுக்கவேண்டுமென்பதுதான் தெய்வசித்தம் போலிருக்கிறது!'' என்று பெருநிதிச் செல்வர் கூறியதைக் கேட்டு நகைவேழம்பர் சிரித்தார்.

''தெய்வசித்தம் என்று ஒன்று இருப்பதாக நம்புகிற அளவு நீங்கள் தளர்ந்து விட்டீர்களே? நம் சித்தப்படி இவ்வளவும் நடந்திருப்பதைக் கண்ட பின்பும் உங்களுக்கு எப்படி அந்தப் பிரமை ஏற்பட்டது? ? எல்லா இரகசியமும் தெரிந்த அந்தக் கிழட்டு முனிவனே மண்ணோடு மண்ணாகிப் போன பின் இந்தப் பிள்ளையாண்டானைப் பற்றிக் கவலைப் படுகிறீர்களே? முன்பாவது நாலு பேரை அடித்துத் தள்ளுகிற வலிமை இவன் உடம்பில் இருந்தது. இப்போது வெறும் ஏட்டுச் சுரைக்காயாகி விட்டான். தெய்வமுமில்லை. சித்தமுமில்லை. எல்லாம் நாம் ஆசைப்படுகிற விதமே நடக்கிறது. நடத்துகிறோம். இனியும் நடக்கும்...''

''அப்படித் தடையில்லாமல் நடப்பதனால் தான் எனக்குப் பயமாயிருக்கிறது. நகைவேழம்பபர! யாருக்கும் தெரியாத நேரம் என்று நிச்சயமாகத் தெரிந்து கொண்டு திருடினாலும் திருடனுக்குத் தன் செயலில் அதிகமான பயம்தான்! நீடித்து நிலைக்க வேண்டிய காரியத்துக்கு ஒரு தடையும் இல்லாமல் போவதே பெரிய தடை என்பார்கள். நிற்கவும் நிலைக்கவும், ஆசைப்படுகிற காரியத்துக்குத் தடையின்மையே அவலட்சணம். யாரும் சந்தேகப்படாமல் இருப்பதைப் பார்த்தே எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. யாரும் எதிர்த்து வராமல் இருப்பதே எனக்குப் பெரிய எதிர்ப்பாகப் படுகிறது. யாரும் பயமுறுத்தாமல் இருப்பதே எனக்குப் பெரிய பயத்தைத் தருகிறது. போதாத குறைக்கு இந்தப் பிள்ளையாண்டானுக்கு நீலநாகமறவருடைய ஆதரவு வேறு இருக்கிறது. வீட்டுக்குள் அடைத்து வைத்து விட்டதால் என் மகள் சுரமஞ்சரியின் ஆதரவு இனி இவனுக்குக் கிடைக்க வழியில்லை.''

''ஒருவேளை வானவல்லியின் ஆதரவு கிடைத்தாலும் கிடைக்கலாம்'' என்று ஒரு வார்த்தைக்காகச் சொல்கிறவர் போலச் சொல்லிச் சிரித்தார் நகைவேழம்பர். பெருநிதிச் செல்வர் கடுமையாக அதனை மறுத்தார்.

''அது ஒருகாலும் சாத்தியமில்லை, நகைவேழம்பரே.''—

''சாத்தியமில்லை என்று உறுதியாகச் சொல்ல முடியாது. எவனுடைய கண்களில் தன்னுடைய ஆசைகள் பிறவாமல் பிறருடைய ஆசைகளைப் பிறப்பிக்கும் ஆற்றல் நிறைந்திருக்கிறதோ அவனுடைய கண்களின் முன் பெண்கள் நிறையிழத்தலைத் தவிர்க்க இயலாது! இந்தப் பிள்ளையின் கண்கள் அத்தகையவை....'' என்றார் நகைவேழம்பர்.

இருவருக்கும் வேண்டாத வழியிலிருந்து அந்தப் பேச்சைத் திருப்பினார் பெருநிதிச் செல்வர். ''எப்படிப் பார்த்தாலும் இன்னும்இந்தப்



பிள்ளையை அழிக்க வேண்டிய அவசியம் நமக்கு இருக்கிறது. அதை வற்புறுத்தத்தான் இவ்வளவும் சொன்னேன் நகைவேழம்பரே!''

''அழிப்பது பெரிய காரியமில்லை. ஆனால் ஒவ்வொரு முறையும் அந்த முயற்சியின் அருகில் போகும் போது எப்படியோ நான் தோற்று விடுகிறேன். கடைசியாக இவனை அழிக்கும் எண்ணத்துடன் இவனது ஓவியத்தைப் பலசிடம் கொடுத்தனுப்பிய போதும் இப்படியேதான் ஆயிற்று. ஆலமுற்றத்து முரடனிடம் நான் அடி வாங்கிக் கொண்டு வந்ததுதான் மீதம்.''

''அதெல்லாம் பழைய கதை. இப்போது என்ன செய்யப் போகிறீர் என்று சொல்லும்.''

இதற்குச் சிறிது நேரம் மறுமொழி கூறாமல் இருந்தார் நகைவேழம்பர். அவர் ஏதோ சிந்திப்பது போலிருந்தது.

'' உமக்குக்கூட இப்படிச் செயல்களுக்கு எல்லாம் யோசனை செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டதா?''

''யோசனை ஒன்றுமில்லை! இந்த முறை எப்படியும் வெற்றி பெற்றே தீரவேண்டும் என்று திட்டமிட்டேன். தேர் இங்கேயே நிற்கட்டும். வாருங்கள். நடந்தே உட்பக்கம் போய் வரலாம். இந்தக் காரியத்தைப் 'பைரவி' மூலமாகச் செய்தால் நினைத்தபடி முடியும். இப்போது போனால் சுடுகாட்டுக் கோட்டத்தில் வன்னி மன்றத்தின் அருகே அவளைச் சந்திக்கலாம்'' என்றார் நகைவேழம்பர்.

பைரவி என்ற பெயரைக் கேட்டதும் பெருநிதிச் செல்வரின் முகம் பயத்தினால் இருண்டது.



"பைரவியா? அந்தப் பைசாசத்தையா இப்போது பார்க்க வேண்டுமென்கிறீர்கள்?" என்று தயங்கினார் பெருநிதிச்செல்வர்.

"கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை என்பது போல் இருந்தால் ஒன்றும் முடியாது. இந்த அகாலத்தில் சுடுகாட்டுக் கோட்டத்தைக் கடந்து போகக் கூசுகிறீர்கள் நீங்கள். கூசினால் கூசிக்கொண்டே இருக்க வேண்டியதுதான்."

"நான் ஒன்றும் கூசவில்லை. இதோ வருகிறேன். புறப்படுங்கள்" என்று உறுதியானதொரு தீர்மானத்துக்கு வந்தவரைப் போல முன்னால் நடந்தார் பெருநிதிச் செல்வர். நகைவேழம்பரும் தொடர்ந்தார். சக்கரவாளக் கோட்டத்துக்குள்ளேயே சுற்றிச் சுற்றி நீண்ட தொலைவு நடந்துபோன பின் அடர்ந்த வன்னி மரங்கள் நிறைந்த ஓரிடத்தை அடைந்ததும் இருவரும் நின்றார்கள். அங்கே சுற்றிலும் கபாலங்கள் கிடந்தன. அருவருக்கத்தக்க முடை நாற்றம் வீசியது. சுற்றிலும் எரிந்து கொண்டிருந்த கொள்ளித் தீயில் எலும்புகளும், கபாலங்களும் அச்சுறுத்தும் விதத்தில் தெரிந்தன. வன்னி மரங்களின் கீழே அங்கங்கே காபாலிகர்கள் தனியாகவும், கூட்டமாகவும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய வெறிக் கூப்பாடுகள் ஒலிப்பதும், அடங்குவதுமாக இருந்தன. மயானத்தின் கோரச் சூழ்நிலை நிலவிய அந்தப் பகுதியின் ஒரு மூலையில் தரையோடு தரையாகத் தாழ்ந்து முள் நிறைந்த கொடிகளைக் குடிசையைப் போலப் படரவிட்டிருந்த வன்னி மரப் பந்தல் ஒன்றின் வாயிலருகே சென்று 'பைரவி' — என்று விநயமாகக் குரல் கொடுத்தார் நகைவேழம்பர். முதலில் உள்ளேயிருந்து மறுமொழி இல்லை. பின்பு முன்னிலும் உரத்த குரலில் அதே பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார் அவர். பாய்ந்து வெளியே வரும் அவசரத்தில் வன்னி முட்கள் கீறிய குருதி சாம்பர் பூசிய உடலில் செந்நிறம் காட்டிடக் கையிலிருந்த கபாலம் பயத்தைக் காட்டிட முரட்டுப் பேய்ப் பெண் ஒருத்தி வந்து நின்றாள். அந்தக் காபாலிகப் பெண்ணுக்கு முன் பெருநிதிச் செல்வர் மெய்நடுங்கி நிற்க நகைவேழம்பர் சிரித்தபடியே சுபாவமாகப் பேசுவதற்குத் தொடங்கினார்: "நீண்ட நாட்களுக்குப் பின் உன்னைச் சந்திக்க வந்திருக்கிறோம் பைரவி! வந்திருக்கிற காரியமும் முக்கியமானதுதான்."

"அது இரண்டு பேரும் சேர்ந்து வந்திருப்பதைப் பார்த்தாலே தெரிகிறதே" என்று சொல்லிக் கோரமாகச் சிரித்தாள் பைரவி.

(தொடரும்)



திருப்பதியில் கூட்டம் 'ஜே.ஜே' என்றிருந்தது. ஏழுமலையானைத் தரிசிக்க நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மக்கள் மொழி வேற்றுமையில்லாது வந்து குவிந்த வண்ணமிருந்தனர். எங்கு நோக்கினும் பக்தி வெள்ளம் பெருக்கெடுக்கக் 'கோவிந்தா, வேங்கடரமணா கோவிந்தா' என்று பக்தர்கள் குரல் கேட்டுக் கொண்டிருந்தது. பிரார்த்தனை செலுத்துவோரும் புதிதாக மணம் செய்து கொண்டோரும் எங்கும் நிறைந்திருந்தனர்.

மணகாவலம் பிள்ளை புஷ்கரணியில் குளித்து எழுந்தார். விபூதிப் பையை எடுத்து அதிலிருந்து விபூதியை நீரோடு இரு கைகளிலும் கலந்து தம் மேனி எங்கும் இட்டுக் கொண்டார். துவைத்த ஆடைகளை வெயிலில் காயப் போட்டு மீண்டும் அணிந்து கொண்டார். மார்பு வரை நீண்டு வளர்ந்துவிட்ட தாடியையும் மீசையையும், பிடரிக்குக் கீழே தொங்கிக் கொண்டிருந்த தலைகேசத்தையும் நீவிவிட்டுக் கொண்டு கோயிலுள் நுழைந்தார்.

ஆண்டவனின் தரிசனம் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. வைரக் கிரீடமும், நாமமும் சாத்தி யிருந்தன. மனம் நிறைய, வாய் நிறைய ஆண்டவனைப் பாடிப் பணிந்தார் மணகாவலம் பிள்ளை.

கல்யாண மண்டபத்தில் வேங்கடாசலபதிக்குக் கல்யாணம் நடந்து கொண்டிருந்தது. யாரோ ஒரு பணக்காரர் எட்டு விரல்களிலும் வைர மோதிரம் போட்டுக் கொண்டு பக்தி சிரத்தையுடன் கவனித்துக் கொண்டிருந்தார். அதிலும் கலந்து கொண்டார் மணகாவலம் பிள்ளை. ஆண்டவன் இல்லை என்று கூறுபவர்கள் மீது அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. திருப்பதிக்கு ஒருமுறை வந்து அவர்கள் இங்கே நடக்கும் கோலாகலங்களையும், விழாக்களையும் பிரார்த்தனைகளையும் ஒருமுறை பார்த்தால் போதுமல்லவா?

விபூதிப் பையைத் துழாவி அதில் தாம் பத்திரமாக வைத்திருந்த நாலணாவை இரு விரல்களால் தேடி எடுத்தார் பிள்ளை. காலையிலிருந்தே கண்ணைச் சுற்றுகிற பசியை வயிற்றின் ஒரு மூலையில் ஒதுக்கி வைத்து விட்டு, அவர் அந்த நாலணாவைப் பத்திரப் படுத்தி யிருந்தார். அது ஆண்டவனுக்குச் சேர வேண்டிய பணம்.

# தெய்வத்தின் குறுக்கே..

## கே. வேங்கடராமன்



பயபக்தியுடன் உண்டியலில் போட்டார் அந்த நாலணாவை. ஒவ்வொருவர் பத்து, நூறு, ஆயிரம் என்று உண்டியலில் போடும் பொழுது தாம் மட்டும் நாலணா போடுவது என்னவோ போலிருந்தது மணகாவலம்பிள்ளைக்கு. காசைப் போட்டதும் அவர் கண்கள் கலங்கின. மனைவி அழகம்மையின் முகம் அவர் மனக் கண்முன் வந்தது. அந்தப் புண்ணியவதியின் பிரார்த்தனையை அவர் நிர்மூலமாக்கினார்! தெய்வம் அவரையே நிர்மூலமாக்கி விட்டது!

மண்டபத் தூணில் சாய்ந்து கொண்டார் மணகாவலம் பிள்ளை. பசி குடலைச் சுருட்டியது. 'கம கம' வென்று



மண்டபத்திலிருந்து வந்த சமையலின் மணம் அவரது பசித் தீயை இன்னமும் அதிகரிக்கச் செய்தது. திரும்பிப் பார்த்தார். மண்டபத்தின் உள்ளும் புறமும் பண்டாரங்களும், பரதேசிகளும் வரிசை வரிசையாகச் சாப்பிட உட்கார்ந்திருந்தனர். அவர்களது முன்பு வாழை இலை போடப்பட்டு உணவு வகைகள் பரிமாறப்பட்டிருப்பதைக் கண்டதும், மனகாவலம் பிள்ளைக்கு நாக்கில் நீர் சொட்டியது.

அவர்களோடு தாமும் ஓர் இலையின் முன் அமர்ந்து கொண்டார் மனகாவலம் பிள்ளை. பெரிய நுனி வாழையிலையாகப் பார்த்துத் தான் அமர்ந்து கொண்டார். உணவுவகை பரிமாறப் பட்டிருப்பதைக் கண்டதும் அவைகளை அப்படியே அள்ளி உள்ளே தள்ளி விடத் துடித்தார்.

பஞ்சபட்ச பரமான்னங்களுடன் ஒரு நூர்கப் பிடித்தார் மனகாவலம் பிள்ளை. வயிறு நிறையத் தொடங்கியதும் சாப்பாடு ஏன் என்ற விசாரணை தொடங்கியது..

அருகில் அமர்ந்திருந்தவன் பரதேசியுமில்லை, பண்டாரமுமில்லை. வெள்ளை வேஷ்டி கட்டிச் சற்று மிடுக்காகவே அமர்ந்திருந்தான்.

"என்னப்பா, இன்னிக்கு விசேஷம்?"

"சாமிக்குக் கல்யாணம்!" என்றான் அவன்.

"யாரு செய்து வைக்கிறாங்க?"

"அதோ பாரு! அவர்தான்!" என்று அவன் சுட்டிக் காட்டிய திக்கைப் பார்த்தார் மனகாவலம் பிள்ளை. எட்டு விரல்களுக்கும் மோதிரம் போட்டுச் சற்று முன்பு கல்யாண மண்டபத்தில் பார்த்தாரே, அந்த மனிதர்! பணம் படைத்தாலும் என்ன தயாள மனம்!

"பேரு?"

"மனகாவலம் பிள்ளை!" என்றான் அந்த வெள்ளை வேஷ்டி.

"மனகாவலம் பிள்ளையா?"

"ஆமாம்! ஏன் உனக்கு அவரைத் தெரியுமா?" என்று கேட்டான் வெள்ளைவேஷ்டி.

"சும்மா கேட்டேன்! தெரியாது!" என்று கூறிவிட்டு இரண்டு கவளம் எடுத்து வாயில் போட்டார் மனகாவலம் பிள்ளை. அந்த மனிதரின் பெயரும் தம் பெயரும் ஒன்றாயிருப்பது முதலில் அவருக்கு ஆச்சரியத்தை அளித்தாலும் பிறகு சமாதானமானது. ஒருவரைப் போலவே மற்றொருவர் இந்த உலகத்தில் இருப்பதில்லையா? மனிதர்களே இருக்கும் பொழுது பெயருக்குக் கேட்பானேன்!

"எந்த ஊரு?"

"திருநெல்வேலி!"

"திருநெல்வேலியா?"

"ஆமாம்; உன் ஊரும் அதுதானா?"

"ஆமாம்; திருநெல்வேலியிலே அவருக்கு எங்கேயாம்?"

"சிக்கலிங்கிராமம்!"

கையில் எடுத்த லட்டு அப்படியே இருக்க அசந்து விட்டார் மனகாவலம் பிள்ளை. சிக்கலிங் கிராமத்தில் மனகாவலம் பிள்ளை என்ற பெயரில் அவரைத் தவிர வேறு யாரும் கிடையாதே! பிறந்த காலத்திலிருந்து கடந்த எட்டாண்டுகளுக்கு முன்பு வரை இந்த மனகாவலம் பிள்ளையைத் தவிர வேறு யாரும் அங்கு பிறந்திருப்பதும் கிடையாது, வந்திருப்பதும் கிடையாதே!

"இவுக ஐயா பேரு என்ன?"

"சொக்கலிங்கம் பிள்ளையாம்!"

"வெறும் சொக்கலிங்கம் பிள்ளையா?"

"இல்லே, பாப்பான்குளம் சொக்கலிங்கம் பிள்ளை...!"

அப்படியே சுவரில் சாய்ந்து விட்டார் மனகாவலம் பிள்ளை. தம் தந்தையின் ஊரும் பெயரும் பாப்பான்குளம் சொக்கலிங்கம் பிள்ளை அல்லவா? இதென்ன முழுக்க முழுக்க அவர் சம்பந்தப்பட்டதாகவே எல்லாம் இருக்கின்றனவே!

"அழகம்மை, மனகாவலம் பிள்ளை என்கிற பெயரிலே அந்த மனுஷர் இங்கே எல்லாம் செய்கிறார். ஆயிரம் ரூபாய் செலவழித்துச் சாமிக்குக் கல்யாணம்! எல்லோருக்கும் வேட்டி துண்டோடு 'ஜாம், ஜாம்' என்று கல்யாணச் சாப்பாடு. ஆயிரம் ரூபாய்க்கு வெள்ளி ரூபாயாக மாற்றிப் புருஷனும் பெண்சாதியுமாக உண்டியலிலே இரண்டு கையாலேயும் அள்ளி அள்ளிப் போட்டதை நான் என் கண்ணாலே பார்த்தேன். என்ன தயாள மனசு. யாருக்குங்க இந்தக் காலத்திலே இப்படி செய்ய புத்தி வரும்?" என்றான் அந்த வெள்ளை வேஷ்டிக்காரன்.

"வராது!" என்று கூறினார் மனகாவலம் பிள்ளை. பிறகு அவனிடம் "இவ்வளவு விஷயம் உனக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

"நீ ஒண்ணு! ஒரு மனுஷன் துணிமணி கொடுத்து மூக்கு முட்டச் சாப்பாடு போடறான்! அவனைப்பத்தித் தெரிஞ்சுக்க வேணும்!" என்றான் வெள்ளை வேஷ்டி.

பாதி சாப்பாட்டிலேயே எழுந்து விட்டார் மனகாவலம் பிள்ளை. தம் பெயரிலும் தம் மனைவியின் பெயரிலும் தான தருமங்களும், பிரார்த்தனைகளும் நடப்பதைக் கண்டு உண்டான ஏன் என்ற கேள்விக்கு விடை காண அவர் உள்ளம் துடித்தது. கைகால்களைக் கழுவிக் கொண்டு அந்தப் பெரிய மனிதரைக் காணச் சென்றார்.

"அவுக இருக்காகளா?" என்று உள்ளே திரும்பிக் கொண்டிருந்த வீட்டுக்கார அம்மாவிடம் கேட்டார் மனகாவலம் பிள்ளை.

"இப்பத்தான் வெளியிலே போனாக! நீங்க அவுகளைப் பார்க்கணுமா?"

"ஆமாம்!"

"ஒட்டுத் திண்ணையிலே உட்காருங்க! இப்போ வந்துடுவாக!" என்று கூறிவிட்டுச் சென்றுவிட்டாள் அந்த அம்மாள்.

திண்ணையில் உட்கார்ந்து கொண்டார் மனகாவலம் பிள்ளை. நினைக்க நினைக்க அவருக்கு வியப்புத்தான் அதிகரித்தது. திண்ணையில் உட்கார்ந்து வீதியில் வேடிக்கை பார்க்கும் குழந்தைகளுக்கும் கூட அவர் பெயரும் அவர் மனைவியின் பெயரும்! என்ன ஆச்சரியம்! எதற்காக மனகாவலம் பிள்ளை என்ற பெயரிலேயே தான தருமங்கள் செய்வதோடு, குழந்தைகளுக்கும் அவர் பெயரையும் அவரது மனைவி அழகம்மையின் பெயரையும் வைத்திருக்கவேண்டும்?

"அழகம்மா, அழகம்மா!" என்று கூவிக் கொண்டு திண்ணையிலிருந்து வீதியில் இறங்கி விட்ட தங்கையின் பின்னால் ஓடினான் பையன் மனகாவலம்.

"அழகம்மை அழகம்மை" என்று முணு முணுத்தன மனகாவலம் பிள்ளையின் உதடுகளும். அப்படியே கண்களை மூடித் தூணின் மீது சாய்ந்து கொண்டார்.

எட்டு ஆண்டுகளுக்கு முன்பு.

மனகாவலம் பிள்ளை இருபத்தெட்டு வயது கட்டிளங்காளை. ஓடுகிற பஸ்ஸில் தாவி ஏறுகிற பருவம். கண்ட கண்ட சிநேகம்.

தறிகெட்டு அலையும் பிள்ளை தலைக்கு மேலே வளர்ந்து விட்டதால் கண்டிக்கவும் முடியாமல் தண்டிக்கவும் முடியாமல் தவித்தார் மனகாவலம் பிள்ளையின் தந்தை பாப்பாங்குளம் சொக்கலிங்கம் பிள்ளை. நல்ல நல்ல குணங்களும், நற்செய்கைகளும் பாடமாக வேண்டிய வயதில் பிள்ளை கெட்டுக் குட்டிச்சுவராவதைக் காணப் பொறுக்கவில்லை.

ஒரு கால்கட்டைப் போட்டால் வீட்டோடு பிள்ளை பெண்டாட்டியின் காலடியிலேயே சுருண்டு கிடப்பான் என்றெண்ணினார் சொக்கலிங்கம் பிள்ளை. அழகம்மை என்ற குணவதியைத் தேடிப் பிடித்து மனகாவலத்தின் மனை விளக்காக்கினார் சொக்கலிங்கம்.

கல்யாணமான புதிதில் கேட்பானேன்! இருகரையும் புரண்டோடிற்று இன்ப வெள்ளம் மனகாவலத்துக்கு. மனைவியை ஒரு கணம் பிரியாமலிருந்தான். கொஞ்ச நாளைக்குத்தான். வேதாளம் மறுபடியும் முருங்கை மரம் ஏறிவிட்டது!

வீட்டில் ஒரு காலும் வெளியில் ஒரு காலுமாகச் சுற்றிக் கொண்டிருந்த மனகாவலத்துக்குக் குடிப்பழக்கம் வேறு ஏற்பட்டது. மனிதன் அழிந்து போவதற்கு மதுவும் மாதும் போதுமே! மனகாவலம் கெட்டுச் சீரழிந்தான். அவனைத் திருத்த முடியாமலே உயிரை விட்டார் சொக்கலிங்கம் பிள்ளை. கணவனை நல்வழிப் படுத்தி, தன் மாங்கல்யத்தைக் காப்பாற்றிக் கொள்ள அழகம்மை நல்லவைகளை அவனுக்குக் கூறியபோது அவளுக்குக் கிடைத்த பதில் அடியும் உதையும் தான்.

தன் நம்பிக்கையை இழந்து விட்டாள் அழகம்மை. இனி தெய்வத்தைத் தவிர வேறு யாராலும் அவனைத் திருத்த முடியாது என்று தெரிந்துவிட்டது அழகம்மைக்கு. இனி அந்தத் தெய்வத்தைத்தான் நம்பவேண்டும். தன் குல தெய்வமான வேங்கடாஜலபதியை வேண்டிக் கொண்டு ஒரு பித்தளைச் செம்பின் வாயை மஞ்சள் துணியால் கட்டி அதன் நடுவில் துவாரம் ஒன்று போட்டுக்கொண்டாள். செம்புக்கு நாமமிட்டாள். குடிப்பதற்கும் கெட்டலைவதற்கும் அவளிடமிருந்து அவன் பறித்துக் கொண்டுவிட்டதுபோக எஞ்சிய மூக்குத்தியைக் கழற்றி அந்த உண்டியலில் போட்டாள். கணவன் திருந்தி நல்ல வழிதனை அடைந்ததும் அந்த உண்டியலைத் திருப்பதிக்கே வந்து பெரிய உண்டியலில் சேர்ப்பதாக ஒப்புக் கொண்டாள். அவ்வப்போது கிடைக்கும் காசுகளையும் உண்டியலில் சேர்த்துக் கொண்டு வந்தாள்.

அன்று மனகாவலம் பிள்ளை வெளியில் செல்லவில்லை. அதற்குக் காரணம் கையில் காசில்லாததுதான். உள்ளே அழகம்மை படுத்திருந்தாள். கணவனது முறை தவறிய வாழ்க்கை அவள் மனத்தையே முறித்து விட்டது. கொஞ்ச நாட்களாகவே மனநோய் முற்றி அவள் படுக்கையில் விழுந்துவிட்டாள். அவள் உணவும் சரிவர உட்கொள்வதில்லை. உயிர்மீதிருந்த ஆசை அவளுக்குப் போயே போய்விட்டது.

"அழகம்மா!" என்று கத்தினான் மனகாவலம். அழகம்மையின் மூக்குத்தியின் ஞாபகம் வந்துவிட்டது அவனுக்கு. அதை விற்றால் ஒரு நாள் பொழுதைக் கழிக்கலாமே என்று அவன் நினைத்தான். அழகம்மை அவன் குரல் கேட்டு வரவில்லை.

அவள் வராததைக் கண்டு ஆத்திரம் ஆத்திரமாக வந்தது மனகாவலத்துக்கு! விடு விடென உள்ளே வந்து, "நான் கூப்பிடறது காதிலே விழலே? செவிட்டு மூதி!" என்றான்.

"என்ன வேணும்?" என்றாள் அழகம்மை.

"மூக்குத்தியைக் கழட்டிக் கொடு!"

திருப்பதி உண்டியலில்தான் போட்டு வைத்திருக்கும் மூக்குத்தியைத் 'திடுதிப்'பென்று கணவன் கேட்பான் என்று அழகம்மை எதிர்பார்க்கவில்லை. துணிந்து பொய் சொன்னாள்.

"நாலுநாளா அதுதான் சோறு போடுது. வித்துப்புட்டேன்" என்றாள்.

"எம்புட்டுக் கிடைச்சது?"

மூச்சுத் தட்டிற்று அழகம்மைக்கு. எவ்வளவு என்று சொல்ல? இருபத்தெட்டு ரூபாய்க்கு மூக்குத்தி வாங்கியது நினைவுக்கு வந்தது அழகம்மைக்கு. நான்கு ரூபாய் குறைத்து "இருபத்துநாலுரூபாய்!" என்றாள்.

"இருபத்துநாலு ரூபாயா?" என்று வாயைப் பிளந்தான் மனகாவலம். உடனே "பத்து பதினஞ்சு ரூபாய் எடு!" என்றான்.

"அதுதான் நாலு நாளாச் சோறு போடு துன்னேனே!"

'படீ'ரென்று அவள் மீது பாய்ந்து, "யார் கிட்டே மூதி புளுகறே? எடு பணத்தை!" என்று அவள்கேசத்தைப்பிடித்து உலுக்கினான்.

'ஓ'வென அலறினாள் அழகம்மை.

சுவரோடு சுவராய் அவளை ஒரு தள்ளுத் தள்ளி விட்டு அழகம்மையின் பெட்டியை எடுத்துக் குடைந்தான் மனகாவலம். கையில் அகப்பட்டது கனமான உண்டியல். குலுக்கினான் அதை!

"அதைத் தொடாதீங்க! அது சாமி உண்டியல்!" என்று அவனிடம் ஓடினாள் அழகம்மை.

"எந்தச் சாமியடி? இந்தச் சாமியை விடப் பெரிய சாமி" என்று கத்தினான் மனகாவலம்.

"திருப்பதி வேங்கடாசலபதிக்கு நான் சேர்க்கிற உண்டியல்!"

"எதுக்குச் சேர்க்கிறே?"

"நீங்கள் நல்லவரா மாறவேணும்னு!"

உண்டியலை ஓங்கித் தரையில் அடித்தான் மனகாவலம். உள்ளே அடைபட்டிருந்த நாணயங்கள் சிந்திச் சிதறி நாற்புறமும் உருண்டோடின. அவ்வளவையும் கைகளால் வாரியெடுத்து வெளியில் ஓடினான் மனகாவலம்.

மூக்குத்தி அவன் காலில் குத்திற்று. அதையும் எடுத்துக் கொண்டு ஓடினான்.

அழகம்மை துவண்டு போய் விழுந்து விட்டாள். ஆண்டவனின் பணம் அக்கிரமமான வழியில் அழிந்து போகப் பயன்பட்டு விட்டது. இதை ஏன் ஆண்டவன் தடுக்கவில்லை?

அழகம்மைக்குக் கணவன், இந்த உலகம், தெய்வம் ஒன்றுமே பிடிக்கவில்லை. ஆசாபாசமில்லாத இடத்தைத் தேடித் தன் உயிரை மாய்த்துக் கொண்டு விட்டாள்.

மறைந்து, திரிந்து குடித்து மனகாவலம் சட்டத்தின் கையிலிருந்து எத்தனை நாட்கள் தான் தப்ப முடியும்? சிறைக் கதவுகள் அவனுக்காகத் திறந்து மூன்று மாதங்கள் தன்னுள் அடக்கிக் கொண்டபொழுது, அழகம்மை உயிரிழந்த செய்தியும் கேட்டான். தான் புரிந்து விட்ட பாபச் செயல்களுக்குப் பிராயச்சித்தமாகக் கண்ணீர் சிந்தினான் மனகாவலம்.

மனகாவலம் வெளியில் வந்தபொழுது அனாதையாக வந்தான். அவனைச் சிந்துவார் யாருமில்லை. அழகம்மைக்கு அவன் இழைத்த கொடுமைகள், அவன் ஆடிய ஆட்டங்கள் அவனை மிகவும் வருத்தின. திருப்பதி உண்டியலை உடைத்து உபயோகியாதிருந்தால் அழகம்மையும் இறந்திருக்க மாட்டாள், தானும் குடித்து அன்று சிறை சென்றிருக்க முடியாது என்று தோன்றியது. உடனே பரிகாரமாகத் தானே ஓர் உண்டியல் தயார் செய்தான். திருமண் குழைத்து நாமமிட்டான். தானும் மஞ்சள் வேஷ்டி கட்டிக் கொண்டான். யாசகம் கேட்டு, உண்டியலை நிரப்பி, அழகம்மையின் பெயரால் அதைத் திருப்பதி பெரிய உண்டியலில் சேர்த்தால் தான் நிம்மதி ஏற்படும்போலத் தோன்றியது.

கிளம்பி விட்டான் உண்டியலோடு!

ஆறு மாதம், ஒரு வருடம் ஓடி ஆடி அலைந்தான். பலன்? உண்டியல் முக்கால் பாகம் நிறைந்துவிட்டது. தான் திருந்தி நல்லவனாகி விட்டது அவனுக்கே தெரிந்தது. இனி அழகம்மையின் பிரார்த்தனைப்படி அந்த உண்டியலைத் திருப்பதியில் சேர்த்துவிட வேண்டும்! எழுபது எண்பது ரூபாய் சேர்ந்திருக்கும்.

தான் நல்லவனாகி, யாசகம்கேட்டு உண்டியல் நிரப்பி அதைத் திருப்பதியில் சேர்ப்பதைக் காண அழகம்மையில்லையே என்ற வேதனை அவன்மனத்தைக் குடைந்துகொண்டிருந்தது.

குறுக்குத்துறை கோவிலில் உண்டைக்கட்டி வாங்கிச் சாப்பிட்டான் மனகாவலம். ஆற்று நீரை அள்ளிக் குடித்துவிட்டுக் கல் மண்டபத்தில் வந்து உட்கார்ந்தான். சித்திரை வெயில் சிரசைப் பிளந்து கொண்டிருந்தது. நீர் நிலையிலிருந்து குளிர்ந்த காற்று வீசியது. கண்ணை மூடி அப்படியே படுத்தான்.

எவ்வளவு நேரம் தூங்கினானோ, அது அவனுக்கே தெரியாது. கண் விழித்துப் பார்த்த பொழுது கோவில் நகரா ஒலித்துக்கொண்டிருந்தது.

தன்னைச் சுற்றிக் கண்ணை ஓட்டியபொழுது 'திக்'கென்றது மனகாவலத்துக்கு.

அவன் அரும்பாடுபட்டுச் சேர்த்து, காப்பாற்றி வந்த உண்டியலைக் காணவில்லை. மனமுடைந்து போய்விட்டான் மனகாவலம். ஆண்டவனுக்கு அவன் மீதுள்ள கோபம் இன்னும் தீரவில்லை. அழகம்மைக்கு அவன் இழைத்த கொடுமைகளின் எதிரொலி இன்னும் மறையவில்லை.

ஊர் ஊராகப் போய்விட்ட மனகாவலம் எட்டாண்டுகளில் துறவியாய் மனம் வெறுப்பின் எல்லைக்குப் போய்விட மனகாவலம் பின்னையாகிவிட்டார். எங்கு சென்றாலும் தொடரும் நிழலைப் போலவே அழகம்மையின் நினைவும் அவரைத் தொடரவே செய்தது. இனி அதிக நாளிருக்க மாட்டோம் என்பது தெரிந்ததும் திருப்பதி வேங்கடாஜலபதியைத் தரிசித்து, ஆனந்தித்து, மனமுருக வேண்டும் என்றெண்ணினார். ஆண்டவன் உண்டியலில் காணிக்கையாகச் செலுத்த,

நாலணாவைத் தவிர அவரிடம் வேறு எதுவு மில்லை. நாலணா நாலாயிரம் ரூபாயாயிற்றே.

"பெரியவரு யாருன்னு தெரியலையே!"

மனகாவலம் பிள்ளை முப்பத்தாறு வயதைத் தான் தாண்டியிருந்தாலும் அவருடைய உருவத் தோற்றம் அறுபது வயது மனிதராக அவரைக் காட்டியது.

கையெடுத்து அவரைக் கும்பிட்டார் மனகாவலம் பிள்ளை. "உங்க மனசு ரொம்ப நல்ல மனசு. தெய்வத்துக்கு இந்தக் காலத்திலே இப்படி செய்யிறவங்க ரொம்பவும் குறைவு. உங்க மாதிரி தர்மவானுங்க இருக்கிறதனாலே தான் அப்பப்போனுக்கும் மழை பெய்யுது. பயிர் பச்சை விளையுது!" என்றார்.

"எல்லாம் வெங்கடாஜலபதியின் அருளுங்க. அவன் பணம் இது. அவன் ஒன்னு கொடுத்தான். நான் ஒன்னை ரெண்டாக்கி, அவனுக்கு அப்பப்போ எதனுக்கும் செய்து கிட்டே யிருக்கேன்! ஆனலும் என் மனசு நிம்மதி யடையலே!" என்றார் அந்த மனிதர்.

"ஏன் நீங்க இப்படிப் பணத்தைப் பணம்னு பாராம யாரோ மனகாவலம்பிள்ளை பேரால்தான தருமம்னு வாரிஇறைக்கிறீங்க?" என்றார் மனகாவலம் பிள்ளை ஆவலுடன்.

"ஐயாவைப் பார்த்தா நம்ம ஊர்க்காரராக மாதிரிப்படுது. ஐயா மாதிரி ஒரு ஆளைத்தான் நான் தேடிக்கிட்டிருக்கேன்... உங்ககிட்டே எம் மனசிலே உள்ளதை எல்லாம் சொல்லனும்போல இருக்குது இன்னிக்கு..."

அந்த மனிதர் கூறத் தொடங்கினார்.

"நான் அப்போ திருநெல்வேலியிலே வேலை வெட்டி யில்லாமே சுத்திக்கிட்டிருந்தேன். உலகத்திலே உள்ள அத்தனை கெட்ட பழக்கமும் எனக்குப் பாடம். அப்பா இருக்கிறவரையிலே காசு கையிலே உருண்டுக்கிட்டிருந்தது. அவரு போயி, இருந்த வீடு கடனிலேயும் போயி ஓட்டாண்டியாயிட்டேன். நடுத்தெருவிலே நின்னேன். வெளியூர் எங்கேனுச்சியும் போயிப் பிழைக்கலாம்னு புறப்பட்டேன். கடைசித் தடவையா குறுக்குத் துறை சுப்பிரமணிய சுவாமியைத் தரிசிச்சிட்டுப் போகலாம்னு வந்தேன்...

"என்னப்பன் பன்னிருகை வேலவனைக் கண்குளிரத் தரிசித்தேன். கொஞ்ச நேரம் களைப்புத் தீரக் கல் மண்டபத்தில் உட்கார்ந்தப்போ என் பார்வையிலே ஓர் உண்டியல் பட்டது. பக்கத்திலே உங்களை மாதிரி, ஏழெட்டு வயது சின்னவரு ஒரு ஆளு, தாடியும் மீசையுமா படுத்திருந்தான். நல்ல உறக்கம். ஓசைப்படாமல் உண்டியலை எடுத்துக் கொண்டு கிளம்பி விட்டேன். அதில் என்பது ரூபாயும் சில்லறையுமிருந்தன. ஒரு ஆபீஸில் இட்டிலி. வடை. பலகாரங்கள் விற்கும் வியாபாரம் தொடங்கி, மளமள வென்று வியாபாரம் பெருகி இரண்டு பெரிய ஹோட்டல்களுக்கு முதலாளியாகி விட்டேன். அப்போது எல்லாம் வெங்கடாஜலபதியின் பணத்தை நான் திருடி விட்டதையும், ஒரு அனாதையை நான் வீதியில் அலையவிட்டதையும் என் மனச்சாட்சி சுட்டிக் காட்டத் தவறவில்லை. சிக்கலிங்கிராமத்தில் நான் விசாரித்தபொழுது அந்த ஆள் மனகாவலம் பிள்ளை என்றும் அழகம்மை என்ற மனைவி அந்த ஆளுக்கு இருந்ததென்றும், அவர் சோகக் கதையைத் தெரிந்துகொண்டேன். அந்த மனிதரைக் கண்டுபிடிக்கும் வரை வேங்கடாசலபதிக்கு என்னால் எவ்வளவு அதிகமாகச் செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்துவிடுவது என்று தீர்மானித்திருக்கிறேன் மனகாவலம் பிள்ளையின் பெயரிலே...!" என்றார்.

"நல்ல காரியம்!" என்றார் மனகாவலம் பிள்ளை. அவர் மனம் நிரம்பி யிருந்தது. அந்த உண்டியலை அவர் திருப்பதியில் சேர்த்திருந்தாரானல் ஒரு குறிப்பிட்ட தொகையுடன்தான் ஆண்டவனுக்குச் செலுத்தவேண்டிய தனது காணிக்கை முடிந்திருக்கும். இப்போதோ வட்டியும் முதலுமாய் ஆண்டவனுக்கு ஆயிரமாயிரமாய்ச் சேருகிறது. திருப்பதி வெங்கடாஜலபதி வட்டியும் முதலுமாய்ச் செலுத்தாத பிரார்த்தனைகளை வாங்கி விடுவார் என்பது பிரத்தியட்ச உண்மைதான்.

"ஐயாவுக்கு மனகாவலம் பிள்ளையைத் தெரியுமா?" என்று கேட்டார் அவர்.

"தெரியாதே!" என்றார் மனகாவலம் பிள்ளை. ஆளைக் கண்டுபிடிக்கும்வரை ஆண்டவனுக்குத் தம்மால் எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாகச் செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்து விடுவது என்று தீர்மானித்திருக்கிறாரல்லவா அந்த மனிதர்! இப்போது தாம் தான் மனகாவலம் பிள்ளை என்று கூறிக் கொண்டு அந்த எண்ணத்தைத் தீர்மானத்தைத் தடைசெய்துவிட விரும்பவில்லை மனகாவலம் பிள்ளை. ஆண்டவனுக்குக் குறுக்கே ஒரு மனிதன் வந்து நிற்கலாமா?



# பரிசுப் பொட்டலம்

வாயாடி



"டேய், மார்க்கபந்து. நுன்னிக்குச் சிமாச்சுவுக்குக் கல்யாணமாச்சே; அழைப்பு வந்திருக்கே. இல்லியோ?" என்று கேட்டான் சீதாராமன்.

"ஓ, என்: அங்கேதான் நீ போய்க்கொண்டிருக்கியோ? ஒரு நிமிஷம் இரு. ஷர்ட் மாத்திக் கொண்டு நானும் வந்து விடுகிறேன்" என்று கூறி மார்க்கபந்து உள்ளே போனான்.

"கமலம், நம்ம சிமாச்சுக் கல்யாணத்துக்குக் கிளம்பிண்டிருக்கேன், நீ வருகிறாயா?"

"நான் என்னத்துக்கு? நீங்க போய் விட்டு வந்தாலே போதும். ஆமாம், வெறுங் கையோடா போகப் போகிறீர்கள்? அவர் வீட்டிலே எல்லாரும் ஒரு மாதிரியாச்சே?"

"போடி போ! தேதி இருபத்தியொன்பது; கையில் சல்லிக் காசு கிடையாது. எதை வாங்கிக் கொண்டு போவது?"

நண்பர்கள் இருவரும் தைரியமாக வெறுங் கையுடன் கல்யாணத்துக்குக் கிளம்பினார்கள். தெரு முனையை அடைந்ததும் திடீரென்று மார்க்கபந்து காலைத் தூக்கி நொண்டத் தொடங்கினான். "ககக்கு...அடடா! காலில் ஏதோ குத்தி விட்டது. சே! செருப்பு போட்டுக் கொள்ளாமல் வந்தது ரொம்பத் தப்பு. நீ மெல்ல நடந்து போய்க் கொண்டே இரு. வீடு திரும்பிச் செருப்பு மாட்டிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறிய மார்க்கபந்து விந்திக் கொண்டே வேகமாக நடந்தான்.



வீட்டு வாசலில் சத்தம் கேட்டு கமலம் எட்டிப் பார்த்தாள். கணவன் செருப்பைப் போட்டுக் கொள்வதை கண்டாள். "கல்யாண வீட்டுக்கு யாரேனும் செருப்பு போட்டுக் கொண்டு போவார்களோ? நிச்சயமாகத் தொலைந்து தான் போகப் போகிறது" என்று பொரிந்து தள்ளினாள் கமலா.

"பத்திரமாகத் திருப்பிக் கொண்டு வந்து உன்னிடமே ஒப்படைத்து விடுகிறேன்!" என்று கூறி விட்டுச் சீதாராமனை எட்டிப்பிடிக்க உத்தேசித்து மார்க்கபந்து ஓட்டமாக ஓடினான்.

அவன் தெரு முனையை அடைவதற்கும், செருப்பு அறுந்து தொங்குவதற்கும் சரியாக இருந்தது. "அட ராமச்சந்திரா!" என்று அலுத்துக் கொண்டான் மார்க்கபந்து. தூரத்தில் சீதாராமன் சற்று திரும்புவது தெரிந்தது. மறுபடியும் வீட்டுக்குப் போய்விட்டு வர நேரமாகிவிடும். செருப்பைக் கையில் தூக்கிக் கொண்டும் கல்யாண வீட்டுக்குப் போக முடியாது. பக்கத்திலிருந்த 'அம்பிகா ஜுவல்லரீஸ்' நகைக் கடை முதலாளி ராமச்சந்திரன்.

"என்ன மார்க்கபந்து ஸார்! கூப்பிட்டீர்களா என்ன?" என்று கேட்டார்.

"பகவானை அழைத்தேன்!" என்றான் மார்க்கபந்து. "இந்தச் செருப்பைச் சுற்றிக் கொள்ள ஒரு காகிதம் வேணும்."

"ப்பூ! இவ்வளவுதானே இதற்குப் போய் பகவானைக் கூப்பிடுவானேன்? இந்தாருங்கள். இதற்குள் போடுங்கள்" என்றவாறே ஒரு காகித உறையை நீட்டினார் ராமச்சந்திரன்.

"ரொம்ப நன்றி" என்று கூறிவிட்டு ஓடினான் மார்க்கபந்து.

கல்யாண வீட்டு வாசலில், "அடேடே! அம்பிகா ஜுவல்லரிக்குள்ளே நுழைஞ்சுட்டு வந்திருக்கிறாப்போலிருக்கே!" என்றான் சீதாராமன்.

"டேய்! அது விஷயம் அப்புறம் சொல்றேன்!" என்று தடுமாறினான் மார்க்கபந்து.

"சரி, சரி. ரெண்டு பேரும் சேர்ந்து போகிறப்போ, நான் வெறுங்கையோடு வந்திருப்பதைக் கட்டிக் காட்ட ஒரு சூழ்ச்சி பண்ணிட்டே" என்றான் சீதாராமன் துயரோடு.

இந்தச் சம்பாஷணை விருந்தினரை வரவேற்க வாசலிலேயே நின்ற கல்யாண வீட்டாரின் காதில் விழாமல் போகவில்லை. அவர்கள் கண்கள் மார்க்கபந்துவின் கையிலிருந்த 'பரிசுப் பொட்டலத்'தின் மீதே பதிந்திருந்தன. ஏக உபசாரம் அவனுக்கு. சாப்பாடு கனஜோராக முடிந்தது. தாம்பூலம் தரித்துக் கொண்டிருக்கையில் சிறுவன் ஒருவன், "மாமா! ஆசீர்வாதம் நடக்கிறதாம். உங்களைக் கூட்டிண்டு வரச்சொன்னா!" என்றான். மார்க்கபந்துவுக்கு வியர்த்து விட்டது.

"இன்னும் என்னடா தயக்கம்? கொண்டு போய்க் கொடேன்!" என்றான் சீதாராமன்.

"போடா, முட்டாள்! அறுந்த செருப்பைப் பையில் போட்டுண்டு வந்திருக்கேன்டா!"

"அட கடவுளே!" அதிர்ச்சி அடைந்த சீதாராமன் "டேய்! கையில் எடுத்து வந்த பொட்டலத்தைத் திருப்பி எடுத்துப் போனால் அவர்கள் நிச்சயம் தப்பாக நினைத்துக் கொள்வார்கள். பேசாமல் இந்தப் பையை என்னிடமே கொடுத்தனுப்பி விடு" என்றான் ரகசியமாக. பின்னர், "இந்தா பையா! இதை வாங்கிக் கொண்டு போய் மாப்பிள்ளை பேருக்கு ஒதிவிடச் சொல்" என்று கூறிவிட்டு இருவரும் நழுவினார்கள்.

"பார்த்தீங்களா? நான்தான் அப்பவே சொன்னேனே" என்றாள் கமலம், செருப்பில்லாமல் திரும்பிய மார்க்கபந்துவிடம்.

"இந்தா, பேசாமலிரு! செருப்பை மாப்பிள்ளைக்குப் பரிசாகக் கொடுத்துவிட்டேன்!"

"என்ன? என்ன?"

கமலத்துக்கு ஒன்றும் புரியவில்லை; பரிசுப் பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்த கல்யாண வீட்டுக்காரர்களுக்கே ஒன்றும் விளங்காத போது கமலத்துக்கு மட்டும் எப்படிப் புரியும்?

## பாரதநாட்டுப் பருத்திக்கே, ஏலேலோ...பேரமாம் கத்திமுனையில், ஐலஸா...

18—ம் நூற்றாண்டின் பாலகாண்டம்...சந்தடிமயமான கல்கத்தாவின் வண்ணத் துறைமுகம்... பொங்கு கடலோடப் புறப்பட்டுவிட்டது கிழக்கிந்தியக் 'கும்பினிக்' கப்பலொன்று...ஏற்றியிருந்த கனமையோ விலைமதிப்பற்ற சரக்குகள்; மகத்தான வேலைப்பாடிழைத்த துகில்கள், ஏலம், மிளகு வகையறா, நுண்ணிய நெசவும், கோல வனப்பும் அமைந்த பருத்தித் துணிகள்.

பாரதநாட்டு வாணிப வரலாற்றிலேயே பரபரப்பு மிகுந்த பருவம்...பேர் வணிகப் பேரேடும், போர் வாளும் நாட்டாண்மை செலுத்திய காலம். கடல்நெடுக, 'கும்பினிக்' கப்பல்களின் ஆனந்த நடனம்; புயல், கண்ணற்ற கடற்பாதை, வழிப்பறி, கொள்ளை, போட்டி வாணிபப் போர்ப் படையின் இடையீடு... எல்லாவற்றையும் எற்றவண்ணம் தீரமுடன் அக்கப்பல்கள் இந்தியப் பருத்தித் துணிகளைச் சுமந்து சென்றன, அத்துணிகளை மெச்சிப் போற்றிய மேனாட்டு விற்பனைத் தலங்களுக்கு.

இன்றும் சரி, இந்தியப் பருத்தித் துணிகள் வையகமெங்கும் செல்லாத இடம் இல்லை. அக்காலக் 'கும்பினிக்' கப்பல்கள் இன்று வெறும் நினைவுச் சின்னங்களாகவும், பண்டையக்கால நெசவு முறைகள் விசைத் தறிகளாகவும் மாறிவிட்டபோதிலும், பரம்பரை பரம்பரையாக வந்த பற்றும், ஒப்பற்ற கலைத் திறனும் அசையாது நிலைபெற்றுள்ளன. எம்முடைய ஆலைகளில் நாள்தோறும் நெசவிடப்படும் 80,000 கஜத் துணிகளில் ஒவ்வொரு சாணும் இதற்குச் சான்று கூறும்.

# சாயாஜீ மில்ஸ் நம்பர் 2

**பெர்குஸன் ரோடு, பம்பாய்-13**



**இது ஒரு ரோஹித் க்ரூப் ஸ்தாபனம்.**

# மன்னார் கோயில் வேதநாராயணன்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

வெங்கண் திண்களிறு அடர்த்தாய்
 வித்துவக் கோட்டம்மானே!
எங்குப்போய் உய்கேன் உன்
 இணையடியே அடையல் அல்லால்
எங்கும் போய் கரைகாணாது
 எறிகடல் வாய் மீண்டேயும்
வங்கத்தின் கூம்பேறும்
 மாப்பறவை போன்றேனே.

என்று ஒரு பாசுரம். மிக அருமையான பாசுரம். ஒரு கப்பல் புறப்படுகிறது கடலில். அக்கப்பலின் கொடி மரத்திலே ஒரு பறவை இருக்கிறது. கப்பல் நடுக்கடலுக்குச் சென்று விடுகிறது. அப்போது பறவை பறக்க ஆரம்பிக்கிறது. நிலத்தை விட்டு நெடுந்தூரம் கப்பல் வந்துவிட்டதால் பறவையால் திரும்ப நிலத்துக்குச் செல்ல முடியவில்லை. கடலிலோ பறவை சென்று தங்க வேறு இடமும் இல்லை. ஆதலால் பறந்த பறவை திரும்பவும் கப்பலின் கொடி மரத்துக்கே வந்து சேருகிறது. நாமும் வாழ்வு ஆகிய கடலிலே இறைவனுகிய கப்பலின் கொடி மரத்தில் உள்ள பறவை போன்றவர்கள்தாமே. எப்படி எப்படிப் பறந்தாலும் கடைசியில் இறைவனிடத்துக்கே திரும்பி அவனது தாள்களையே பற்றிக் கொள்வதைத் தவிர வேறு வழியே இல்லையல்லவா? இந்த அற்புத உண்மையைத்தான் நல்லதோர் உவமையோடு பாடல் கூறுகிறது. இந்தப் பாடலைப் பாடியவர் குலசேகரர். ஆம்! பன்னிரு ஆழ்வார்களில் ஒருவரான குலசேகர ஆழ்வார்தான். சேரமன்னர் பரம்பரையைச் சேர்ந்தவர். கொல்லி நகரைத் தலைநகராகக்கொண்டு சேரநாட்டை ஆண்டு வருகிறார். எம்பெருமானிடம் தீராத காதல் கொள்கிறார். அது காரணமாக ஸ்ரீவைஷ்ணவர்களோடு நெருங்கி வாழ்கிறார். இது மந்திரி பிரதானிகளுக்குப் பிடிக்கவில்லை. ஸ்ரீ வைஷ்ணவர்களிடம் இருந்து பிரிக்க ஒரு சூழ்ச்சி செய்கிறார்கள். பெருமான் திரு ஆபரணப் பெட்டியிலிருந்து ஒரு நவரத்தின ஹாரத்தை எடுத்து ஒளித்து வைத்து விட்டு அதனை வைஷ்ணவர்களே எடுத்திருக்க வேண்டுமென்று மன்னனிடம் புகார் செய்கிறார்கள். மன்னருக்கோ வைஷ்ணவர்களிடம் அளவு கடந்த நம்பிக்கை. அவர்கள் இதைச் செய்திருக்கவே மாட்டார்கள் என்பதை நிரூபிக்க, ஒரு மண் குடத்தில் விஷப் பாம்புகளைப் போட்டுக் கொண்டு வந்து வைத்து, 'அந்த ஹாரத்தை வைஷ்ணவர்கள்தாம் எடுத்திருக்கிறார்கள்' என்று சொல்கிறவர் குடத்தில் கைவிட்டுப் பிரமாணம் செய்யச் சொல்கிறார். மந்திரி பிரதானிகள் ஒருவரும் முன்வரவில்லை. உடனே மன்னராம் குலசேகரரே, 'பரன் அன்பர் அக்காரியம் செய்யார்' என்று சொல்லிக் கொண்டே பாண்டத்தில் கைவிட்டுச் சத்தியம் செய்கிறார். பாண்டத்தில் உள்ள பாம்பு ஒன்று அவர் கை வழியாக ஏறித் தலையில் வந்து அவருக்குக் குடை பிடிக்கவும், மற்றொன்று வெளியே வந்து ஹாரத்தை மறைத்தவர்களைச் சீறி விரட்டவும் செய்கின்றன. மறைத்தவர் மன்னர் காலில் விழுந்து மன்னிப்புப் பெறுகிறார்கள். குலசேகரர் பரமபக்தராக, ஆழ்வாராக வாழ்கிறார். பரந்தாமன் மீது பல பாடல்களைப் பாடுகிறார். இந்தத் தகவலையெல்லாம்,

ஆரம் கெடப், 'பரன் அன்பர்
 கொள்ளார்' என்று அவர்களுக்கே
வாரம் கொடு குடப் பாம்பில்
 கையிட்டவன் — மாற்றலரை
வீரம் கெடுத்த செங்கோல்
 கொல்லி காவலன், வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடி
 வேந்தர் சிகாமணியே

என்ற பாடல் தெரிவிக்கிறது. இந்தக் குலசேகரர் பல தலங்களுக்கும் சென்று, கடைசிக் காலத்தில் வந்து தங்கியிருந்த இடம்தான் வித்துவக்கோடு. இந்த வித்துவக்கோடு மலை நாட்டில் உள்ள தலம் என்று கருதுபவர்கள் பலர். இல்லை, கரூரை அடுத்த வித்துவக்கோட்டக்கிரகாரமே என்பார் சிலர். இன்னும் சிலர் இது திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள மன்னார்கோயிலே என்பர். எந்தத் தலமாக வேனும் இருக்கட்டும். வங்கத்தின் கூம்பு ஏறிய மாப்பறவை போல் பல தலங்களுக்

விஷ்வக்சேனர்



ளும் சென்ற குலசேகரர் கடைசியில் வந்து தங்கிய இடம் மன்னார்கோயில் என்பதில் விவாதம் இல்லை. அந்த மன்னார்கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

மன்னார்கோயில், திருநெல்வேலி மாவட்டத்திலே அம்பாசமுத்திரம் என்னும் ஊருக்கு வடமேற்கே மூன்று மைல் தூரத்தில் இருக்கிறது. அங்கு செல்ல அம்பாசமுத்திரம் ஸ்டேஷனில் இறங்க வேண்டும். அங்கிருந்து வண்டி வைத்துக் கொண்டு செல்ல வேணும். காரில் வந்தால் நேரே ஊரில் போய் இறங்கலாம். அம்பாசமுத்திரம்—தென்காசி ரோட்டில் பஸ்ஸில் வந்தால் அம்பாசமுத்திரத்துக்கு மேற்கே இரண்டுமைல் தூரத்தில் இறங்கி நடந்து ஒரு மைல் வடக்கு நோக்கிச் செல்லவேணும். ஊரை அடுத்துக் கருணை நதி ஓடுகிறது. கோயில் வாயிலில் ஒரு பெரிய மண்டபம் இருக்கிறது. அதனைப் பந்தல் மண்டபம் என்பர். இம்மண்டபத்தில் முத்துக்கிருஷ்ண நாயக்கனுடைய சிலையும் அவனுடைய தளவாய் ராமப்பய்யனுடைய சிலையும் இருக்கின்றன. பாண்டியர்கள் சின்னமான மீன்கள் மண்டப முகட்டில் காணப் படுகின்றன. ஆதலால் நாயக்க மன்னர்கள் ஆட்சியில் யாரோ ஒரு பாண்டியன் கட்டியிருக்கவேணும். இதனை அடுத்தே கோயிலின் பிரதான வாயில். அந்த வாயிலை ஐந்து அடுக்குகள் கொண்ட கோபுரம் அணி செய்கிறது. இதனை அடுத்தது ஒரு 'பெரிய மண்டபம். இம் மண்டபத்தில், குமார கிருஷ்ணப்ப நாயக்கர் சிலை இருப்பதால் அவரே இம் மண்டபம் கட்டியிருக்க வேணும். இங்கேயே சென்டலங்கார மாமுனிகள், பாராங்குசர் முதலியோரது சிலைகள் இருக்கின்றன. மற்ற மண்டபங்களையும் கடந்து அந்தாரளம் சென்றால் அதை அடுத்த கருவறையில் மூலவரான வேத நாராயணனைத் தரிசிக்கலாம். இவருக்கு இருபக்கத்திலும் ஸ்ரீ தேவியும் பூதேவியும்நிற்கிறார்கள். வேத நாராயணனும் நின்ற கோலத்திலேயே சேவை சாதிக்கிறான். பக்கத்திலேயே பிருகு மகரிஷியும் மார்க்கண்டேயரும் இருக்கிறார்கள். ஒன்று சொல்ல மறந்து விட்டேனே. இத்தலம் ஏற்பட்டதே, பிருகு மகரிஷியால் தான். பிருகு மகரிஷியின் பத்தினி யோதி என்பவள் அசுரர்களுக்கு அடைக்கலம் கொடுக்கிறாள். இதனால் ஸ்ரீமன் நாராயணன் சக்கராயுதத்தால் . யோதியைச் சேதிக்கிறான். மனைவியை இழந்த பிருகு கோபங் கொண்டு 'நான் மனைவியை இழந்து தவிப்பது போல் இந்தப் பரந்தாமனும் மனைவியை இழந்து தவிக்கட்டும்' என்று சாபமிடுகிறார். பின்னர் கோபம் தெளிந்த பின், பரந்தாமனைச் சபித்து விட்டோமே என்று வருந்தி, தவம் கிடக்கிறார். ஆனால் பரந்தாமனோ 'மகரிஷியின் வாக்கும் பொய்க்கக் கூடாது' என்று பின்னர் ராமனாக அவதரித்து, சீதையைப் பிரிந்து துயர் உறுகிறார். இராவண வதம் முடித்துத் திரும்புகின்ற போது, பிருகு வேண்டிக் கொண்டபடி, அவருக்குச் சேவை சாதிக்கிறார். பிருகுவும் அந்த வேதநாராயணனைப் பொதிய மலைச் சாரலிலே இந்த இடத்திலே பிரதிஷ்டை பண்ணுகிறார். தானும் தம் கொள்ளுப் பேரனுமான மார்க்கண்டேயனுடன் அத்தலத்தில் தங்கி, வேதம் ஓதிக் கொண்டு வாழ்கிறார். அதனாலே வேத நாராயணன் சந்நிதியில் பிருகுவும் மார்க்கண்டரும் இடம் பெற்றிருக்கின்றனர். வேதநாராயணனும், வேதவல்லித் தாயாரும், புவனவல்லித் தாயாரும் உத்சவ மூர்த்திகளாக அமர்ந்திருக்கின்றனர். இத்தாயார்களுக்குத் தனிக் கோயில்கள் வேறே இருக்கின்றன. அந்த மண்டபத்திலே குலசேகரரது திரு ஆராதன மூர்த்தியான ராமன் சீதாலக்ஷ்மண சமேதனாக எழுந்தருளியிருக்கிறான். இன்னும் இங்கேயே காட்டு மன்னார், கண்ணன், சக்கரத்தாழ்வார், மற்ற ஆழ்வார்கள், ராமானுஜர், மணவாள மாமுனிகள் எல்லாரும் இருக்கின்றனர். இந்த மண்டபத்திலிருந்து வேத நாராயணனைச் சுற்ற ஒரு பிரதக்ஷிணம் இருக்கிறது. அதனை அடைத்து வைத்திருக்கின்றனர். இதற்கு அடுத்த மண்டபமே மகா மண்டபம். இத்தலத்தில் இதனைக் குலசேகரன் மண்டபம் என்று அழைக்கின்றனர். இதில்ஓர் உள்மண்டபம், வேதிகையும் இருக்கின்றன. இந்த வேதிகையை விசுவநாதன் பீடம் என்கின்றனர். இந்த வேதிகையில் ராஜகோபாலன், ஆண்டாள், கருடன் எல்லோரும் எழுந்தருளி யிருக்கின்றனர். இந்த ராஜகோபாலன் பக்கத்திலே குலசேகராழ்வார் உத்சவ மூர்த்தியாக எழுந்தருளியிருக்கிறார்.



குலசேகர ஆழ்வார்

இதற்கு வெளியே உள்ள ஒளிக்குறடும் மண்டபமும் மணிமண்டபம் என்று பெயர் பெறும். இக் குறட்டிலிருந்து தென்பக்கத்துப் படிகள் வழியாக மாடிக்கு ஏறிச் சென்றால் அங்கு பரமபதநாதன் வீற்றிருந்த திருக்கோலத்தில் காட்சி கொடுக்கிறார். இவரைச் சுற்றியுள்ள பிரதக்ஷிணமே யானைமுடுக்கு என்று சொல்லப் படுகிறது. அதன்பின் அந்த மண்டபத்தின் கீழ்ப்புறமுள்ள படியாக மேலும் ஏறிச் சென்றால் அரங்கநாதன் போல் பள்ளிகொண்ட பெருமானைக் காணலாம். இப்படி வேத







இந்த இடைக்காலம் முழுவதும் எனது உயிர் மொத்தத







தொகையான ரூ. 10000க்கு காப்புறுதி செய்யப்பட்டு இருந்தது

## "எதிர்பார்க்கப்பட்ட என்டௌமென்ட் பாலிசி"

(Anticipated Endowment Policy)

## எனக்கு எப்படி உதவியது தெரியுமா?



ஆயுள்இன்சூரன்சில் மிகவும் கவர்ச்சியான ஒரு அம்சம், இந்தப்பாலிசி எனலாம். பாலிசி தாரரின் உயிருக்கு, காப்புறுதி செய்வதுடன், பாலிசி இயக்கத்தில் இருக்கும்போது, குறித்த இடைக்காலங்களில் மொத்த ரொக்கத் தொகைகளைப்பெற, பாலிசிதாரருக்கு வகை செய்கிறது. உங்கள நிதியினைத் திட்டமிட்டு அமைக்கவும், அதேநேரத்தில் உங்கள் குடும்பப்பாதுகாப்பிற்கு உறுதியளிக்கவும் வல்ல இனியவழி இது ஒன்றே! உங்கள் வயது, காப்புத்தொகை, பாலிசிக்காலம் போன்றன வற்றுக்கு ஏற்ப, கட்டவேண்டிய பிரீமியங்கள் வேறுபடும். (மேலே காட்டிய எடுத்துக் காட்டில் மாதத்திற்கு அது சுமார் ரூ. 47)

"எதிர்பார்க்கப்பட்ட என்டௌமென்ட் பாலிசி" எப்படி உங்களுக்கு உதவக் கூடும் என்பதை அறிய ஒரு ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) இன்றே நாடுங்கள்.



# ஆயுள் இன்சூரன்சு

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை..

ASP/LIC-5




திருச்சி ஜில்லா லால்குடிக்கு அருகே காட்டூரில் கோத்தாரி சர்க்கரை கெமிகல்ஸ் ஸ்தாபனத்தாரால் ஆரம்பிக்கப்படும் சர்க்கரை ஆலைக்கு முதல் அமைச்சர் காமராஜர் சென்ற மாதம் அடிக்கல் நாட்டினார். தொழில் அமைச்சர் ஆர். வேங்கடராமனும், விவசாய அமைச்சர் பக்தவத்சலமும் தமிழகத்தில் பெருகிவரும் தொழில்வளம் பற்றிப் பேசினார்கள்.

நாராயணனாக நின்று, இருந்து, கிடந்த கோலத்தில் எல்லாம் சேவை சாதிக்கிறான். இந்தப் பள்ளிகொண்ட பெருமானைச் சுற்றியுள்ள பிரதட்சிணத்தைப் பூர்ண முடிக்கு என்கின்றனர். இனி படிகளின் வழியாகக் கீழே இறங்கி வந்து வடபக்கத்துக்குச் சென்றால் அங்கு புவனவல்லித் தாயாரைக் கண்டு வணங்கலாம். அங்கேயே விஷ்வக்சேனரையும் தரிசிக்கலாம். அதன்பின் அங்குள்ள சின்னக் கோபுர வாயில் வழியாகக் கொடி மண்டபத்துக்கு வந்தால் வடக்கு வெளிப் பிராகாரத்தில் குலசேகராழ்வார் சந்நிதிக்கு வரலாம். இவருக்குத் தனிக் கோயில், கொடி மரம், தேர் எல்லாம் ஏற்பட்டிருக்கும் சிறப்பைப் பார்த்தால் இவர் இத்தலத்தில் சிறப்பாகக் கொண்டாடப் படுவதின் அருமை தெரியும். இங்கு கருவறையில் ஆழ்வார் கூப்பிய கையோடு எழுந்தருளியிருக்கிறார்.

குலசேகரர் இத் தலத்துக்கு வந்து தங்கியிருந்ததைப் பற்றி எத்தனையோ கதைகள். இங்கு இவர் வந்து தங்கியிருந்த காலத்தில் தன் ஆராதனை மூர்த்திகளான சக்கரவர்த்தித் திருமகனையும், ராஜகோபாலனையும் இக் கோயிலில் எழுந்தருளச் செய்ய வேண்டும் என்று கூறியிருக்கிறார். அங்குள்ள அர்ச்சகர்கள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. க்ஷத்திரியராம் குலசேகரரது ஆராதனை மூர்த்திகளைக் கோயிலுள் எழுந்தருளப் பண்ண இயலாது என்பது அவர்களது வாதம். அன்றிரவு திரு விசாகம் ஆனதும், கோயில் ஆழ்வாரைக் கொண்டு சந்நிதிமுன் வைத்துப் பெருமாளைப் பிரார்த்தித்துக் கொண்டே இருந்திருக்கிறார் குலசேகரர். மறுநாள் விடியற்காலையில் கதவைத் திறந்தால் உள்ளே சக்கரவர்த்தித் திருமகனும் ராஜகோபாலனும் எழுந்தருளியிருக்கிறார்கள். உடனே எல்லோரும் குலசேகரர் திருவடிகளிலே விழுந்து வணங்கி அவர் பக்திப் பெருமையை உணர்ந்திருக்கிறார்கள். குலசேகரர் பின்னர் அத்தலத்திலேயே தங்கித் தமது 67வது வயதில் திரு நாட்டுக்கு எழுந்தருளியிருக்கிறார்.

ஆதியில் இத்தலம் வேதநாராயணபுரம் என்றே அழைக்கப்பட்டிருக்கிறது. இக்கோயில் கல்வெட்டுக்களிலிருந்து கண்ணனுக்கு ஒரு கோயில் இவ்வூரில் இருந்திருக்கவேணும் என்று தெரிகிறது. அக்கோயில் இப்போது இல்லை. உடைந்த வேணுகோபாலன் சற்சிலையும், ருக்மிணியின் சற்சிலையுமே கிடைத்திருக்கின்றன. கோயிலுள் ஒரு நவநீதகிருஷ்ணன் விக்கிரகம் மட்டும் இருக்கிறது. பிரம்ம வித்துவான்கள் நிறைந்த ஊராகையால், பிரம்ம வித்துவான்களுக்குப் பாண்டிய அரசர்களால் தானமாகக் கொடுக்கப்பட்ட ஊராகையால், இதனைப் பிரமதேயம் என்றும் அழைத்திருக்கின்றனர்.

இந்த ஊருக்கு மன்னார் கோயில் என்று ஏன் பேர் வந்தது. என்பதைச் சொல்லவே இல்லை என்றுதானே குறைப்படுகிறீர்கள்? குலசேகரருக்கு ராஜகோபாலன் என்ற அழகிய மன்னனார் பேசும் தெய்வமாக இருந்திருக்கிறார். அத்துடன் குலசேகர மன்னன் பெயரையும் தொடர்பு படுத்தி மன்னனார்கோயில் என்று முதலில் வழங்கியிருக்கவேணும். பிறகு மன்னார்கோயில் என்று குறுகியிருக்க வேணும்.

# பிட்டுத்தோப்பு



வைகையாற்றுப் பாலத்தைக் கடந்து இரயில் மதுரைக்குள் நுழைகிறபோது நீங்கள் வண்டி போகிற திசையை நோக்கி உட்கார்ந்திருந்தால்-வலது கைப்பக்கம் ஆற்றின் தெற்குக் கரையில் பாலத்துக்குச் சிறிது தொலைவு மேற்கே அடர்த்தியாகத் தென்னை மரங்கள் தெரியும். கரையிலிருந்து ஆற்றுப் பரப்பை நோக்கி ஒட்டைச் சிவிங்கிபோல் நீட்டி வளைந்துக் கொண்டு வைகையில் புதைந்து கிடக்கிற எந்த இரகசியத்தையோ மேலேயிருந்து தேடுவதுபோல் தோன்றும். இந்தத் தென்னை மரங்களில் மனத்தைப் பறி கொடுக்கவில்லையானாலும் எதற்குமே மனத்தைக் கொடுத்து ஈடுபடத் தெரியாதவர் என்று தான் உங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கும்.

கண்ணுக்கினிய இந்தத் தென்னை மரக் கூட்டத்துக்குத் தான் மாதத்திற் கொரு திருவிழாவுடைய எங்கள் மதுரைமா நகரத்தில் பிட்டுத்தோப்பு என்று பெயர். இது என்ன பெயர்? பிட்டாவது தோப்பாவது? - என்று நீங்கள் முகத்தைச் சுளித்துக் கொண்டு முணுமுணுப்பது என் காதில் விழுகிறது. போனால் போகிறதென்று பழைய சங்கதிகளைக் கொஞ்சம் படித்து வைத்திருந்தால் இதெல்லாம் தெரியும்! புதியதைப் படிப்பதற்கே நேரமில்லாதபோது பழையதைப் படிக்க உமக்கு நேரமேது? சொல்கிறேன். கேளும்...

ஆலவாய் நகராகிய மதுரையில் சோமசுந்தரப் பெருமான் அறுபத்து நாலு திருவிளையாடல்கள் செய்து மகிழ்ந்தாரே, அவற்றில் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் என்பதும் ஒன்று. அந்தக் கதையை எப்போதாவது பள்ளிக்கூடத்துப் பாடப் புத்தகத்தில் படித்திருப்பீர்; அல்லது படிக்காமலும் விட்டிருப்பீர். அதைப் பற்றிய கவலையை ஏற்கெனவே உமக்குப் பள்ளிக்கூடத்தில் வாத்தியாராயிருந்த துர்ப்பாக்கியசாலி பட்டிருப்பாராதலால் நான் மேலே இந்தக் கதையைத் தொடர்கிறேன். 'வந்தி' என்னும் ஏழைக் கிழவிக்காகச் சிவபெருமானே பிட்டுக்கு மண் சுமக்கும் கூலியாய் வந்து வைகை வெள்ளத்தை அடைக்கிற வேலையைச் சரியாய்ச் செய்யாமல் பாண்டியனிடம் பிரம்படிபட்ட இடம் ஐயா இது!

அந்தக் காலத்தைப்போல் இப்போதெல்லாம் வைகையில் அவ்வளவு பெரிய வெள்ளம் வராத காரணத்தாலோ, என்னவோ, நகரசபைக்காரர்கள் சாக்கடையைக் கலக்க விட்டுத் திருப்திப் பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சோமசுந்தரப் பெருமானுக்கு வாரிசாக இருந்து இந்தமட்டிலாவது திருவிளையாடல்களைப் புரிந்துகொண்டு வருகிறவர்களைப் பாராட்ட வேண்டாமா? பிரம்படி கொடுப்பதற்குப் பாண்டிய வமிசத்தில் யாரும் இப்போது இல்லாததால் வெறும் பாராட்டோடு விட்டு விடுவோம்.

இங்கே நம்முடைய கதை நடக்கிற இந்தக் காலத்தில் திருவிளையாடற் புராணத்து மகிமைகள் ஒன்றும் பிட்டுத் தோப்பிலோ, அதன் கீழேயுள்ள வைகை மணற்பரப்பிலோ இல்லை என்பது சர்வ நிச்சயம். தோப்பை ஒட்டினாற்போல அக்கம்பக்கத்தில் கிடுகு வைத்து மறைக்கப்பட்ட குஸ்திப் பள்ளிக் கூடங்கள் இரண்டு மூன்று உண்டு. அப்பால் மில் கூலிகளின் நெருக்கடி நிறைந்த வீதிகள். இந்தப் பக்கம் தோப்புக்குக் கீழே ஆற்றில் தேங்கி ஓடாத நீருடன் 'ஓடைகால்களும், பூர்விகத்தில் தார் டிரம்மாக இருந்து இப்போது மணலில் உறையாக இறக்கப்பட்ட ஊற்றுப் பதிவுகளும், தோய்ப்பதற்காகப் போடப்பட்ட 'பட்டைக் கற்களுமாகத் தினசரி குளிக்க வருகிறவர்கள் கண்டுகண்டு அலுத்துப் போனதொரு காட்சி தெரிந்து கொண்டிருக்கிறது.

## பொன்முடி



நேர் எதிர்க்கரையில் வடக்கே மயானத்தைத் தவிர விசேஷமாக ஒன்றும் இல்லை. தத்தனேரி என்று சொன்னால் திருவிளையாடற் பட்டணத்து வாசிகளுக்குச் சாவைத் தவிர வேறு ஒன்றும் நினைவு வரப் போவதில்லை. இந்த இடத்தில் பிட்டுத்தோப்புக்கும் வடக்குக் கரைக்கும் நடுவே ஆற்றுக்குள் ஓடுகால்கள் அதிகமாக இருந்ததற்குத் தொழில் இரகசியம்தான் காரணம். 'வெள்ளம்' என்கிற அதிசய நிகழ்ச்சி வைகையில் ஏற்படாத காலங்களில் மயானத்துக்குப் போகிற 'கார்டு லேன்' ஆக இருந்ததனால் செத்தவரைச் சூழ்ந்து சென்ற சாவார்கள் திரும்பி வந்து முழுக்குப் போட்டு விட்டுப் போக ஏற்றதாயிருந்தது இந்தப் பகுதி. முழுகுகிறவர்களை நம்பி ஓடுகால்காரர்கள் முழுகாமல் தொழில் நடத்த ஏற்ற இடம் இது.

எனவேதான் சாகிறவர்களையும், அவர்களுக்குப் பின்னால் போய் விட்டுச் 'சாவுத்தீட்டோடு' திரும்புகிறவர்களையும் நம்பி நம்முடைய கதாநாயகனாகிய பரமசிவம் பிட்டுத் தோப்புக்கு அருகே ஓர் ஓடுகால் வெட்டிக் கொண்டு ஊற்றிலே நீரும், வயிற்றிலே பசியும் ஊற உட்கார்ந்தான்.

'பரமசிவத்தின் ஓடுகாலைப் பற்றிக் கொஞ்சம் வர்ணிக்கலாமா? வர்ணிப்பதற்கு அதில் அற்புதங்கள் ஒன்றும் இல்லையென்றாலும் 'ஒன்றுமில்லை' யென்பதையே வர்ணனைக்கு விஷயமாக்கிக் கொள்ள முடியும்தானே? 'வரம்

பெலாம் முத்தம் மடையெலாம் சங்கம்'- என்று கவிராயர்கள் உயர்வு நவிற்சி பண்ணுகிறமாதிரிப் பரமசிவத்தின் ஓடுகாலில் பெரிய அம்சங்கள் ஏதும் கிடையாது.

ஓடுகால் தோண்டிக் குவித்த மணல் மேட்டில் வெயிலுக்கு நிழல் தர ஒரு குடிசை. பரமசிவத்தின் கொலு மண்டபமும் அதுதான். குடிசையின் நான்கு புறமும் துருத்திக் கொண்டிருக்கும் மூங்கில் நுனியில் எப்போதும் யாருடைய ஈர வேஷ்டியாவது காய்ந்து கொண்டிருக்கும். பரமசிவத்தின் கொலு மண்டபத்துக்குள் கள்ளிப் பலகையிலான ஒரு பெட்டியில் சவுக்காரம், சாம்பிள் சைஸ் வாசனைச் சோப்பு- சீயக்காய்த் தூள் பொட்டலம் என்னெண்ணெய்-பல்பொடி-எல்லாம் விற்பனைக்காக உண்டு. வருகிறவர்களின் பொது உபயோகத்துக்காகத் தேசிய மயமாக்கப்பட்ட சீப்பு ஒன்றும், தண்ணீர் பட்டுப் பட்டு ரசமழிந்த கண்ணாடியும் இலவச விநியோகத்துக்குரிய விபூதி, குங்குமமும் அந்தக் கொலு மண்டபத்தில் உண்டு. தேமல் விழுந்த தோல் மாதிரி இடையிடையே ரசமழிந்த அந்தக் கண்ணாடியில் பார்ப்பதால் முகத்துக்கு ஏற்படுகிற விகாரத்தைப் பழகினவர்கள் சமாளிக்க முடியும். இவ்வளவுக்கும் மேல் ஒரு மூலையில் குடி தண்ணீருக்காகப் பானை டம்ளரும் உண்டு. ஓடுகால் தண்ணீரைக் குடிக்க முடியாதா என்று நீங்கள் சந்தேகப் படலாம். டாக்டர்கள் சில மருந்துகளை உடலின் 'வெளிப்புற உபயோகத்துக்கு மட்டும்'-என்று குறிப்பிட்டுக் கொடுப்பார்களல்லவா? பரமசிவத்தின் ஓடுகால் தண்ணீரும் இந்த ரகத்தைச் சேர்ந்ததுதான்.

'குளிப்பதற்கும் துணி துவைப்பதற்கும் சேர்ந்து அரை அணா. துணி துவைக்க மட்டும் காலணா. மாதாந்திர வாடிக்கையாளுக்கு ஒரு ரூபாய்.' - இது பரமசிவத்தின் கட்டண விகிதம். நாலைந்து வாளிகளும் தேய்க்கிற கற்களும் பரமசிவத்தின் ஓடுகாலில் உண்டு. தேய்க்குமிடத்துக்கு நிழல் தர ஒரு கொடுக்காப்புளி மரமும் உண்டு.

பரமசிவத்தின் நாட்படி வருமானம் முக்கால் ரூபாயிலிருந்து ஒன்னேகால் ரூபாய் வரை கிடைக்கும். மாதாந்திர வாடிக்கைக்காரர்களிடமிருந்து மாத முடிவில் வரவு மொத்தமாகப் பத்துப் பதினைந்து ரூபாய்க்குக் குறையாது. மயானத்திலிருந்து திரும்புகிற கூட்டம் ஏதாவது 'சான்ஸ்' ஆக அவனுடைய ஓடுகால் பக்கம் வந்துவிட்டால் திடீர் யோகமாய் ஒன்னரையிலிருந்து இரண்டு ரூபாய் வரை உபரி வருமானம் கிடைக்கும். இந்த உபரி வருமானத்தை எதிர்பார்த்துத் தினம் யாராவது செத்துப் போய்க் கொண்டிருக்க வேண்டுமென்று அவன் காத்திருப்பதும் நியாயமில்லை. அப்படியே யாராவது செத்துப் போனாலும் அந்தப் பகுதியில் உள்ள ஏராளமான ஓடுகால்காரர்களில் எவருக்கு வேண்டுமானாலும் அந்த வருமான யோகம் அடிக்கலாம். மயானத்திலிருந்து திரும்புகிற கூட்டத்தைக் கவர்வதற்கு அங்கிருக்கும் ஓடுகால்காரர்களிடையே எப்போதும் அடிபிடிதான். எல்லாச் சாவுக்கும் அவ்வளவு கூட்டம் வருமென்று சொல்ல முடியாது. பிறந்ததும் பலருக்குத் தெரியாமல், சாவதும் பலருக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லாமல் சாகிறவர்கள் எத்தனை பேர்? அப்படிப்பட்ட வகையிலும் ஓடுகால்காரர்களுக்கு அதிக லாபம் இல்லையே! அந்த விதமான மனிதர்களால் உலகத்துக்கே என்ன இலாபம் என்று தெரியாதபோது பரமசிவம் என்ன இலாபத்தை எதிர்பார்க்க முடியும்?

பரமசிவத்தின் ஓடுகாலில் இரண்டு 'காம்ப்ளி'மெண்டரி டிக்கெட்டுகளுக்கும் நிரந்தரமாக இடம் உண்டு. ஆரப்பாளையம் ரோட்டில் இருக்கும் பிரபலமடையாத ஏதோ ஒரு பிள்ளையார் கோவிலில் மணியடிக்கிற முத்துப் பண்டாரத்துக்கும், பரமசிவத்துக்குக் குடிசை போட்டுக் கொள்ள இடம் (ஓடுகால் குடிசை அல்ல, கரைமேல் அவன் குடும்பம் வசிக்கிற குடிசை) கொடுத்திருக்கிற பங்காரு நாயக்கருக்கும், எப்போது வந்தாலும் ஓடுகாலில் குளிக்க ப்ரீபாஸ் உண்டு. அந்தி சந்தி வேளைகளில் அவன் கண்களை ஏமாற்றிவிட்டு 'டிக்கட்' வாங்காமல் குளித்துப் போகிற 'வித் அவுட்' ஆட்களும் உண்டு.

பரமசிவத்துக்குப் பெரிய குடும்பம். வயதான தாய், தந்தை, நோயாளி மனைவி, வரிசையாக மூன்றும் பெண் மக்கள். இரண்டு பெண்களுக்குக் கட்டிக் கொடுக்கிற வயசு. நெசவுத்தொழிலில் பட்டுப் போய் ஓடுகாலில் இறங்கியவன் அவன். தெற்குக் கரையில் பிட்டுத் தோப்புக்கும் சிறிது தொலைவு மேற்கே தள்ளிப் பங்காரு நாயக்கர் குடிசை போட்டுக் கொள்ள விட்டிருந்த இடத்துக்கு மாச வாடகை எட்டு ரூபாய்.

பரமசிவத்துக்கு ஓடுகாலில் தண்ணீர் ஊறுவதற்குப் பதில் அவ்வளவும் பணமாக ஊறினாலும் நல்லதுதான். வைகையில் வெள்ளம் வருவது அதிசயமானாலும் மழைக் காலத்தில் அணைத் தண்ணீரோ அபூர்வமாக முல்லைக்கால் தண்ணீரோ திறந்து விட்டுவிடுவார்கள். முழங்கால் அளவு தண்ணீர்தான் பாயும். ஆனாலும் ஓடுகால் மூழ்கிவிடும். மலையாளத்துக்காரன் பாண்டிக்காரனுக்குக் கொடுத்திருக்கிற சீதனமான முல்லைப் பெரியாற்றுத் தண்ணீர் 'வழி விடு வழிவிடு' என்று சீறிக் கோபித்துக் கொண்டு வருகிற மாதிரி சிவந்து பொங்கி வரும். தண்ணீர் நின்ற பின் மணலில் புதைந்து போயிருக்கும் தேய்க்கிற கற்களைத் தேடி எடுப்பது பெரிய காரியம். அப்படித் தேடி எடுக்கிற போது ஓடுகால்காரர்களுக்குள் எல்லைப் பிரச்சினைகளும் போர்களும் உண்டாவது இயல்பு.

இரவு நேரங்களில் ஓடுகாலுக்குக் காவலில்லாவிட்டாலும் காவலிருப்பதுபோல் ஓர் 'அத்து' உண்டாக்க வேண்டும். இல்லாவிட்டால் ஜட்காக் குதிரைகளைக் கொண்டு வந்து குளிப்பாட்டி ஓடுகாலை நாற அடித்துவிடுவார்கள். இப்படிச் சொல்வதனால் ஜட்காக் குதிரை குளிப்பாட்டாமல் இருக்கிற பட்சத்தில் தண்ணீர் நாறாமல் இருக்குமா என்று உத்தரவாதம் கேட்கப்படாது. ஏதோ குறிப்பிட்டுக் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு நாற்றம் இருக்கத்தான் செய்யும். பஞ்சாலையில் உழைத்து உழைத்துப் பஞ்சடைந்து போய்க் கொண்டிருக்கிற அந்தப் பிரதேசத்து மக்களுக்கு நாற்றமும் பழகிப் போன உணர்வுதான். எப்போதாவது அருமையாக நுகர்

கிற காரணத்தால் வாசனைதான் நாற்றத்தைப் போல் அவர்களுக்கு உறுத்தும்.

பரமசிவம் பத்துத் தறிகாரர்களை வைத்து வேலை வாங்கிக் கொண்டிருந்த பெருமை பழங் கனவாகப் போய் விட்டது. பஞ்சம் பிழைக்கக் குடி பெயர்ந்து ஊர் பெயர்ந்து நட்டாற்றில் வந்து நின்றாயிற்று. ஓடுகாலுக்காக மட்டுமல்லாமல் வாழ்க்கையிலேயே நட்டாற்றுக்கு வந்து நாதி யில்லாமல் நின்றாயிற்று. மனிதர்கள் பதிந்து வாழ்வதற்கு ஏற்ற வசதிகள் இருந்ததனால்தான் ஊர்களுக்குப் 'பதி' என்று பெயர் வைத்தார்களாம். இந்தக் காலத்தில் நடுத்தரமான மனிதன் எந்த ஊரிலும் பதிந்து வாழ முடிவதில்லையே. சவக் குழியைத் தவிர நிலையாகப் பதிகிற இடம் வாழும் போது இல்லைதான். அதற்காக வாழும் போதே சவக் குழியைத் தோண்டிக் கொண்டு விட 'முடியுமா, என்ன? அப்படித் தோண்டிக் கொள்வதற்குத் தெரியாததாலோ அல்லது அதற்குப் பதிலாகவோ ஊர் விட்டு ஊர் வந்து ஓடுகாலைத் தோண்டிக் கொண்டு உட்கார்ந்து விட்டான் பரமசிவம் என்கிற முன்னாள் நெசவாளி. அவன் நம்பிய தொழில் அவனை நட்டாற்றில் கைவிட்டு விட்டாலும் நட்டாறு அவனைக் கைவிடாமல் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது. 'ஆற்றுப் பெருக்கு அற்று அடிசுடுகிற நாளிலும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்' வைகை அல்லவா?

பாவு போட்டிருக்கிற நூலுக்குக் கஞ்சி தெளிக்குமுன் பலபல வென்று விடிகிற நேரத்துக்கு எதிர்த்தாற் போலிருந்த உடுப்பி சங்கர பவனில் முறுகல் தோசையும், காப்பியும் சாப்பிட்டு விட்டுத் திரும்பிய நாட்களை இப்போது நினைத்தாலும் சுகமாகத்தான் இருக்கிறது. செல்வாய்ப் பேட்டையையும் உடுப்பி சங்கர பவனையும், பத்துத் தறிகள் வைத்து ஆண்ட பவிஷையும் இனிமேல் நினைத்து என்ன பயன்? நினைவுக்குள்ளேயே துருப்பிடித்துப் போனவற்றை மேலும் துருப்பிடிக்கச் செய்வதைத் தவிர வேறு பயனில்லை.

அரக்கன் வாய் திறந்து அலறுவது போல் சங்கு ஊதும் மாபெரும் பஞ்சாலைகள் உண்டான பின்பு பரமசிவனைப் போல் சிறிய நெசவாளிகள் என்ன செய்ய முடியும்? அப்படிப் பட்ட பஞ்சாலைகள் ஏதாவதொன்றில் குடும்பத்தோடு சரணடையலாம் என்றுதான் மீனாட்சிபட்டணத்துக்கு வந்தான் பரமசிவம். நவீன எந்திரங்கள் வந்து சேர்ந்து மனித எந்திரங்களைவிடச் சுறுசுறுப்பாக வேலை செய்யத் தொடங்கியதனால் எங்கே பார்த்தாலும் ஆள் குறைப்பு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள். பரமசிவம் நினைத்துக் கொண்டு வந்தது போல் மதுரையில் வேலை காய்த்துத் தொங்க வில்லை. குடும்பத்தோடு சில நாட்கள் தெருவில் நின்றான். அப்புறம்? அப்புறம் என்ன? தெரிந்ததுதானே? தெருவில் நிற்காமல் ஆற்றில் போய் நின்றான்.

பரமசிவம் வைகையில் இறங்கி விட்டான். இப்போது அவனை நம்பிப் பலபேர் வைகையில் இறங்கிக் கொண்டிருக்கிறார்கள். குளிப்பதற்காகத்தான். உள்ளூர் ஓடுகால்காரர்களுக்கு அவன் மேல் வயிற்றெரிச்சல் கிளம்பியது. தொழில் பொறாமை என்பது உலகத்தில் இல்லாத இடம் ஏது? அது வைகை ஆற்று மணலிலேயும் இருந்தது. ஒரே உலகம், யுனிவர்ஸல் ஹியுமானிடி என்று வெண்டல் வில்கியும், உலகத்துத் தத்துவக்காரர்களும் அடித்துக்கொள்வதைப் பற்றிப் பிட்டுத்தோப்பின் கரையில் இருப்பவர்கள் அதிகமாகக் கவலைப்படுவது கிடையாது. அங்கே ஒரே தத்துவம்தான் உண்டு. அதுதான் வயிற்றுப் பசி. அதன் அடிப்படையில் வாழ்க்கைப்போட்டி. வடக்கு, தெற்கு, திருநெல்வேலிக்காரன், மதுரைக்காரன், சேலத்துக்காரன் என்கிற எல்லாவிதமான பிரதேச மனப்பான்மையும் இருந்து பரமசிவத்தைத் தொல்லைக்குள்ளாக்கியது.

பரமசிவம் தன்னைத் தவிர ஆறு பேர்கள் அடங்கின குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய கவலையுடன் அக்கம் பக்கத்து ஓடுகால்காரர்களின் பொறாமைக்கும் சேர்த்துக் கவலைப்பட நேர்ந்தது.

அப்போது ஆற்றில் கால் தண்ணீர் விடும் காலத்தின் கடைசிப் பருவம். கடந்த இரண்டு மூன்று வாரங்களாக ஆற்றில் தண்ணீர் ஓடிய பின் மறுபடியும் ஓடுகால்களின் அவசியம் ஏற்பட்டிருந்தது.

எல்லாரையும் போலப் பரமசிவமும் தன்னுடைய வழக்கமான இடத்தைத் தேடிப் புதையுண்டு கிடந்த கற்களை எடுத்துப் போட்டு ஓடுகால் தோண்டினான். நீரோட்டத்தில் சாய்ந்து போயிருந்த கொடுக்காப் புளி மரத்துக்கு முட்டுக் கொடுத்து நேரே நிறுத்தினான். சர்வே எல்லைக் கல் போல் அவனுடைய ஓடுகாலுக்கு அந்த மரம் அடையாளம்.

பிட்டுத் தோப்பும், அதிலிருக்கிற மண்டபமும் ஆவணி மாதம் அந்தத் திருவிழா நடக்கிற நாளில்தான் பக்தர்களுடைய கூட்டத்துக்கு உரியது. மற்ற நாட்களில் போது போகாமல் மூணு சீட்டு விளையாடுகிறவர்களும் குஸ்திப் பள்ளிக்கூட வீரர்களும் தனி அரசோச்சுகிற இடம்தான். சில மாலை நேரங்களில் பொதுக்கூட்டமும் நடக்கும்.

பரமசிவத்தின் ஓடுகாலுக்கு எதிர்த்தாற் போல் பாண்டியன் குஸ்திப் பள்ளிக்கூடம் என்று ஒரு 'கோதா' இருந்தது. காலையிலும், மாலையிலும், அங்கே குஸ்திக்காகப் பத்துப் பன்னிரண்டு முரட்டு இளைஞர்கள் வருவார்கள். 'பாண்டியன்'-என்பவன்தான் குஸ்தி சொல்லிக் கொடுக்கிற வஸ்தாது. பாண்டியனும், அவனைச் சேர்ந்த ஆட்களும் பெரிய வம்புக்காரர்கள் என்பது பரமசிவத்துக்குத் தெரியும். குஸ்திப் பள்ளிக்கூடத்து ஆட்களே கோதாவையொட்டி ஆற்றில் தங்கள் சொந்த உபயோகத்துக்கு ஓடுகால் ஒன்று தோண்டியிருந்தார்கள்.

கால் நீர் ஓடிய சில வாரங்களுக்குப் பின் எல்லா ஓடுகால்களும் தோண்டப்பட்டபோது குஸ்திப் பள்ளிக்கூட ஓடுகால் மட்டும் தோண்டப்படவில்லை. அதைத் தவிர்த்துப் பார்த்தால் அந்த இடத்தில் அருகே இருந்தது பரமசிவத்தின் ஓடுகால்தான்.

அன்று காலை குஸ்தி முடிந்ததும் பாண்டியனும், இன்னும் பத்துப் பன்னிரண்டு குட்டிப் பயில்வான்களும், பரமசிவத்தின் ஓடுகாலில் வந்து அவனிடம் ஒரு வார்த்தைகூடக் கேட்காமலே குளிக்க ஆரம்பித்தார்கள். போதும்

போது ஏதாவது சொல்லி விட்டுப் போவார்கள், அல்லது காசு கொடுத்து விடுவார்கள் என்று எதிர்பார்த்துப் பேசாமல் இருந்துவிட்டான் பரமசிவம். ஆனால் அவன் எதிர்பார்த்தபடி அவர்கள் காசு கொடுத்து விட்டுப் போகவுமில்லை; நன்றி கூறிவிட்டுப் போகவுமில்லை. அட்டகாசமாக வந்து குளித்துவிட்டுப் பேசாமல் போய் விட்டார்கள்.

அன்றைக்குச் சாயங்காலமும் அப்படியே நடந்தது. 'எத்தனை நாளைக்கு இப்படி நடக்கப் போகிறது? தங்களுடைய ஓடுகாலைத் தோண்டிக் கொள்கிற வரைதானே இங்கே வந்து இப்படிச் சிரமிக்கப் போகிறார்கள்? தொலையட்டும்' என்று இரண்டு நாளைக்குப் பொறுமையாக இருந்து விட்டான் பரமசிவம். அவன் பொறுமையாக இருந்ததற்குக் காரணம் வீண் கலகத்தை உண்டாக்க வேண்டாம் என்பதுதான்.

'அத்தனை பேரும் உள்ளூர்க்காரர்கள். ஆள் கட்டும், உடற்கட்டும் உள்ளவர்கள். அவர்களைப் பகைத்துக் கொள்வது நல்லதல்ல' என்று பரமசிவம் விட்டுப் பிடித்துக் கொண்டு வந்தான். எவ்வளவு நாளைக்கு விட்டுப் பிடிக்க முடியும்? விட்டுப் பிடிக்க முடியாத காலவரையறைக்குத் தொடர்ந்தது இந்த வம்பு.

நாள் தவறாமல் காலையும், மாலையும், தடியன் தடியனாக இந்தக் குஸ்திப் பள்ளிக்கூடத்து ஆட்கள் வந்து குளிக்க ஆரம்பித்ததனால், பெண்டு பிள்ளைகளும், சற்றே நாகரிகமான ஆட்களும், பரமசிவத்தின் ஓடுகாலுக்கு வருவதை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். வாடிக்கைகள் குறைய ஆரம்பித்தன.

''என்ன ஐயா, முண்டன், முண்டனு எவன் எவனோ வந்து தண்ணீரைக் கலக்குகிறான். பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கிறீரே. சின்னஞ் சிறிசுகள் குளிக்கிற இடத்துலே இப்படிச் செய்யலாமா? நாளைப் பின்னே இந்த ஓடுகால் பக்கம் யாராச்சும் வருவார்களா?'' என்று வயது மூத்த ஆச்சிக் கிழவி ஒருத்தி அன்று காலையில் பரமசிவத்திடம் அங்கலாய்த்துக் கொண்டு போனாள். ஆனால் பரமசிவம் யாரிடம் போய் அங்கலாய்த்துக் கொள்வான்?

பயில்வான்களுடைய குளிப்பு என்றால் காக்கை முழுக்குப்போல் அல்ல. குஸ்தி போட்டு விட்டு வியர்வை மினுமினுக்கும் உடம்போடு வந்தால் தண்ணீரில் அமுங்கிக் கிடக்கிற சுகத்தைக் குறைவாகவா அநுபவிக்க விரும்புவார்கள்?

உஸ்தாது (வாத்தியார்) பயில்வானாகிய பாண்டியனோ சரியான மத யானை. ஓடுகாலில் சரிபாதி இடத்தில் துளைந்து நீராட வேண்டும் அவனுக்கு. தன்னோடு போகாமல் சீடப் பிள்ளைகளையும் அவன் கூட்டிக் கொண்டு வந்தான்.

காலையிலும், மாலையிலும் இந்தக் குஸ்திப் பள்ளிக்கூட ஆட்கள் ஓடுகாலில் இறங்கிக் கொட்டமடிக்கிற போது காசு கொடுத்துக் குளிக்க வருகிறவர்கள் பரமசிவத்தின் ஓடுகால் பக்கம் எட்டிப் பார்க்கத் தயங்கினர்.

குறிப்பாகச் சொல்லிப் பார்த்தான் பரமசிவம். பாண்டியன் கும்பல் புரிந்து கொண்டு விலகிப் போகிற வழியாயில்லை. பாண்டியனிடமே நேரில் சொல்லவும் முடியாமல்,

மெல்லவும் முடியாமல் திணறினான் பரமசிவம். தர்மசங்கடமான நிலை. இதில் தர்மம் பாண்டியனுக்கு. சங்கடம் பரமசிவத்துக்கு.

''நீங்கள்ளாம் ரொம்பப் பெரியவங்க. நான் ஏழை. இதை வச்சுத்தான் பொழைப்பு நடக்கணும். வாடிக்கைக்காரங்க எல்லாம் ஒதுங்கறாங்க. எனக்குக் கட்டுபடியாகலே'' என்று பாண்டியனிடம் நேரில் கூறியும் பார்த்தான் பரமசிவம்.

''நீ என்னமோ சேலத்துலேருந்து வர்றப்பவே இந்த எடத்துக்குப் பட்டா எழுதி வாங்கிட்டு வந்த மாதிரியில்லே பேசப் பேசறே? வைகைத் தண்ணிலே குளிக்கிறதுக்கு நீ என்ன தாணுவதி?'' என்று துடுக்காக எதிர்த்துக் கேட்டான் பாண்டியன். நம்பிக்கையோடு மேலும் பேச்சைத் தொடர்ந்தான் பரமசிவம்.

''ஐயா! அதுக்குச் சொல்லலே. தண்ணி ஒண்ணும் நீங்க குளிச்சதாலே குறைஞ்சிடாது. ராவுலே எட்டு மணிக்கு மேலே நீங்க வந்து எத்தினிவாட்டிக் குளிச்சாலும் நான் ஏன்னு கேக்கப் போறதில்லே. ஆனும், பொண்ணும் சிறிசும் பெரிசுமா, நாலு நிறைய வாடிக்கைக்காரங்க குளிக்க வர்றப்போ நீங்கள்ளாம் இருந்தா வரதுக்கே கூசுறாங்க.... சங்கோஜப்படறாங்க. நானும் இதைக் கொண்டுதான் பொழைக்கணும்.''

''அட சரிதான் போய்யா! மகா பிழைப்பாம், பிழைப்பு. நாங்க அப்பிடித்தான் வருவோம். நல்லா முங்கிக் குளிப்போம். யாரும் எங்களைத் தடுக்க முடியாது. முடியுமானால் நீ செய்யிறதைச் செஞ்சுக்கோ....''

குஸ்திக்குச் சவால் வருகிற மாதிரிப் பதில் வந்தது பாண்டியனிடமிருந்து. நியாயம் பிறக்குமென்று நம்ப இடமே இல்லை.

இதற்கப்புறம் பரமசிவம் மேலே பேசுவதை நிறுத்திக் கொண்டான். மறுநாள் அருகில் இருக்கிற வேறு ஓடுகால்காரர்கள் நான்கு ஐந்து பேரிடம் போய் இந்த விஷயத்தில் தனக்குத் துணையாயிருந்து ஒத்துழைத்து நியாயம் வாங்கித் தரவேண்டுமென்று கேட்டான். உள்ளூர் ஓடுகால்காரர்களாகிய அவர்களுக்கெல்லாம் ஏற்கனவே பரமசிவத்தின் மேல் பொறாமை. அவனைப் போல் ஓர் அயலான் அங்கே ஓடுகால் போட்டிருப்பதே அவர்களுக்குப் பிடிக்காத போது ஒத்துழைக்க எப்படி முன்வருவார்கள்? 'இது உன் சொந்த விவகாரம். எங்களிடம் வராதே' என்று மறுத்து விட்டார்கள். பரமசிவத்துக்கு முகத்தில் அடித்தாற்போல் ஆயிற்று.

நாளுக்கு நாள் விவகாரம் முற்றியது. பாண்டியன் கும்பல் முன்னைக் காட்டிலும் அதிகமாகப் பரமசிவனுக்கு இடைஞ்சல் செய்ய ஆரம்பித்தது. ஓடுகாலில் உள்ள வாளிகளைச் சொல்லாமல் கொள்ளாமல் வேறு காரியங்களுக்குத் தூக்கிக் கொண்டு போவது, வேட்டி துவைப்பதற்கென்று தனியாக இருக்கிற உறையில் வேட்டி துவைக்காமல், குளிப்பதற்குத் தேக்கியிருக்கும் நீரில் வேட்டி துவைப்பது-என்று வம்புகள் வளர்ந்தன. பாண்டியனுக்கு யாராவது 'ஸ்குரு' ஏற்றி விட்டிருப்பார்களோ என்றுகூடப் பரமசிவத்துக்குச் சந்தேகமாக இருந்தது. எந்தத் தொழிலானாலும் அருகிலுள்ளவர்களின் அநுதாபம் இல்லாமல் போனால் ஒன்றும் நல்லபடி நிறைவேற்ற முடியாது. தன்மேல் அவர்களெல்லாம் பகைத்துக் கொள்ளும் விதத்தில் பரமசிவம் அவர்களுக்கு மனத்தாலும் கெடுதல் நினைத்ததில்லை. ஆனால் அவர்கள் அவனுக்குக் கெடுதல் நினைத்தனர்; செய்தனர். செய்வித்தனர். அது இலைமறை காய் மறைவாக அவனுக்கே புரிந்தது.

ஆவணி மாதத்தில் ஒரு முன்னிரவு. பௌர்ணமிக்கு இன்னும் இரண்டு நாட்கள் தான் இருப்பதால் முழுமையை நெருங்கிக் கொண்டிருக்கும் நிலவு மேகச் சிதறல்களே இல்லாத வானத்தில் யாரும் எழுதாக் கவிதையாய் விளங்கியவாறு நகர்ந்து கொண்டிருந்தது. வையையாற்று மணல் வெளியும் கரை மேட்டில் தென்னை மரக் கனவுகளும் கோலவெறியூட்டும் கொள்ளை எழில் சுமந்து தோன்றின. பிட்டுத் தோப்புக்குள் மண்டபத்தின் முன்னால் பந்தல் போட்டுக் கொண்டிருந்தார்கள். நாளைக்குப் பிட்டுக்கு மண் சுமந்த திருநாளாயிற்றே. இதே வேளையில் நாளைக்கு இந்த இடம் இப்படியா இருக்கும்? 'ஜே ஜே' என்று கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டிராதா? குடை ராட்டினமும், கடைகளுமாக மணல் வெளி கலகலவென்று கலியாண வீடுபோல் இருக்குமே! நாளைக்கு எப்படி இருந்தால் என்ன? பரமசிவத்தைப் பொறுத்த வரை இன்றைக்கு நிலைமை பட்டினி. வீட்டில் எல்லோரும் அரைப் பட்டினி என்றால் அவன் முழுப் பட்டினி. ஓடுகாலில் வருமானமில்லை. மாலை நாலரை மணி வரையில் கிடைத்திருந்த சம்பாத்தியம் ஆறே முக்கால் அணா. அதை வீட்டுப்பாட்டுக்காகக் கொடுத்தனுப்பியிருந்தான். மூத்த மகள் வந்து சிறிது நேரத்துக்கு முன்தான் வாங்கிக் கொண்டு போயிருந்தாள். இன்று அவன் இவ்வளவு நேரத்துக்கும் மேல் இருட்டில் காத்துக் கொண்டிருந்தது ஒரு பயனை எதிர்பார்த்துத்தான்.

எதிரே வடகரையில் மயானத்துக்கு இரண்டு மூன்று கூட்டம் அடுத்தடுத்துப் போயிருந்தது. சிறிது நேரத்தில் ஒன்றன் பின் ஒன்றாக அந்தக் கூட்டங்கள் திரும்பிக் குளிக்க வரலாம் என்ற நைப்பாசையில் பசியோடு காத்துக் கிடந்தான் பரமசிவம். மூன்றில் ஏதாவது ஒரு கூட்டம் தன் ஓடுகால் பக்கம் சாய்ந்தாலும் சுலபமாக இரண்டு ரூபாய் சம்பாதித்து விடலாமே என்ற நம்பிக்கையே இழுத்து உட்கார்த்தி யிருந்தது. அப்போது குஸ்திப் பள்ளிக்கூடத்திலிருந்து சிரிப்பும் அரட்டையுமாக ஒரு ஜமா அட்டகாசத்தோடு வருவதைப் பார்த்துப் பரமசிவம் அதிர்ச்சியடைந்தான். திருவிழாக்காலமாகையால் அதிக நேரம் குஸ்தி நடத்திவிட்டுக் குளிக்க வந்து கொண்டிருந்தது பாண்டியன் குழு.

அந்தக் குழுவினர் வழக்கம்போல் ஓடுகால் உரிமையாளனாகிய பரமசிவத்தை இலட்சியம் செய்யாமல் குளிக்க இறங்கினார்கள். ஓடுகால் கரையில் குடிசைக்குள்ளே மண்ணெண்ணெய்க் காடா விளக்கின் கரிப் புகையோடு கூடிய சுடர் காற்றில் நடுங்கிக் கொண்டிருந்தது போலவே பரமசிவத்தின் உணர்ச்சியும் இந்த அநியாயத்துக்காகச் சில விநாடிகள் கொதித்து நடுங்கி எப்போதும் போலவே உள்ளுக்குள் ஒடுங்கி ஓய்ந்து விட்

டது. பாண்டியன் ஆட்களில் சிலர் தண்ணீரில் இறங்கிக் குளித்தும் இன்னும் சிலர் வாளிகளை எடுத்துக் கொண்டு தோய்க்கும் கற்களை ஆக்கிரமித்தும், முழு ஓடுகாலையும் தங்கள் ஆதிபத்தியத்தில் வைத்திருந்த சமயத்தில் இருபது முப்பது மனிதர்கள் அடங்கிய கூட்டம் மயானத்திலிருந்து திரும்பியது.

''ஐயா வாங்க....தண்ணி சுத்தமா வச்சிருக்கேன். காலையிலே இறச்சப் பெறவு ஊறினது'' என்று அந்தக் கூட்டத்தை வரவேற்றான் பரமசிவம்.

அவர்களும் அவன் ஓடுகாலை நாடியே வந்தார்கள். ஆனால் அருகில் வந்ததும் மனம் மாறி, ''இதென்னப்பா, ஆட்கள் நிறையக் குளித்துக் கொண்டிருக்கிறார்கள். வாளி ஒன்று கூடக் காலியாக இல்லை'' என்று சொல்லி விட்டுப் பக்கத்து ஓடுகாலுக்குப் போய்விட்டார்கள். பெரிய கிராக்கி கை நழுவிப் போன ஏமாற்றத்தில் பரமசிவத்துக்கு அசாத்தியக் கோபம் மூண்டது.

''ஏனய்யா....நீங்களெல்லாம் மனிசங்க தானா? உங்களுக்குச் சூடு, சொரணை, எதிலுக்கும் கொஞ்சமாவது இருக்கா? இப்படி எம் பொழைப்பைக் கெடுக்கிறீங்களே. மானமுள்ளவங்களானா வாளியைக் கீழே போட்டிட்டு வெளியேறுங்க....''

''யாரைப் பார்த்துடா நாக்கு மேலே பல்லைப் போட்டு இப்படிக் கேக்குறே? உங்க பாட்டன் வீட்டு ஆறா இது?'' -பாண்டியனும் அவன் ஆட்களும் பரமசிவத்தைப் பதிலுக்குக் கண்டபடி பேசிவிட்டார்கள். இரண்டு பக்கமும் வார்த்தை தடித்து விட்டது.

வேடிக்கை பார்க்கக் கூட்டமும் கூடி விட்டது. பக்கத்திலிருந்த மற்ற ஓடுகால்காரர்களுக்குக் குஷி பிறந்து விட்டது. தங்களுக்குப் பிடிக்காதவன் வம்பில் மாட்டிக் கொண்டால் குஷி பிறக்காதா பின்னே? அவ்வளவு பேரும் பாண்டியன் பக்கம். பரமசிவம் தனி ஆள். எல்லாரும் சேர்ந்து கொண்டு பரமசிவத்தை அழ அழப்படுத்தினார்கள். பரமசிவமும் மனிதன்தானே? அவனுக்கு மனம் குமுறியது. கண் பஞ்சடைகிற பசி வேறு. வயிறும் மனமும் பற்றி எரிந்தன.

''பிள்ளை குட்டிக்காரனை இந்தப் பாடு படுத்துறீங்களே....இது அடுக்குமா?.... நீங்க எல்லாரும் இப்பிடிப் போயிடணும்'' என்று கண் சிவக்க உதடு துடிக்கக் கீழே குனிந்து ஒரு கை மண்ணை வாரிப் பாண்டியன் முகத்துக்கெதிரே தூற்றினான் பரமசிவம்.

''கொழுப்பைப் பாருடா ராஸ்கலுக்கு! எந்தக் காட்டுலே இருந்தோ பஞ்சம் பிழைக்க வந்த பயல் மண்ணை வாரித் தூத்தறான். கட்டி வச்சு உதைங்கடா....சொல்றேன்'' என்று சொல்லிக் கொண்டே பக்கத்திலிருந்த கொடுக்காப்புளி விளார் ஒன்றை ஒடித்துக் கொண்டு பரமசிவத்தின் மேல் பாய்ந்தான் பாண்டியன். கோபம் கிளம்பி விட்டால் அவனுக்குக் கண்மண் தெரியாது.

சுளீர், சுளீர் என்று எலும்பும் தோலுமான அந்தப் பரமசிவத்தின் உடம்பை விளார் உரிக்கிறது. பரமசிவத்தின் வாயிலிருந்து, ''பாவி கொல்றானே....கேட்பாரில்லையா.. ஐயோ....அப்பா....'' என்ற அலறல்... 'பாண்டியனுக்கோ கொலை வெறி. விளார் ஒடிகிற மட்டும் பிச்சு உதறி விட்டான். பரமசிவம் உடம்பில் குருதி கசியும் கோடுகள்.

''தெய்வமே! நீ இந்த இடத்துலே பிட்டுக்கு மண் சுமந்தது நிசமானா நீயே இவங்களைக் கேளு'' என்று அலறிக் கொண்டே சுருண்டு விழுந்தான் பரமசிவம். பயங்கரப் பசி. உடம்பும் பூஞ்சை. மூர்ச்சை போட்டது.

ஒடிந்த விளாரை எறிந்தபின் எந்த இடத்தில் படுகிறதென்றும் பாராமல் வலது காலை ஓங்கித் தணியாத வெறியோடு பரமசிவத்தை ஒரு மிதி மிதித்து, ''நாய்க்குப் புத்தி இனிமே வரும். வாங்கடா, போகலாம்'' என்று தன் ஜமாவோடு போய்விட்டான் பாண்டியன்.

மறு நாள் காலை முத்துப் பண்டாரமும், பங்காரு நாயக்கரும் குளிக்க வந்த போது பரமசிவத்தின் ஓடுகால் சுடுகாடு போலிருந்தது. அவனையும் காணவில்லை. பரமசிவத்தின் கிழத் தந்தையும், தாயும், மூன்று பெண்களும் அதே ஓடுகாலில் சேர்ந்து முழுகிக் கொண்டிருந்தார்கள்.

'மடி மேலே வளர்த்தபிள்ளை
மண்ணாயிப் போயிட்டியே'

என்று பரமசிவத்தின் தாய் பிலாக்கணத்தை இழுத்துக் கொண்டு அழுகை பொங்க ஈர உடையோடு நின்றாள். முத்துப் பண்டாரமும் பங்காரு நாயக்கரும் விக்கித்து நின்றார்கள்.

''ஐயா, உம்ம ஊர்லே எம் பையனைக் கொலை பண்ணிப்பிட்டான் ஐயா..பொசுக்கிட்டு வந்து முழுகிட்டிருக்கோம். இங்கே தெய்வம் இன்னும் உண்டுமா? இப்படியே இந்தப் பூமி இடிஞ்சு ஊரையே முழுங்கிடப்படாதா?'' என்று ஆக்ரோஷத்தோடு முத்துப் பண்டாரத்தைப் பார்த்துக் கையைச் சொடுக்கி முறித்தாள் அந்தக் கிழத்தாய். அந்தச் சொடுக்கு முறிகிற ஒலியில் பூமியே முறிவது போலிருந்தது.

அங்கே பக்கத்திலிருந்த வேறு ஆள் ஒருவன் சிறிது தூரம் விலக்கி நடத்திக் கொண்டு போய் முதல் நாள் மாலை நடந்தவற்றை முத்துப் பண்டாரத்துக்கும், நாயக்கருக்கும் சொன்னான். பாண்டியன் மிதித்து விட்டுப் போன மிதி எக்குத் தப்பாய்ப்பட்டுப் பரமசிவம் இறந்து போனதையும் ராத்திரி பன்னிரண்டு மணிக்குக் குண்டுப் பள்ளியிலே வைத்துப் பாண்டியனைப் போலீஸார் கைது செய்து கொண்டு போனதையும் முத்துப் பண்டாரமும், நாயக்கரும் அறிந்தார்கள்.

அங்கே அன்று மாலை பிட்டுத் திருவிழா. பிட்டுத் தோப்பு நிறைய ஜனவெள்ளம். மேலே வானத்தில் நீலப் பட்டுக் கம்பளத்திலே பாற்குடம் சரிந்தது போல நிலா. சிவபெருமான் பிட்டுக்கு மண் சுமக்கிறார், பாண்டியனிடம் பிரம்படி படுகிறார். எல்லாம் பாவனையிலேயே நடைபெறுகிறது. ''பெருமானே! யுக யுகாந்திரங்களுக்கு முன்பு இங்கே அரிமர்த்தன பாண்டியன் உம் மேல் அடித்த பிரம்படி அகில உலகெங்கும் உள்ள ஜீவராசிகள்மேல் பட்டு உறைத்ததாமே! நேற்று இதே இடத்தில் எங்கள் ஏழைப் பரமசிவன்மேல் பட்ட முரட்டுப் பாண்டியனின் அடி ஏன் உமது இருதயத்தில் கூட உறைக்காமல் போய் விட்டது?'' என்று ஒரு மூலையில் நின்று தரிசனம் செய்து கொண்டிருந்த முத்துப் பண்டாரம் மனமுருக எண்ணிக் கண் கசிந்தார்.




## அதிகமான் நெடுமான் அஞ்சி

சேரர் குலத்து அரசுரிமையைப் பெறும் கருத்தில் சகோதரர்களிடையே விளைந்த பெரும் போரில் ஒருவருக்கு வெற்றி கிட்டியது. தோல்வியடைந்தவர் தம்முடைய படை பலத்தைக் கொண்டு தகடூர் என்ற ஊரைத் தம் தலைநகராக்கிக் கொண்டார். அவர் பெயர் அதியமான். அந்தக் குலத்தில் வந்தவன்தான் அதிகமான் நெடுமான் அஞ்சி. இந்த மன்னன்தான் ஔவையாரிடம் மூளா இளமையையும் சாவா நிலையையும் தரும் நெல்லிக்கனி அளித்தவன். வரலாற்றுக் குறிப்புக்களையும், கர்ண பரம்பரைச் செய்திகளையும் இணைத்துச் சுவை ததும்பும் வண்ணம் எழுதப்பட்டிருக்கிறது. பாத்திரங்களின் உரையாடல்களையும் சேர்த்து நூல் சுவை மிகு காவியமாக ஆக்கப்பட்டிருக்கிறது.

ஆசிரியர்: கி. வா. ஜகந்நாதன்; பிரசுரம்: அமுதநிலையம், தேனாம்பேட்டை. சென்னை 18; விலை: ரூ. 1—75.

## விழிக்குந் துணை

திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் கந்தர் அலங்காரத்திலிருந்து ஐந்து பாடல்களை எடுத்துக் கொண்டு இந்நூலில் விளக்கியிருக்கிறார். இராப்பகலற்ற இடத்தில் இருந்து கொண்டு முருக பக்தியில் ஊறித் திளைத்து இந்திரியங்களை வென்று, சொல்லொணாத ஆனந்தத்தைத் தூய்க்கும் அருணகிரிநாதர் தாம் பெற்ற இன்பத்தை மற்றவர்களும் பெற வேண்டும் என்னும் பெரு நோக்கோடு வாழ்ந்த பெருந்தகையாளர். அவரது அநுபூதிப் பெரு வெள்ளம் இந்நூலில் பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. அதைத் தேக்கிப் பருகிப் பயன் பெறுவது முருகன் அடியார்களின் கடமையாகும்.

பிரசுரம்: அமுதநிலையம், தேனாம்பேட்டை, சென்னை — 18; விலை: ரூ. 3.

## மனித தெய்வம்

பிரபல தமிழ் எழுத்தாளர்களான எஸ். ரங்கநாயகி, வீர. பழனியப்பன், ரா. கி. ரங்கராஜன், ஏ. எஸ். ராகவன், பி. எம். கண்ணன், சரோஜா ராமமூர்த்தி, துரோணன் ஆகிய பலர் எழுதிய சுவை நிறைந்த சிறு கதைகள் இந் நூலில் இடம் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு சிறுகதையும் அதனதன் கற்பனையில், கருத்தில், பாத்திர அமைப்பில், எழுதின விதத்தில் உயர்ந்து நிற்கிறது. ஒரே மாதிரி கதையா யில்லாமல், வேறுபட்ட பாணிகளில் மாறுபட்ட அம்சங்களோடு எல்லாக் கதைகளும் அமைந்திருப்பது பாராட்டுக்குரியது.

பிரசுரம் : அமுதநிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை — 18. விலை: 30 காசு.

## சிந்தனையாளர் மாக்கியவெல்லி

"அரசன் ஒருவனுடைய உயிரை எடுத்துவிட எண்ணினால் அதற்குத் தகுந்த காரணம் இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும்." "எந்த அரசனும் தான் எவ்வளவு நியாய விரோதமாக நடந்து கொண்டாலும்....நேர்மை உடையவன் போலக் காட்டிக் கொள்ள வேண்டும்." "தேவைக்குத் தகுந்தபடி நல்லவனாகவும் கெட்டவனாகவும் நடந்துகொள்ளவும் அவன் தெரிந்து வைத்திருக்க வேண்டும்"- பதினைந்தாம் நூற்றாண்டில் இத்தாலியில் வாழ்ந்த மாக்கியவெல்லி இத்தகைய அரசியல் கருத்துக்களைத் தெரிவிக்கிறார். அறம் சார்பற்ற இக்கருத்துக்களை நாம் எதற்கு அறிய வேண்டும் என்று தான் எடுத்த எடுப்பில் தோன்றும். ஆனாலும் மாக்கியவெல்லியின் எழுத்து அரசியல் சாஸ்திரத்தில் பெருத்த எதிர் விளைவுகளை உண்டாக்கிற்று என்பதால், இன்றைய நடைமுறைகளுக்கு அவ்வளவு ஒவ்வாத இந்தக் கருத்துக்களைத் தெரிந்து வைத்துக் கொள்வதிலும் தவறில்லை. தமது கோட்பாடுகளை உறுதிப்படுத்த மாக்கியவெல்லி கடைப்பிடிக்கும் தர்க்கரீதியான வாதமும் ரசிக்கக் கூடியதே. மாக்கியவெல்லியின் அரசியல் கட்டுரைகள் தவிர, அவரது ரசமான ஒரு சிறுகதையும், ரசக் குறைவான ஒரு நாடகமும், சில கடிதங்களும், வாழ்க்கை வரலாறும் இம் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளன.

அறத்தைக் குறித்து அக்கறை செலுத்தாமல் ஆட்சியாளரின் முன்னேற்றத்துக்கான வழிகளையே கூறிய மாக்கியவெல்லியும், "மனிதன் உயிரைக் கூடப் பறிக்கலாம். ஆனால், எந்தக் காரணத்தைக் கொண்டும் அவன் சொத்துக்களை மட்டும் பறிக்கக் கூடாது.....பெரும்பாலான மக்கள் கௌரவத்தைக் காட்டிலும் தங்கள் சொத்துக்களையே பெரிதும் மதிக்கிறார்கள்" என்று கூறியிருப்பது அரசாங்கப் பறிமுதல் சட்டங்கள் நியாயமானவை யல்ல என்பதோடு, முன்னேற்றத்துக்கே ஊறு விளைவிக்கும் என்பதைத் தெளிவு செய்கிறது. ஆசிரியர் : நாரா. நாச்சியப்பன்; வெளியீடு : பிரேமா பிரசுரம், சென்னை—24. விலை : ரூ. 2.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10. Managing Editor, T. Sadasivam.

### இக்கால இல்லங்களிலே ஸர்ப்...

# 'நம்மவர் வாழும் நவீன வழி...'

என்கிறார் பம்பாயிலுள்ள குடும்ப மாது பிரேமா சுந்தர்ஜீ.

'குடித்தனப் பாங்கான பெண்மணிகளைக் கவரும் விஷயங்களுக்கா இன்று குறைவு. எடுத்துக்கொள்ளுங்களேன் ஸர்ப். ஸர்ப் நுரையிடம் ஒப்படைக்கப்படும் துணி என்றால் அதற்கு ஒப்பற்ற வெண்மை' என்கிறார் அவர். ஆம். சுந்தர்ஜீயின் இல்லத்திலே...சட்டை, சேலை முதல் துண்டு, துப்பட்டா வரை எல்லா சலவைப் பொறுப்பையும் ஆற்றி வருவது ஸர்ப்.

உங்கள் வீட்டிலேயும் ஸர்ப் ஒளிவீசட்டுமே! வேலையைப் பாதியாகக் குறைப்பதோடு அதே சமயம் சலவையிலே புதுமை மிளிரும் உன்னத வெண்மையினைக் கொணருகிறது ஸர்ப். எல்லை கடந்த அந்த சலவை வல்லமையினைத் தத்தம் இல்லங்களிலே செயல் படுத்திப் பயனடையும் மாதர்கள் எத்தனையோ பேர். நீங்கள்?




## ஸர்ப் மூலம் உங்களுக்கு வெள்ளைவெளேரென்று சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

SU. 18-X52 TM

